# நாகரீகச் சிற்பிகள்

முதல் பாகம்

எம். ஐ. பாட்ஸ்

தமிழாக்கம் :

போ. ரா. கிருஷ்ணமூர்த்தி





ஓரியன்ட் லாங்மன்ஸ்

# நாகரீகச் சிற்பிகள்



முதல் பாகம்

M. I. பாட்ஸ்

தமிழாக்கம்

B. R. கிருஷ்ணமூர்த்தி, M.A., L.T.,





ஓரியன்ட் லாங்மன்ஸ்
36A, மௌன்ட் ரோட், மதராஸ்-2
பம்பாய் கல்கத்தா புது டில்லி
1962

ஓரியன்ட் லாங்மன்ஸ் லிமிடெட்
ரிஜிஸ்டர்ட் ஆபீஸ் : 17 சித்தரஞ்சன் அவென்யு, கல்கத்தா 13
நிகல் ரோட், பலார்ட் எஸ்டேட், பம்பாய் 1
36-A மௌண்ட் ரோட், மதராஸ் 2
1/24 அஸப் அலி ரோட், புது டில்லி 1
ஸாராபாய் எஸ்டேட், ஷாபூர் ரோட், அஹமதாபாத் 1
17 உட் வீதி, ஷூலே, பங்களூர் 1
கன்பௌண்ட்ரி ரோட், ஹைதராபாத் 1
373/374 நாராயண பேத், லக்ஷ்மி ரோட், பூனு 2
17 நாஜிமுதீன் ரோட், டாக்கா

முதல் பதிப்பு, 1962

Tamil Translation of MAKERS OF CIVILIZATION by M. I. Potts, published by kind permission of Longmans, Green & Co. Ltd., London.



விலை ரூ. 1.60

Printed
on D.C. 28 lbs paper of Indian manufacture
at Nataraja Printers, Nungambakkam, Madras-24.

1516

# முன்னுரை

ஒன்ரு உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்
பொன்ருது நிற்ப தொன்று இல்

என்ருர் வள்ளுவர். இத்தகைய புகழை அடைவதற்குச் செயற்கரிய செயல்களைச் செய்யவேண்டும். எந்தக் காலத்தில் வாழ்ந்தாலும், எந்த நாட்டில் வாழ்ந்தாலும் செயற்கு அரிய செயல்களைச் செய்தால் புகழ் தானே வரும். அப்படி அரிய செயல்களைச் செய்து புகழை ஈட்டிக் கொண்டவர் வரலாறுகள் மாணவர்க்கும் மற்றவர்க்கும் பெரும்பயன் அளிப்பன. பண்டைக் காலத்தில் பல நாடுகளிலும் பெருமையுடன் வாழ்ந்து புகழ் அடைந்தோர் வரலாறுகளைப் பாட்ஸ் என்பவர் 'மேக்கர்ஸ் ஆப் சிவிலிசேஷன்' என்ற தலைப்பில் இரு நூல்களாக எழுதியுள்ளார். அவ்விரு நூல்களின் தமிழாக்கமே 'நாகரீகச் சிற்பிகள்' என்னும் இந்நூல். இந்த நூல் தமிழில் மூன்று தொகுதிகளாக வெளியிடப் படுகின்றது. அவ் வரிசையில் இது முதலாவது தொகுதியாகும்.

இந்தத் தொகுதியும் அடுத்து இதே தலைப்பில் வெளிவர இருக்கும் இரண்டு தொகுதிகளும் பள்ளி மாணவர்க்குத் தமிழ்த் துணைப் பாட நூல்களாகவும் சமூக அறிவு நூல் பாடத்திற்குத் துணை நூல்களாகவும் பெரிதும் பயன்படுவன.

இந்நூல் தொகுதிகளை மாணவர்க்குக் கற்பிக்கும்போது பயன்பட வேண்டும் என்று கருதிச் சில குறிப்புக்கள் கீழே தரப்படுகின்றன :

(1) மாணவர்கள் ஒவ்வொரு பாடத்தையும் ஊன்றிப் படித்து உணர்ந்து இன்புறுமாறு ஊக்குவிக்கப்பட வேண்டும்.

(2) ஒவ்வொரு பாடத்திலும் வந்துள்ள நாடுகள், இடங்கள் ஆகியவற்றை மாணவர்கள் தெளிவாக விளங்கிக் கொள்ளும் முறையில் தேசப் படங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

(3) சில குறிப்பிட்ட கதைகளைத் தேர்ந்தெடுத்து மாண வரைப் படிக்கச் செய்து, அவற்றை வகுப்பில் கூறுமாறு செய்யலாம்.

(4) ஒவ்வொரு கதையிலும் வரும் கதைத் தலைவர் எப்படி புகழ் அடைந்தார், அவருடைய பண்புகள் யாவை என்பவற்றை மாணவர்களோடு விவாதிக்கலாம்.

(5) எடுத்த எடுப்பிலேயே கதையைப் படிக்க மாணவர் களை வற்புறுத்துவதற்கு மாருக முதலில் ஆசிரியர் ஒவ்வொரு கதையையும் கூறிப் பிறகு அதை நூலில் படிக்கச் செய்வது நன்று.

இம்முறையில் இளம் மாணவர்கள் இந்நூல் தொகுதி களைக் கற்ருல், கற்க வேண்டியவற்றைக் கசடறக் கற்ரேம் என்ற மன நிறைவைப் பெறுவதோடு, கற்றதற்குத் தக்கவாறு நிற்கவும் முயல்வார்கள் என்பது உறுதி.

கிறைநான் போல

# பொருளடக்கம்

# 1. ஹம்முரபி (2288-2232)

ஹம்முரபி என்பவர் நெடுங்காலத்துக்கு முன் வாழ்ந்த ஓர் அரசர். அவர் யூப்ரடீஸ் என்ற ஓர் ஆற்றிற்குப் பக்கத்தில் வாழ்ந்து வந்தார். அது பாய்கின்ற நிலத்துக்குப் பிற்காலத்தில் மெசபொடேமியா என்ற பெயர் ஏற்பட்டது. இப்பொழுது அந்த இடத்துக்கு ஈராக் என்று பெயர். மெசபொடேமியா என்ருல் இரண்டு ஆறுகளுக்கு இடையில் உள்ள இடம் என்று பொருள். இந்த நாடு டைக்ரீஸ், யூப்ரடீஸ் என்ற இரண்டு ஆறுகளுக்கு இடையில் இருக்கின்றது.

ஹம்முரபி ஒரு பெரிய அரசர்; அவர் அரசரானபோது அவருடைய நாடு மிகவும் சிறியதாக இருந்தது; மக்களும் மிகுதியாக இல்லே. ஆனுல் அவர் பலவாறு கனவுகள் கண்டு வந்தார். ஒரு பெரிய நாட்டினுக்கு அரசராக வேண்டும்; கணக்கில்லாத—பெருவாரியான—மக்களேக் கட்டியாள வேண்டும்; நீதியோடு நாட்டை ஆளவேண்டும்; தம்முடைய ஆட்சியில் அனேவரும் மகிழ்ச்சியோடும் மன நிறைவோடும் இருக்க வேண்டும் என்றெல்லாம் அவர் கனவுகள் கண்டார். அந்தக் காலத்தில் அமைதியான வாழ்க்கையை எங்கும் பார்க்க முடியாது. ஹம்முரபி தம்முடைய கனவுகளே நனவாக்கத் தொடங்கினுர்.

அவருடைய காலத்தில், டைக்ரீஸ் ஆற்றுக்குப் பக்கத்தில் எலமைட்டுகள் என்ற இனத்தவர் வசித்தார்கள். அவர்கள் அவர் நாட்டு மக்களுக்கு அடிக்கடி தொல்லே கொடுத்தார்கள். ஆகையால் ஹம்முரபி அவர்களோடு சண்டை செய்து அவர்களே நாட்டை விட்டுத் துரத்தினுர்; இவ்விதம் அவர் மெசபொடேமியா நாடு முழுவதற்கும் மன்னர் ஆனுர். பிறகு அவர் வடக்கேயும், மேற்கேயும் படைகளோடு சென்ருர். சிறிது சிறிதாக நாடுகளே யெல்லாம் பிடித்துத் தம்முடைய அரசாட்சியில் சேர்த்துக் கொண்டார். ஆனுல் ஹம்முரபிக்கும்

மற்ற அரசர்களுக்கும் வேறுபாடு இருந்தது. மற்ற அரசர்கள் தங்களுக்குத் தோற்றுப்போனவர்களை அடிமையாக நடத்தினர்கள். ஆனால் ஹம்முரபி அப்படிச் செய்யவில்லை. தமக்குத் தோற்ற அரசர்களுக்கே அவர்களுடைய நாட்டைக் கொடுத்து ஆண்டு வரச் சொன்னர். ஆனல், அவர்கள் மக்களை நேசமாக நடத்தியும், தம்மைத் தலைவனாக மதித்தும் வருமாறு விதித்தார். இப்படியாக அவர் ஒரு பேரரசுக்கு அரசராக விளங்கினர். அவருடைய அரசு வடக்கே கருங்கடல் வரை பரவியிருந்தது; மேற்கே மத்தியதரைக்கடல் வரை நீண்டு இருந்தது.

இந்தப் பெரிய நாட்டை வெல்வதற்கு ஹம்முரபிக்கு முப்பது ஆண்டுகள் பிடித்தன. என்றாலும் இப்படி அவர் பெரிய நாட்டை வென்றதற்காக இப்போது அவரை நாம் நினைக்கவில்லை. ஆனல் இந்த நாட்டைப் பிடித்த பிறகு பன்னிரண்டு ஆண்டுக் காலம் அவர் திறமையாக அதை ஆண்டார் என்பதற்காகவே இன்று நாம் அவரைப் பற்றிப் படிக்கின்றோம்.

ஹம்முரபி தாம் தம்முடைய குடிமக்களின் தந்தை என்று எண்ணினர். அதனல் தம்முடைய மக்கள் மகிழ்ச்சியாக வாழ்வதற்கு என்னென்ன செய்ய முடியுமோ அவ்வளவும் செய்தார். அவர் சிலவற்றை எழுதி வைத்துவிட்டுப் போய் இருக்கிறர். அவற்றிலிருந்தே இவற்றையெல்லாம் நாம் தெரிந்துகொள்ளுகிறோம். இந்தக் காலத்தில் எழுத வேண்டியவற்றைக் காகிதத்தில் எழுதுகிறோம். ஆனல் அந்தக் காலத்தில் காகிதம் இல்லை. ஆகையால் களிமண்ணால் பலகைகள் செய்து அவற்றின்மேல் எழுதினர்கள். இப்படிப்பட்ட களிமண் பலகைகள் மேல்தான் ஹம்முரபியும் எழுதியிருக்கிறர்.

களி மண்ணல் பலகைகள் செய்து அவற்றைச் சிறிது காய வைப்பார்கள். மண் ஈரமாக இருக்கும்போதே மூங்கில் குச்சியைப் பேனவைப் போலச் சீவிவிட்டு, அதனல் எழுதுவார்கள். பிறகு நன்ருகக் காய வைத்து அந்தப் பலகைகளை எல்லாம் நெருப்பில் வைத்துச் சுட்டு விடுவார்கள். அதன்பின் அந்தப் பலகைகளை வேண்டிய இடங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

தம்முடைய மக்கள் வியாபாரத்தில் முன்னேற வேண்டும் என்று ஹம்முரபி மிகவும் விரும்பினர். அதற்கு வேண்டிய

வற்றையெல்லாம் செய்தார். மக்களுடைய வியாபாரம் பெருக வேண்டுமானல், கடிதப் போக்கு வரவு நிகழ வேண்டும். இதற்காக அவர் தபால் முறையை ஏற்படுத்தினர். திருடர்கள் தொந்தரவு மக்களுக்கு ஏற்படாமல் இருக்க, போலீஸ் பந்தோபஸ்தும் செய்தார்.

அவருடைய நாட்டில் வெயில் அதிகமாகக் காயும்; கோடை காலத்தில் நிலம் முழுவதும் வரண்டுவிடும். அதனல் பயிர் பச்சை வளர முடியாது. ஆகையால் அவர் ஆறுகளில் இருந்து பல கால்வாய்களை வெட்டினர். அவைகளின் மூலம் ஆற்றுத் தண்ணீரை வயல்களில் பாயச் செய்தார். இதனல் பயிர்கள் செழுமையாக வளர்ந்தன. இப்படிக் கால்வாய்கள் வெட்டுவது ஹம்முரபி அரசருக்கு மிகவும் விருப்பமான வேலை. அவருடைய கடிதங்கள் எல்லாம் கால்வாய்கள் வெட்டி அமைப்பதைப் பற்றியே கூறுகின்றன. ஒவ்வொரு மனிதனும் கால்வாய்க்குப் பழுது வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது அந்த அரசருடைய கட்டளை.



தம் மக்களின் சிறுசிறு அலுவல்களில் கூட ஹம்முரபி கவனம் செலுத்தினர். ஒரு முறை ஒரு சமையற்காரனை அரண்மனையில் விருந்து சமைக்க வருமாறு அழைத்தார். அவனுடைய வழக்கு ஒன்று நீதி மன்றத்தில் நடந்து கொண்டிருந்தது. அதனல் அவனல் வர முடியவில்லை. இதை

அறிந்த ஹம்முரபி அரண்மனை விருந்து முடியும்வரை நீதிமன்ற நிகழ்ச்சிகளை எல்லாம் நிறுத்தி வைக்கும்படி கட்டளையிட்டார்.

குடியானவர்களுக்கு நன்மை செய்வதிலும் அவர் மிகுந்த அக்கரை காட்டினர். அவர் ஒரு தடவை தம்முடைய தலை நகரான பாபிலோனில் ஒரு விருந்து நடத்தினர். ஆட்டு ரோமங்களைக் கத்தரிக்கும் காலம் அது. அதைக் கொண்டாடவே அரண்மனை விருந்து. அந்த விருந்தில் எல்லா உத்தியோகஸ்தர்களும் கலந்து கொண்டார்கள். எல்லா அரசாங்க அதிகாரிகளும் நாணயமாக நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் கட்டளையிட்டார்.

அவர் எழுதி வைத்துள்ள கட்டளை ஒன்று அரண்மனைக் காவல்காரர்களை எச்சரிக்கை செய்கிறது. யாரோ ஒருவர் அரண்மனைக் காவலாளிகள் இலஞ்சம் வாங்குவதாக அவரிடம் கூறிவிட்டார். உடனே ஹம்முரபி லஞ்சம் வாங்கினுல் வேலை போய்விடும் என்று கட்டளை போட்டுவிட்டார். வரி தண்டி, அதைத் தங்களிடமே வைத்துக் கொண்டு காலம் கடத்தியவர்கள் கடுமையான தண்டனை அடைந்தார்கள்.

ஹம்முரபி தெய்வ நம்பிக்கை உள்ள அரசர். கோயில்கள் எல்லாம் சரியாகக் கவனிக்கப் படுகின்றனவா என்று பார்த்துக் கொண்டார். கோயில் சொத்துக்களுக்குப் பாதுகாப்புக் கொடுத்தார். வழிபாடும், பூசை நைவேத்தியங்களும் ஒழுங்காக நடக்கும்படி செய்தார். பாபிலோனில் மார்டக் என்ற சூரிய பகவானுக்கு ஒரு கோயிலைக் கட்டினர்.

ஹம்முரபி ஒரு புகழ் பெற்ற சட்ட நிபுணர். மக்கள் சந்தோஷமாகவும் பயமில்லாமலும் வாழ வேண்டுமானுல் அவர்களுக்கு நல்ல சட்டங்கள் தேவை என்பதை அவர் உணர்ந்தார். தம்முடைய ஆட்சிக்குள் இருந்த மக்களுடைய பழங்காலச் சட்டங்களை எல்லாம் திரட்டினர். புதிதாக அவரே சில சட்டங்களை இயற்றினர். இப்படியாகப் புதிய சட்டம் உருவானது. இந்தச் சட்டங்களை அவர் மார்டக் கோயிலின் முன்னுல் ஒரு கல்லில் செதுக்கி வைத்தார். இதனுல் எல்லா மக்களும் சட்டங்களைப் படித்து, அவற்றின்படி நடக்க முடிந்தது. அப்படி அவர் சட்டங்களையெல்லாம் செதுக்கி வைத்த கல்தூணை இன்றும் நாம் பார்க்கலாம். அதன் உச்சியில்

ஹம்முரபியின் உருவம் நின்றபடி இருக்கிறது. அந்த உருவம் மார்டக் கடவுளின் முன்னுல் நின்றுகொண்டு, அந்தக் கடவுளிடமிருந்து சட்டங்களை வாங்குவது போல் தோற்ற மளிக்கிறது.

தவறு செய்த மக்களை இந்தச் சட்டங்கள் கடுமையாகத் தண்டித்தன. ஒரு கொல்லத்துக்காரன் வீடு கட்டுகிருன் என்று வைத்துக் கொள்வோம். அந்த வீடு இடிந்து விழுந்து குடியிருப்பவன் மகன் சாக நேர்ந்தால் கொல்லத்துக்காரன் மகன் கொல்லப்படுவான். ஒருவன் கடன் வாங்கி இருக்கிருன் என்று வைத்துக் கொள்வோம். விளைச்சல் குறைவால் அவனுல் வட்டி கட்ட முடியவில்லை என்ருல் அந்த வட்டியை அடுத்த ஆண்டு கட்ட அவனுக்கு அநுமதி அளிக்கப்பட்டது. பெண்கள் நடந்து கொள்ள வேண்டிய முறைகளையும் சட்டங்கள் வகுத்தன. ஒரு பெண் ஊதாரியாகவோ அங்கும் இங்கும் அலைகின்றவளாகவோ இருந்தால் அவளைப் பிடித்துத் தண்ணீரில் தூக்கிப் போட்டுக் கொல்ல வேண்டும் என்று ஒரு சட்டம் சொல்லுகிறது.

ஹம்முரபி வியாபாரத்தில் மிகுந்த கவனம் செலுத்திஞர். தம்முடைய நாட்டில் வியாபாரத்தை வளர்ப்பதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ, அவற்றையெல்லாம் செய்தார். அவர் காலத்தில் கோயில்களுக்கு நிறைய சொத்து இருந்தது. வேண்டியபோது அந்தச் சொத்தினை வியாபாரிகளுக்குக் கொடுத்து உதவ வேண்டும் என்று சட்டம் செய்தார். வியாபாரம் சிக்கல் இல்லாமல் நடக்க ஒரு குறிப்பிட்ட எடை உள்ள வெள்ளிக் கட்டியைப் பழக்கத்துக்குக் கொண்டு வந்தார். அந்த நாளில் நாணயங்கள் இல்லாத குறையை இந்த முறை போக்கியது. வியாபாரத்துக்குரிய பொருள்கள் கழுதைகளின் மேல் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்துக்குக் கொண்டு போகப்பட்டன. துணிகளைச் சுருளை சுருளையாகச் சுருட்டி விற்பதற்குக் கொண்டு போவார்கள். ஒவ்வொரு சுருளையின் மேலும், அதை விற்கும் வியாபாரியின் முத்திரை வைக்கப்பட்டிருக்கும். இத்தகைய முத்திரைகள் பல கண்டு பிடிக்கப்பட்டன.

இந்த வியாபார அலுவல்களையெல்லாம் கவனித்துக்கொள்ள அநேக குமாஸ்தாக்கள் தேவைப்பட்டனர். சில பெரிய கோயில்களில் பள்ளிக்கூடங்களும் இருந்தன. அங்கு இளம் பிள்ளைகள்

சென்று படித்துவந்தார்கள். புதைந்து கிடந்த இம்மாதிரி பள்ளிக் கூடங்களில் ஒன்றை இப்பொழுது கண்டுபிடித்திருக்கிருர்கள். இதன் நடுவில் ஒரு பெரிய முற்றம் இருக்கிறது. அதைச்சுற்றி நான்கு வகுப்பு அறைகள் தென்படுகின்றன. அந்தக் காலப் பிள்ளைகள் களிமண் பலகையில்தான் எழுதிப் படித்தார்கள். அந்தப் பலகைகள் இப்போது கண்டு பிடிக்கப்பட்டிருக்கின் றன. முந்நூற்றுக்கு மேற்பட்ட எழுத்துக்களை அவர்கள் படித் தார்கள். ஆகையால் எழுத்துக்களைக் கற்றுக் கொள்ளவே அவர்களுக்கு நெடுங்காலம் பிடித்தது. இருந்தாலும் தங் களுக்கு எழுதப் படிக்கத் தெரிவதைப் பற்றி அந்த மக்கள் மிக வும் பெருமைப் பட்டார்கள். ஒரு களிமண் பலகையில் ஒரு பழ மொழி எழுதப் பட்டுள்ளது. அதன் பொருள், "களிமண் பல கையில் எழுதக் கற்றுக் கொண்டவன் சூரியன்போல் மிளிர் வான்" என்பது.

ஹம்முரபியின் நாட்டை அடுத்தாற்போல் மலைநாடுகள் இருந்தன. அங்கெல்லாம் வாழ்ந்த மலைக் குடிகள் அடிக்கடி நாட்டில் புகுந்து தொல்லை கொடுத்தார்கள். இவர்களிடமிருந்து நாட்டைக் காப்பாற்ற ஹம்முரபி ஒரு சிறந்த சேனையை எப் பொழுதும் தயாராய் வைத்துக் கொண்டிருந்தார். ஹம்முரபி உயிரோடு இருந்த வரையில் மலைக் குடிகள் அவர் நாட்டுப் பக்கம் தலைகாட்டவே இல்லை. ஆனுல் அவர் மாண்டதும் அவ ருடைய நாடு பலவீனம் அடைந்தது. அவருக்குப் பின்னுல் ஆண்ட அரசர்கள் எல்லோரும் திறமை குறைந்தவர்கள்; ஆகையால் மலைக் குடிகள் நாட்டின் மீது படை எடுத்தார்கள். படிப்படியாக நாடு முழுவதையும் பிடித்துக் கொண்டார்கள். ஹம்முரபியின் நாட்டு மக்கள் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத் துக்குப் போகக் கழுதைகள்மீது சென்ருர்கள். ஆனுல் மலைக் குடிகளோ குதிரைகள்மீது ஏறிச் சென்ருர்கள். இதனுலேயே மலைக் குடிகள் நாட்டைப் பிடித்துக் கொள்ள முடிந்தது.

ஹம்முரபியின் நாடு மலைக் குடிகளின் கைக்குள் வந்து விட்டாலும், அவருடைய பெயர் என்றும் அழியாமல் நிலைத்து விட்டது. ஹம்முரபிக்குப் பின் வந்த மக்கள் பல நாட்டிலும் அவருடைய சட்டங்களைக் கையாண்டார்கள். அவருடைய அரசாங்க முறையையும் பின்பற்றினுர்கள்.

## 2. மோசஸ் (சுமார் கி. மு. 1300)

பழங்காலத்தில் எகிப்து என்ற நாட்டைப் பரோவா என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் அரண்மனையில் ஒரு சிறுவன் வளர்ந்து வந்தான். அவன் பெயர் மோசஸ். அவன் எகிப்தியன் அல்லன்; யூதர் குடும்பத்திலே தோன்றியவன். யூதர்கள் வேற்று நாட்டைச் சேர்ந்தவர்கள். அவர்களது தாய் நாட்டில் பஞ்சம் ஏற்படவே எகிப்து தேசத்துக்கு வந்து அங்குக் குடியேறினார்கள். குடியேறிய அவர்கள் அந்த நாட்டிலேயே தங்கி விட்டார்கள். நாளாவட்டத்தில் அவர்களுடைய ஜனத்தொகை பெருகி, பலம் மிகுந்த ஜாதியார் ஆனார்கள். அவர்களுடைய பலத்தைக் கண்டு, எகிப்து மன்னன் பரோவாவே பயந்து போனான். அதனால் யூதர்களுக்கு ஒரு கொடுமையான சட்டம் விதித்தான். யூதர்களுக்கு ஆண் குழந்தைகள் பிறந்தால், அவைகளை உடனே கொன்று விடவேண்டும் என்றது அந்தச் சட்டம். இந்தக் கட்டளை மூலம் யூதர்களின் பலத்தை எல்லாம் ஒடுக்க நினைத்தான் பரோவா.

ஆகையால், மோசஸ் பிறந்தவுடனே அவனை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று அவன் தாயார் ஆசைப் பட்டார். அவர் ஒரு கூடையை எடுத்து அதனுள் தண்ணீர் நுழையாதபடி களிமண்ணால் அதை மெழுகினார். அதற்குள் குழந்தையை வைத்தார். பின் அதை நைல் நதிக்குத் தூக்கிக் கொண்டு போய் பரோவாவின் மகள் ஒவ்வொரு நாளும் குளிக்க வரும் துறையில் அதை மிதக்க விட்டார்.

சிறிது நேரத்தில் பரோவாவின் மகள் குளிப்பதற்காக ஆற்றிற்கு வந்தாள். கூடையையும் அதற்குள் இருந்த குழந்தையையும் கண்டாள். குழந்தை அழகாகச் சிரித்துக் கொண்டிருந்தது. அவளுக்குக் குழந்தை மிகவும் பிடித்துப் போய்விட்டது; தன்னுடைய தோழிமாரை விட்டுக் குழந்தையை எடுத்துக்கொண்டு வரச் சொன்னாள்; அதை வளர்ப்

பதற்கு ஒரு தாதி வேண்டும் என்று இராஜகுமாரி கூறினாள். இதை எல்லாம் மோசஸின் சிறிய தாயார் ஒரு மரத்தடியில் மறைந்து கொண்டு கவனித்துக் கொண்டிருந்தாள். இச் சமயம் அவள் உடனே ஓடி வந்து குழந்தையை வளர்க்கத் தான் ஒரு தாதியைக் கொண்டு வருவதாகச் சொன்னாள்; பிறகு அவள் ஓடிப் போய் மோசஸின் தாயாரையே அழைத்துக்கொண்டு வந்தாள். இப்படி அந்தத் தாயார் தாதி என்ற முறையில், தம்முடைய குழந்தையை அரண்மனையில் வளர்த்து வந்தார்.

மோசஸை இராஜகுமாரி தன்னுடைய மைந்தனாகவே நினைத்தாள். அவன் மீது அவள் மிகுந்த அன்பு வைத்திருந்தாள். ஆனால் மோசஸின் மனம் குழம்பிக் கொண்டே இருந்தது. கொஞ்சம் கூட அவனுக்கு அமைதி ஏற்படவில்லை. தான் எகிப்திய இனத்தில் பிறக்கவில்லை என்பதும், தம்முடைய இனத்தார் யூதர்களே என்பதும் சிறுவயதிலேயே தெரிந்துவிட்டன. ஆகையால், எகிப்தியர்கள் எல்லோரும் யூதர்களைக் கொடுமைப் படுத்துவதைக் கண்டு கண்ணீர் விட்டான். மோசஸ் வளர்ந்து பெரியவர் ஆன பிறகு, ஒரு நாள் யூதன் ஒருவனை ஓர் எகிப்தியன் சாட்டையால் அடித்துக்கொண்டிருந்ததைப் பார்த்தார். இதை அவரால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அதனால் அவர் உடனே ஓடிப் போய் அந்த எகிப்தியனைத் தாக்கிக் கொன்றார். தாம் இப்படிச் செய்ததை ஒருவரும் பார்க்கவில்லை என்று மோசஸ் எண்ணிக் கொண்டார். ஆனால், மறுநாளே ஓர் எகிப்தியன் அவரிடம் வந்தான். "நேற்று ஓர் எகிப்தியனைக் கொன்றது போலவே என்னையும் கொல்ல ஆசைப்படுகிறீர்களா?" என்று கேட்டான். உடனே தாம் செய்த செய்கை பலருக்கும் தெரிந்துவிட்டதை மோசஸ் அறிந்து கொண்டார். ஆகையால், அவர் உடனே நாட்டை விட்டு ஓடிப் போனார்.

மோசஸ் ஒரு பாலைவனத்துக்குள்ளே ஓடினார். அங்கு ஜெத்தோ என்று ஒருவன் வசித்து வந்தான்; அவனுடைய ஆடுகளை மேய்க்கின்ற வேலையை மோசஸ் மேற்கொண்டார். அவர் ஜெத்தோவிடம் மிகவும் அடங்கி நல்ல முறையில் வேலை செய்தார். அதனால் அவன் மிகவும் மகிழ்ச்சி அடைந்

தான். தன்னுடைய மகளை மோசஸுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். ஒருநாள் மோசஸ் ஆடுகளை வெளியே ஓட்டிக் கொண்டு சென்றார். அவர் அவற்றை மேய்த்துக் கொண்டு இருந்த போது ஒரு விநோதக் காட்சியைக் கண்டார். ஒரு புதர் எரிந்து கொண்டே இருந்தது; ஆனாலும் அந்தப் புதர் சாம்பலாகாமல் பசுமையாகவே இருந்தது. மோசஸுக்கு இது பெரிய ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவர் அதன் அருகில் போனார். அதை அவர் அண்டியதும், அவர் தம் மோடு கடவுள் பேசியதைக் கேட்டார். "மோசஸ்! மோசஸ்! நான் இங்கே இருக்கிறேன்" என்று கடவுள் சொன்னார். கடவுள் மேலும் தொடர்ந்து, "நான் உன்னை மறுபடியும் எகிப்துக்கு அனுப்பப் போகிறேன். அங்கு என்னுடைய மக்களான யூதர்கள் வாழ்கிறார்கள். அவர்களை எல்லாம் நீ எகிப்திலிருந்து கொண்டு வரவேண்டும். அவர்கள் வாழ் வதற்கு என்றே கனான் என்ற வளப்பமான நாட்டை உண்டாக்கி இருக்கிறேன். அங்கு நீ அவர்களை அழைத்துக் கொண்டு போகவேண்டும்" என்று சொன்னார். முதலில் மோசஸ் மிகவும் பயந்து போய் விட்டார். ஆனால் கடவுள் மோசஸை நோக்கி அவருக்கு எல்லா உதவிகளும் செய்வ தாகச் சொன்னார். அதோடு மோசஸின் சகோதரன் ஆரான் என்பவனும் உதவி செய்வான் என்றார்.

ஆரானும் மோசஸும் எகிப்துக்குத் திரும்பினார்கள். பரோவாவிடம் போய் யூதர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு போக அவன் அனுமதியைக் கேட்டார்கள். பரோவா முதலில் அனுமதி கொடுத்தான். ஆனால் பிறகு திடீரென்று அவன் மனம் மாறிவிட்டது. அனுமதி தர முடியாது என்று சொல்லிவிட்டான். இதனால் கடவுள் கோபம் கொண்டு பரோவாவைப் பயப்படுத்துவதற்காகப் பல கொடிய நோய்களை எல்லாம் உண்டாக்கினார். ஒரு முறை அவர் நிறைய வெட்டுக்கிளிகளை அனுப்பி எகிப்தில் விளைந் திருந்த பயிர்களை எல்லாம் தின்னச்செய்தார். இன்னொருமுறை அவர் ஒரு பெரிய புயல் காற்றை அனுப்பி விளைச்சலை எல்லாம் நாசப்படுத்தினார். மற்றொரு முறை அவர் மிகவும் கொடிய நோய் ஒன்றை அனுப்பினார். இருந்த போதிலும் பரோவா

அனுமதி கொடுக்கவே இல்லை. கடைசியில் எகிப்தியருக்குப் பிறந்த முதல் ஆண் குழந்தைகளை எல்லாம் கடவுள் கொன்று விட்டார். இது பரோவாவுக்குப் பெரிய அச்சத்தைக்



கொடுத்தது. ஆகையால், யூதர்களை உடனே நாட்டை விட்டு வெளியே போய்விடும்படி கேட்டுக் கொண்டான். யூதர்கள் எல்லோரும் எகிப்தை விட்டுப் புறப்பட்டார்கள்.

ஆனால் யூதர்கள் எல்லாம் போய்விட்டபிறகு, அவர்களை அனுப்பிவிட்டதற்காகப் பரோவா வருந்தினான். இதுவரை அவன் நாட்டில் ஆயிரக் கணக்கான யூதர்கள் வாழ்ந் தார்கள். எத்தனையோ வேலைகளை அவர்கள் மிகவும் கஷ்டப் பட்டுச் செய்துகொண்டு இருந்தார்கள். இப்போது அவர்கள் எல்லாம் போய்விட்டதால், வேலை செய்யப் போதிய அளவு ஆட்கள் இல்லை. ஆகையால் தன்னுடைய வீரர்களை எல்லாம் அவன் அனுப்பினான்; "நாட்டை விட்டுப் போன யூதர்களைத் திருப்பிக் கொண்டு வாருங்கள்," என்று அவன் அவர் களுக்குக் கட்டளை யிட்டான். மோசஸ் கடவுளை வணங்கினார். எதிரில் செங்கடல் என்ற சமுத்திரம் இருந்தது. சமுத்திரத்தை எப்படிக் கடந்து செல்வது என்று கடவுளைக் கேட்டார். ஒரு பக்கம் கடல்; இன்னொரு பக்கமோ எகிப்திய வீரர்கள்! "பயப்பட வேண்டாம்," என்று கடவுள் அபயம் கொடுத்தார். "யூதர்களை முன்னால் அழைத்துக் கொண்டு போ," என்று

கட்டளை இட்டார். யூதர்கள் எல்லோரும் சமுத்திரத்தின் ஓரத்தில் வந்து சேர்ந்தார்கள். உடனே ஒரு பெரிய காற்று வீசியது. கடல் தண்ணீர் விலகிக் கொண்டே சென்றது. யூதர்கள் எல்லோரும் தண்ணீர் வற்றிய இடத்தின் வழியாகவே நடந்து மறுகரையை அடைந்தார்கள். யூதர்கட்குப் பின்னல், எகிப்தியப் படைகளும் சமுத்திரத்தில் இறங்கிச் செல்ல முயற்சி செய்தன. ஆனல் காற்று மாறி அடிக்கத் தொடங்கியது. கடல் தண்ணீர் மறுபடியும் வந்து மூடிக் கொண்டது. தண்ணீருக்கடியில் எகிப்தியப் படைகள் எல்லாம் மூழ்கி அழிந்து போய்விட்டன.

இவ்விதமாக யூதர்கள் எகிப்திலிருந்து எந்தவிதத் துன்பமும் இல்லாமல் வெளியேறினர்கள். ஆனல் அவர்களுக்கும், கனன் நாட்டுக்கும் இடையே பல கல் தொலைவு பாலைவனம் இருந்தது. மோசஸுக்கு இவ்வளவு தொலைவு அவர்களை யெல்லாம் அழைத்துக் கொண்டு போவது தொல்லையாக இருந்தது. யூதர்கள் எல்லோரும் முணு முணுத்தனர். மோசஸ் சொன்னபடி நடப்பதற்கு மறுத்து விட்டார்கள். அவர்கள் நடந்த நாடும் ஒரே பாலைவனம். அடிக்கடி அவர்கள் பாலைவனப் பசுஞ்சோலைகளைக் கண்டார்கள். மரங்களும், புல்வெளிகளும், தண்ணீர் ஊற்றுக்களும் காணப்படும். ஆனல் மற்ற இடங்கள் எல்லாம் ஒரே வரட்சிதான்; வரண்ட மணல் பரப்புதான்.

வழியிலேயே பல குழந்தைகள் பிறந்தன; குழந்தைகள் எல்லாம் பெரியவர்களாக வளர்ந்தன. மோசஸினுடைய வேலையும் பலமடங்காகப் பெருகியது. யூத மக்களிடையே அநேக புதுப்புதுச் சச்சரவுகள் தோன்றின. யூத இனக் கட்டுப்பாடுகளைப் பலர் மீறி நடந்தனர். அவர்களை எல்லாம் பிடித்துத் தண்டிக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டது.

ஒருநாள் மோசஸின் மாமனர் அவரைப் பார்ப்பதற்காக வந்தார். மோசஸ் மிகவும் களைத்தும் சோர்ந்தும் இருப்பதைப் பார்த்து அவர் மனம் கலங்கினர். அவர் மோசஸைத் தனியாக அழைத்துக் கொண்டு போய், நல்ல முறையில் புத்திமதிகள் சொன்னர். "யூதர்களை எல்லாம் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்து விடு; ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு தலைவனை நியமித்து

விடு. சிறு சிறு காரியங்களை அந்தந்தத் தலைவர்களே பார்த்துக் கொள்வார்கள். பெரிய வழக்குகளை மட்டும் நீ நேரில் கவனி'' என்று சொன்னார். இது மோசஸுக்கு நல்லதாகவே பட்டது. அதன்படியே மோசஸ் நடந்தார். இவ்விதமாக யூத மக்களிடையே முதல் அரசாங்க அமைப்பு ஏற்பட்டது.

நெடுங்காலமாக யூதர்கள் பாலைவனத்தில் அலைந்து திரிந்து கொண்டு இருந்தார்கள்; கடைசியில் சினைமலை என்ற ஓர் உயரமான மலையை அடைந்தார்கள். அந்த மலையின் அடிவாரத்தில் கூடாரம் அடித்துத் தங்கினார்கள். அப்போது அந்த மலையின் மீது ஒரு பெரிய மேகம் தோன்றியது. கடவுள் மோசஸைத் தம்மோடு பேசுவதற்கு மலைமேல் ஏறி வரும்படி கூறினார். மோசஸ் கடவுள் சொன்னபடியே மலைமேல் ஏறினார். நாற்பது நாள் வரையில் மலையின் மேலேயே தங்கினார். கடவுள் மோசஸுக்குப் ''பத்துக் கட்டளை'' என்ற மிக உயர்ந்த நீதிகளைச் சொன்னார். அத்துடன் மக்கள் நல்லபடி வாழ்வதற்குத் தேவையான பல விதிகளையும், நீதிகளையும் சொன்னார்.

மோசஸ் நெடுநாள் மலையிலிருந்து வராததால் யூதர்கள் பொறுமை இழந்தார்கள். மோசஸ் மாண்டுபோய்விட்டார், கடவுள் தங்களைக் கைவிட்டு விட்டார் என்று அவர்கள் எல்லோரும் நினைத்தார்கள். ஆகையால் அவர்கள் ஆராம் என்பவரிடம் வந்தார்கள்; தாங்கள் வழிபாடு, பூசை செய்வதற்கு ஒரு கடவுளைச் செய்து கொடுக்குமாறு அவரை வேண்டினார்கள். உடனே, ஆராமும் அதற்கு ஒப்புக்கொண்டார். எல்லா யூதர்களும் தம்முடைய காதணிகளைக் கழற்றிக் கொடுக்க வேண்டும் என்று கூறினார். அந்தக் காலத்தில் ஆண்களும் காதணிகள் அணிந்துகொண்டிருந்தார்கள். எல்லா யூதர்களும் தம்முடைய காதணிகளைக் கழற்றிக் கொடுத்தார்கள். ஆராம் அவைகளை எல்லாம் நெருப்பில் இட்டு உருக்கினார். உருக்கிய பொன்னைக் கொண்டு ஒரு கன்றுக் குட்டியின் உருவம் செய்தார். பிறகு யூதர்களைப் பார்த்து அந்தப் பொன் கன்றுக் குட்டிதான் அவர்களுடைய கடவுள் என்றார். யூதர்கள் எல்லோரும் அந்தக் கன்றுக் குட்டிக்குப் பூசை, திருவிழா முதலியவைகளைச் செய்து கும்பிட்டார்கள்.

மோசஸ் சினை மலையிலிருந்து கீழே இறங்கி வந்தார். வரும்போதே யூதர்களின் பாட்டும், ஆட்டமும், மேளதாளச் சத்தமும் அவர் காதில் விழுந்தன. மோசஸ் கூடாரத்துக்கு அருகில் வந்து பார்த்தார். பொன்னாலான கன்றுக் குட்டியைக் கண்டார். அதை யூதர்கள் கடவுளாக எண்ணித் தொழுவதைப் பார்த்தார். உடனே அவருக்கு அடங்காத கோபம் ஏற்பட்டது. அந்தக் கன்றுக்குட்டியை எடுத்துத் தூள் தூளாக உடைத்தார்; பொடியாக்கினார். அந்தப் பொடியைக் குடிதண்ணீரில் கலந்து, அந்தத் தண்ணீரை யூதர்கள் குடிக்குமாறு செய்தார். அந்தக் கன்றுக்குட்டியைச் செய்வதில் பங்கு கொண்ட மூவாயிரம் பேரையும் மோசஸ் கொலை செய்துவிட்டார்.

கடைசியில் பல ஆண்டுகாலம் பிரயாணம் செய்த பிறகு யூதர்கள் கடவுள் தமக்குக் கொடுத்த நாட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்! மோசஸ் முதலில் சில ஆட்களை அனுப்பி நாட்டின் வளப்பத்தை யறிந்துவரும்படி செய்தார். அவர்கள் அவ்வாறே நாட்டின் வளப்பத்தைச் சுற்றிப்பார்த்துவிட்டுத் திரும்பிவந்து, நாடு வளம் மிகுந்தது என்று சொன்னார்கள். தேனும் பாலும் ஆறுகப் பாயும் நாடு என்று கூறினார்கள். ஆனால் அங்கு வாழ்ந்துகொண்டிருந்த மக்கள் பலம் மிகுந்தவர்கள் என்றும், பார்ப்பதற்குப் பூதங்கள் போல இருக்கிறார்கள் என்றும் சொன்னார்கள். அவர்கள் சொன்ன கதைகளை எல்லாம் கேட்ட யூதர்களுக்குப் பயமாகப் போய்விட்டது. ஆகையால் அவர்கள் அந்தத் தேசத்துக்குள் கால் எடுத்து வைக்கவே மறுத்துவிட்டார்கள். மோசஸ் அவர்களுக்குக் கடவுள் துணை செய்வார் என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். ஆனால் யூதர்கள் பிடிவாதமாக இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் கனான் தேசத்திற்குள் போக மிகவும் பயப்பட்டார்கள். அவர்களை அந்தத் தேசத்துக்குள் அழைத்துக்கொண்டு போகப் பின்னும் பல ஆண்டுகள் பிடித்தன.

மோசஸுக்கு வயதாகிவிட்டது. அவர் உடம்பு மெலிந்து பலவீனமாய்விட்டது. அவருடன் எகிப்திலிருந்து புறப்பட்டு வந்த யூதரில் அநேகர் மடிந்துபோய்விட்டார்கள். ஜோஷுவா என்ற இளைஞர் மோசஸுக்கு வேண்டிய உதவிகளை எல்லாம்

செய்துவந்தார். கடைசியில் ஜோஷுவாதான் யூதர்களை மறுபடியும் தூண்டிக் கனன் நாட்டுக்குள் நுழையச் செய்தார். ஜோஷுவாவின் தலைமையில் யூதர்கள் முன்னேறிச் சென்றார்கள். அவர்களுக்கு வெற்றிமேல் வெற்றி கிடைத்தது. யூதர்கள் மனதில் ஒரு புதிய நம்பிக்கை உண்டாயிற்று. கடைசியில் அவர்கள் ஜோர்டான் என்ற ஆற்றைத் தாண்டிச் சென்று கனன் நாட்டை அடைந்தார்கள். ஆனால் மோசஸுக்கு மிகவும் வயதாகிவிட்டதால், அவரால் அவர்களோடு போக முடியவில்லை. ஒரு நாள் தம் காலம் முடியப்போகிறது என்று மோசஸுக்குத் தெரிந்தது. பக்கத்தில் இருந்த ஒரு மலைமீது ஏறினார். அதன் உச்சிமேல் இருந்து ஜோர்டான் நதியையும். அதற்கு அப்பால் தெரிந்த கனன் நாட்டையும் பார்த்தார். கனன் தேசத்தின் பசுமையான வயல்களும் ஈச்சமரங்களும் அவர் கண்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தன. தாம் தேடி வந்த நாட்டைக் கண்ணாலாவது பார்த்துவிட்டோம் என்ற திருப்தி அவருக்கு ஏற்பட்டது. நெபோ என்ற அந்த மலையின் உச்சியிலேயே அவர் இறந்துபோனார். அதே வேளையில் ஜோஷுவா யூதர்களைக் கனன் தேசத்துக்குள் குடியேறச் செய்தார்.

## 3. ஹொரேஷியஸ் (சுமார் கி. மு. 1100)

ஐரோப்பாவின் தெற்கில் இத்தாலி என்று ஒரு தேசம் இருக்கிறது. அந்தத் தேசத்தின் நடுவில் ஓர் ஆறு ஓடுகிறது. அதற்கு டைபர் நதி என்று பெயர். டைபர் நதி மத்தியதரைக் கடலில் போய் விழுகிறது. அந்த நதியின் இரண்டு ஓரங்களிலும் செழிப்பான பூமி உண்டு. அந்தச் செழிப்பான சமவெளிகளில் நூற்றுக் கணக்கான ஆண்டுகட்கு முன்னால் இலத்தீன் சாதியார் வசித்துவந்தார்கள். அவர்கள் பாடுபட்டு உழைப்பவர்கள். தங்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்கும் வேண்டிய உணவை உற்பத்தி செய்ய அவர்கள் உடல் வருந்தி

உழைத்தார்கள். ஆகையால் அவர்கள் பலம் பொருந்திய சாதியராக விளங்கினுர்கள். இலத்தீன்கள் தங்களுக்குள் ளேயே வியாபாரம் செய்துகொண்டார்கள். பல கிராமங்களில் இருந்தும் விற்பனைக்கு உரிய பொருள்களை டைபர் நதிக்கரை யில் ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு அனுப்பினுர்கள். அந்த இடத்துக்குப் பக்கத்தில் நதியின் நடுவில் ஒரு சிறு தீவு இருந் தது. அதனுல் அந்த இடத்தில் நதியைக் கடந்து செல்வது சுலபமாக இருந்தது. அங்குதான் கடைசியாக ரோமாபுரிப் பட்டணம் கட்டப்பட்டது.

ரோமாபுரி கட்டப்பட்ட விதத்தைப் பற்றி ரோமானியர் ஒரு கதை சொன்னுர்கள். ஒரு சமயம் இலத்தீன் இனங்களின் தலைவர்களுக்குள் ஒருவன் தன்னுடைய அண்ணனைக் கொன்று விட்டு அவனுக்குச் சொந்தமான நிலங்களையும் கைப்பற்றிக் கொண்டான். கொல்லப்பட்டவனுக்கு இரண்டு பேரப் பிள்ளை கள்—இரட்டைக் குழந்தைகள்—இருந்தார்கள். அவர்களுக்கு ராமுலஸ், ரீமஸ் என்று பெயர். அவர்களுடைய பாட்டனிடம் இருந்து நிலத்தைப் பிடுங்கிக் கொண்டவன் இவர்களையும் ஒழித்துக்கட்ட நினைத்தான். ஆகையால் அவன் ஒரு கூடை யில் இந்த இரண்டு குழந்தைகளையும் வைத்து டைபர் நதியில் விட்டுவிட்டான். குழந்தைகள் ஆற்றில் விழுந்து இறந்து விடும் என்பது அவனுடைய எண்ணம். ஆனுல் அந்த இரட் டைக் குழந்தைகள் நதியில் விழுந்து சாகவில்லை. கூடை ஆற்றுப் போக்கில் சிறிது தூரம் போனதும், கரையோரமாக ஒதுங்கிக் கொண்டது. அங்கேயே அது தங்கிவிட்டது. அந்த இரட்டைக் குழந்தைகளைக் கண்ட ஒரு பெண் ஓநாய் அவற்றைத் தன்னுடைய குகைக்குக் கொண்டுபோனது. தன்னுடைய குட்டிகளோடு அந்தக் குழந்தைகளையும் வளர்த் தது. ராமுலஸும் ரீமஸும் சிறுவர்களாக வளர்ந்தனர். அவர் களை ஓர் ஆட்டு இடையன் கண்டான். அவன் அவர்களைத் தன்னேடு அழைத்துக்கொண்டு போனுன். அவர்களைத் தன் குடும்பத்தில் வைத்துக்கொண்டு வளர்த்தான். அவர்கள் இரண்டுபேரும் வளர்ந்து வாலிபர்கள் ஆனுர்கள். தங்களைச் சுற்றி ஒரு சிறு இடையர் கூட்டத்தைச் சேர்த்துக்கொண் டார்கள். தங்களுடைய சிறிய பாட்டனுரைத் தோற்கடித்

தார்கள். அதன் பிறகு அவர்கள் தாங்கள் குழந்தையாக இருந்தபோது தங்களை ஓநாய் கண்டு எடுத்த இடத்தில், ஒரு பட்டணத்தைக் கட்டுவது என்று தீர்மானித்துக் கொண்டார்கள். இரண்டுபேருமாகச் சேர்ந்து அங்கு ஒரு பட்டணத்தைக் கட்டினார்கள். ராமுலஸை விட ரீமஸ் மிகவும் விரைவாகக் கட்டிக்கொண்டு போனான். ஆகையால் ரீமஸ் ராமுலஸை அடிக்கடி ஏளனஞ்செய்தான். ராமுலஸ் கட்டிக்கொண்டிருந்த சுவர்களைத் தாண்டிக் குதித்துக் கேலிசெய்தான். இது ராமுலஸுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. ஆகையால் அவன் ரீமஸைக் கொன்றுவிட்டான்; பிறகு தான் மட்டும் தனியாகப் பட்டணத்தைக் கட்டிமுடித்தான். ராமுலஸ் கட்டிய பட்டணம் ஆகையால் அதற்கு ரோமாபுரி என்று பெயர் ஏற்பட்டது. இலத்தீன் சாதியாருக்கு அது ஒரு முக்கியப் பட்டணம் ஆயிற்று. அங்கேதான் நதியின் இரு பக்கத்திலிருந்தும் இலத்தீன் சாதியார் தம்முடைய பொருள்களைக் கொண்டுவந்து விற்பார்கள்; வேண்டிய பொருள்களை வாங்குவார்கள்; இதனால் ரோம் ஒரு பெரிய சந்தையாகவும் இருந்தது. ஆற்றுக்குக் குறுக்கே ஒரு மரப்பாலம் கட்டப்பட்டது. அதனால் மக்கள் ஒரு கரையிலிருந்து மறுகரைக்குச் சுலபமாகப் போய்வர முடிந்தது.

ஆனால், இலத்தீன் குடிகள் நெடுங்காலம் அமைதியாக வாழமுடியவில்லை. டைபர் நதிக்கு வடக்கே சண்டை வெறிபிடித்த ஒரு சாதியார் வசித்துவந்தார்கள். அவர்களுக்கு எட்ருஸ்கன்கள் என்று பெயர். அவர்கள் ரோம் பட்டணத்தின் வாணிபத்தைக் கண்டு பொருமை கொண்டார்கள், ஆகையால் அவர்கள் படையெடுத்துவந்து ரோமாபுரியைக் கைப்பற்றிக்கொண்டார்கள். எட்ருஸ்கன் தலைவர்களில் ஒருவன் ரோமாபுரிக்கு மன்னன் ஆனான்; அவனுடைய பெயர் டார்க்கின் என்பது. அவன் கொடியவன்; கர்வம் பிடித்தவன். அதனால் ரோமானியர்கள் அவனை அடியோடு வெறுத்தார்கள். கடைசியில் அவனுடைய அட்டகாசத்தை ரோமானியர்களால் பொறுக்கவே முடியவில்லை. ஆகையால் அவர்கள் கொதித்தெழுந்து அவனை விரட்டிவிட்டார்கள். இனிமேல் ரோமாபுரிக்கு அரசனுடைய ஆட்சியே கூடாது, முடியாட்சிதான்

நல்லது என்று ரோமானியர்கள் முடிவு செய்தார்கள். அரசனுக்கு மாருக இரண்டு தலைவர்கள் தம்முடைய பட்டணத்தை ஆளவேண்டும், அந்தத் தலைவர்களை மக்கள் ஒவ்வோராண்டும் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

ஆனல் டார்க்வின் மிகவும் சினம் கொண்டான். ரோமாபுரியை மறுபடியும் வென்று, தன்னை ரோமிலிருந்து விரட்டியதற்காக இலத்தீன் சாதியாரைத் தண்டிக்கவேண்டும் என்று முடிவுசெய்தான். அவன் தன்னுடைய இனத்தாரான இட்ரஸ்கன்களை யணுகி அவர்களின் தலைவர்களில் ஒருவனை லார்ஸ் போர்ஸெனுவை ஒருபெரும் படையோடுவந்து ரோமாபுரியைத் தாக்கத் தனக்கு உதவ வேண்டும் என்று கேட்டுக்கொண்டான். லார்ஸ் போர்ஸெனு சில அறிவாளிகளைக் கலந்தாலோசித்தான். அவர்கள் அவனுக்கு வெற்றியே கிடைக்கும் என்றும், ரோமாபுரியை அவன் கைப்பற்றி விடுவான் என்றும் நம்பிக்கை ஊட்டினர்கள். ஆகையால் அவன் ஒரு பெரிய சேனையைத் திரட்டினன். அந்தச் சேனை பளபளக்கும் ஈட்டிகளோடு ரோமாபுரியை நோக்கிப் புறப்பட்டது. இந்தச் சேனையைக் கண்டதும் ரோமானியர்கள் நடு நடுங்கினர்கள். அவர்களின் சேனையோ மிகவும் சிறியது; ஆனல் லார்ஸ் போர்ஸெனுவின் சேனையோ மிகவும் பெரியதாக இருந்தது. இட்ரஸ்கன்கள் ஒரே ஒரு வழியாகத்தான் ரோமாபுரிக்குள் அடியெடுத்து வைக்கமுடியும். டைபர் நதிக்கு மேலிருந்த மரப் பாலமே அந்த வழி. ஆகையால் அந்த மரப் பாலத்தைத் தகர்த்து விடுவது என்று ரோமானியர் முடிவு செய்தார்கள். ஆனல் இட்ரஸ்கன்களோ மிகவும் விரைவாக ரோமை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். மரப் பாலத்தை உடைப்பதற்குக்கூட ரோமானியர்களுக்குப் போதிய நேரம் இல்லை.

இந்த ஆபத்திலிருந்து எப்படித் தப்பிப் பிழைப்பது என்று எவருக்கும் புரியவில்லை. அப்போது ஹொரேஷியஸ் என்ற வீரர் முன் வந்து, "என்னோடு இன்னும் இரண்டு ரோமானிய வீரர்கள் வருவதற்குத் தயாரா? வந்தால் மூன்று பேரும் பாலத்தின் அந்த முனைக்குப் போய் இட்ரஸ்கன்களைத் தடுத்து நிறுத்திக்கொண்டு இருக்கலாம். அதற்குள் மற்ற

ரோமானியர்கள் மரப் பாலத்தைத் தகர்த்துவிடலாம்,'' என்று சொன்னார். உடனே ஸ்பூரியஸ் லார்ஷியஸ் என்பவரும், ஹெர்மினியஸ் என்பவரும் முன் வந்தார்கள். அவர்களும் ஹொரேஷியஸும் மரப் பாலத்தின் மறுமுனைக்குப் போனார்கள். அங்கேயே இட்ரஸ்கன்களை எதிர்பார்த்துக் காத்திருந்தார் கள். தங்கள் உயிர் போவது நிச்சயம் ; எனினும் நாடு காக்கப் படலாம் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது.



இட்ருரிய சேனைகள் இந்த மூன்று வீரர்களின் தைரியத்தைக் கண்டு சிரித்தன. எதிரிப் படைகள் அத்தனையையும் மூன்றே மூன்று ரோமானியர்கள் எதிர்க்கப் போகிறார்களா என்று நினைத்தார்கள். ஆனால் ஹொரேஷியஸும் அவருடைய தோழர்களும் கொஞ்சங் கூட அஞ்சவில்லை. இட்ருரிய வீரர்கள் தைரியமாக முதலில் அந்த மூன்றுபேர் மீதும் பாய்ந் தார்கள். ஆனால் அந்த மூன்று ரோமானியர்களும் மிகவும் வீரத்தோடு சண்டை செய்தார்கள் ; பாலத்தின் மேல் காலை

வைத்த இட்ரூரிய வீரர்களை எல்லாம் வெட்டி வீழ்த்தினர்கள். வெட்டப்பட்ட பிணங்கள் பாலத்துக்கு முன்புறம் குவியலாகக் கிடந்தன. கடைசியில் அவர்களை எதிர்க்க எந்த இட்ரஸ்கனும் முன் வரவில்லை. இதற்குள் மற்ற ரோமானியர்கள் பாலத்தைப் பெரும்பாலும் சேதப்படுத்திவிட்டார்கள்; அது முறிந்து விழுவதற்கு இன்னும் சிறிது நேரமே இருந்தது.

அப்பொழுது ஹொரேஷியஸ் தம்முடன் இருந்த மற்ற இரண்டு ரோமானிய வீரர்களையும் நகருக்குத் திரும்பிவிடும்படி கூறினர். அந்த இரண்டு பேரும் பாலத்தின் வழியாக ரோமாபுரிக்குத் திரும்பினர். உடனே பாலத்தின் தூலங்கள் எல்லாம் சட சட என்று முரியும் சத்தம் கேட்டது.

இட்ரூரிப வீரர்களுக்குப் பேருவகை. ஹொரேஷியஸ் மட்டுமே இப்போது அவர்களை எதிர்த்தார்; ஹொரேஷியஸ் தம்முடைய கையில் சிக்கிக்கொண்டார் என்று நினைத்து இட்ரூரிப வீரர்கள் ஆரவாரம் செய்தார்கள். அவர்கள் அவரைப் பிடித்துக் கொள்ளக் கூட்டமாகப் பாய்ந்தார்கள். அதே சமயம் ஒரு பெரிய சத்தம் கேட்டது; மரப் பாலம் முற்றிலும் உடைந்து ஆற்றில் விழுந்தது. ஆகையால் ரோமாபுரிக்குள் ஒருவராலும் புக முடியாது. அப்பொழுது ஹொரேஷியஸ் திடீரென்று ஆற்றுத் தண்ணீரில் தாவிக் குதித்துவிட்டார். புதிதாக மழை பெய்ததால் ஆற்றில் புது வெள்ளம் வேகமாக வந்துகொண்டு இருந்தது. ஹொரேஷியஸ் போர்க் கலன்கள் அணிந்திருந்ததால் ஆற்றில் மூழ்கி இறந்திருப்பார் என்று அவருடைய நண்பர்கள் எல்லோரும் பயந்தனர். அவருடைய உயிரைக் காப்பாற்றும்படி தெய்வங்களை எல்லாம் வேண்டிக் கொண்டார்கள். ஆனல் ஹொரேஷியஸ் மிகுந்த பாடுபட்டு நீந்திக்கொண்டு வந்தார்; எப்படியோ தட்டுத் தடுமாறிக் கரைக்குப் பக்கமாக வந்துவிட்டார்; உடனே அவருடைய நண்பர்கள் கைகளை நீட்டி அவரைப் பிடித்துக் கரைக்கு இழுத்துக்கொண்டார்கள்.

இவ்விதமாக ரோம் பட்டணம் காப்பாற்றப்பட்டது. டார்க்வினும், லார்ஸ் போர்ஸெனவும் சிறிதுகாலம் மறுகரையில்

காத்துக்கொண்டிருந்தார்கள். ஆனால், மரப் பாலம் உடைந்து போனதால், அவர்களால் ஆற்றைக் கடந்துபோக முடியவில்லை. அவர்களிடம் படகு எதுவும் இல்லை. கடைசியில் அவர்கள் ரோமாபுரி ஆசையை விட்டுவிட்டுத் திரும்பிப் போய்விட்டார்கள்.

ஹொரேஷியஸின் தைரியத்தை எப்படிப் பாராட்டுவது என்று ரோமானியர்களுக்குத் தெரியவில்லை. அவருக்கு வெகுமானமாக மிகச் செழிப்பான நிலம் ஒன்றைக் கொடுத்தார்கள். ஒரு நாளில் இரண்டு பலமுள்ள காளைகள் எவ்வளவு உழுமோ, அவ்வளவு நிலத்தை ஹொரேஷியஸுக்குக் கொடுத்தார்கள். அவருடைய சிலை ஒன்றைச் செய்து அதை ரோமாபுரியில் நிறுத்திவைத்தார்கள். அதனடியில் ஹொரேஷியஸின் தீரச் செயலைப் பொன் எழுத்துக்களில் எழுதினார்கள். பகைவர்கள் ரோமைப் பிடிக்க வரும்போது, சிறுவர், சிறுமிகளும் ஹொரேஷியஸைப் போலத் தீரச் செயல் புரிந்து அதைக் காப்பாற்றவேண்டும் என்ற நோக்கத்துடன் ரோமாபுரிக் குடியரசு இருந்தவரை ஹொரேஷியஸின் கதையையும் பெரியவர்கள் அவர்களுக்குக் கூறினார்கள்.

## 4. டேவிட் (சுமார் கி. மு. 1000)

யூதர்கள் ஜார்டன் நதியைக் கடந்து, கடவுள் வாக்களித்த நாட்டை அடைந்தார்கள். அங்கு வாழ்ந்து வந்த மக்களிடமிருந்து நாடு முழுவதையும் கைப் பற்றினார்கள். யூதர்களின் எண்ணிக்கையும் நாளாவட்டத்தில் வளர்ந்து கொண்டே போயிற்று. அவர்கள் தங்களுக்குள் ஓர் அரசனையும் தேர்ந்தெடுத்துக்கொண்டார்கள். அந்த அரசனுக்கு ஸால் என்று பெயர். ஆனால், அவன் கடவுளுடைய கட்டளைக்குக் கீழ்ப் படிந்து நடக்கவில்லை. ஆகையால் கடவுள் அவனை மிகவும் வெறுத்தார். மேலும் சாமுவெல் என்ற மதகுருவிடம் ஸாலுக்குப் பின்னால் நாட்டை ஆட்சி செய்வதற்கு ஒருவனைத் தயார் செய்யும்படி கட்டளை இட்டார். கடவுள் சாமுவெலை

ஜெஸ்ஸி என்பவன் வீட்டுக்கு அனுப்பினுர். ஜெஸ்ஸிக்கு எட்டு ஆண் பிள்ளைகள் இருந்தார்கள்.

சாமுவெல் பெத்லஹெம் பட்டணத்தை அடைந்தார். அங்கேதான் ஜெஸ்ஸியின் வீடு இருந்தது. சாமுவெல் ஜெஸ்ஸியைப் பார்த்து, " நான் கடவுளுக்குப் பூசை செய்யப் போகிறேன்; நீ உன் மைந்தர்களோடு வரவேண்டும்," என்று சொன்னுர். ஜெஸ்ஸியின் மைந்தர்கள் ஒருவர் பின் ஒருவராக வந்தார்கள். அவர்கள் சாமுவெலுக்கு எதிரில் வரிசையாக வந்தபோது, "இவன் இல்லை, இவன் இல்லை" என்று கடவுள் சொல்லிக் கொண்டே வந்தார். ஜெஸ்ஸியின் ஏழு பிள்ளைகளும் சாமுவெலுக்கு எதிரில் வந்தார்கள். கடைசியில், சாமுவெல் ஜெஸ்ஸியை நோக்கி,"உனக்கு வேறு பிள்ளைகள் இருக்கிருர்களா?" என்று கேட்டார் ஜெஸ்ஸி, "இன்னும் ஒருவன்தான் இருக்கிருன். அவன் ஆடு மேய்க்க வயல் வெளிக்குப் போயிருக்கிருன்" என்று பதில் சொன்னுன். உடனே சாமுவெல், " அப்படியானுல் அவன் உடனே வரவேண்டும்; அவன் இல்லாமல் சாப்பிடுவதற்கு இல்லை" என்று கூறினுர். பிறகு தன் கடைசி மகனை டேவிடை வரவழைத்தான். டேவிட்தான் அரசராகவேண்டியவர் என்பது சாமுவெலுக்குத் தெரிந்துவிட்டது. ஆகையால் அவர் மாட்டுக் கொம்பு நிறைய எண்ணெயை எடுத்து டேவிடின் தலையில் ஊற்றி முழுக்காட்டினுர். பிறகு டேவிடை ஆடு மேய்க்க அனுப்பிவிட்டுச் சாமுவெல் புறப்பட்டுவிட்டார்.

சிறிது காலத்துக்குப் பிறகு, யூதர்களுக்கும் பிலிஸ்டைன்கள் என்ற கொடிய ஜாதியாருக்குமிடையே கடும் போர் மூண்டது. டேவிடின் மூத்த சகோதரர் மூன்றுபேர் யூதர் பக்கம் சண்டை செய்வதற்காகப் போனுர்கள். பிலிஸ்டைன்கள் பக்கத்தில் அரக்கனைப்போன்ற ஒருவன் இருந்தான். அவன் பெயர் கோலியத் என்பது. அவன் யூதர்களைப் பார்த்து, " என்னோடு சண்டைசெய்ய ஓர் ஆளை அனுப்புங்கள். அவன் என்னைக் கொன்றுவிட்டால் பிலிஸ்டைன்கள் உங்களுக்கு அடிமை ஆவார்கள், " என்று சொன்னுன். யூதர்களில் எவரும் கோலியத்துக்கு முன்னர் வரவும் துணிய

வில்லை. அந்தச் சமயம் ஜெஸ்ஸி போர்க்களத்தில் இருந்த தன் மூன்று பிள்ளைகளுக்கும் வேண்டிய உணவை டேவிடின் கையில் கொடுத்து அனுப்பியிருந்தான். டேவிட் தம்முடைய அண்ணன்மாரைச் சந்தித்தபோது, கோலியத் போட்ட சத்தம் அவருடைய காதில் விழுந்தது. உடனே அவர் கோலியத்துடன் சண்டை செய்ய முன்வந்தார். அவர் கவசமணிந்து பழக்கமில்லையாதலால் இப்பொழுதும் அதை அணிய மறுத்து



விட்டார். டேவிட் பக்கத்தில் இருந்த சிறிய ஆற்றுக்குப் போனார். அதன் கரையில் இருந்து ஐந்து சிறு கூழாங் கற்களைப் பொறுக்கிக் கொண்டார். தம்முடைய கவணையும் எடுத்துக்கொண்டார். கோலியத் டேவிடைக் கண்டதும் ஏளனம் செய்தான்; அவருடைய சிறிய உருவத்தைக் கண்டு நகைத்தான். ஆனால் டேவிட் அவனைப்பார்த்து, "நீ என்னோடு சண்டை செய்ய வாளோடும் வேலோடும் வந்திருக்கிறாய். ஆனால் நானோ கடவுளின் கிருபையோடு வந்திருக்

கிறேன்'' என்ருர். டேவிட் ஒரு கூழாங் கல்லே எடுத்துத் தம்முடைய கவணில் வைத்துச் சுழற்றி வீசினுர்! அந்தக் கல் விர் என்று சென்று கோலியத்தின் நெற்றியில் மோதி யது. உடனே அவன் மயங்கி விழுந்து இறந்துபோஞன். டேவிடை எல்லோரும் பாராட்டினுர்கள். "ஸால் ஆயிரம் எதிரிகளேக் கொன்ருன். ஆனுல் டேவிடோ பத்தாயிரம் எதிரிகளேக் கொன்ருர்,'' என்று புகழ்ந்தார்கள்.

ஸால் மன்னனுக்கு அடிக்கடி பைத்தியம் பிடிப்பது வழக் கம். அந்தச் சமயங்களில் இனிமையான சங்கீதத்தைக் கேட் டால், அவன் பைத்தியம் குறைந்துபோகும். டேவிட் ஹார்ப் என்ற வாத்தியத்தை வாசிப்பதில் ஈடு இணே இல்லாதவர். ஆகையால் ஸால் மன்னனுக்குப் பைத்தியம் பிடித்தபோதெல் லாம் ஹார்ப் வாசிக்க டேவிடுக்கு அழைப்பு வந்தது. ஸாலின் அரண்மனேயிலேயே டேவிட் தங்கி இருந்தார். ஸாலின் மகன் ஜானதன் என்பவனும் டேவிடும் நெருங்கிய நண்பர் கள் ஆனுர்கள். டேவிட் கோலியத்தைக் கொன்றவர் ஆகை யால் அவர் மீது ஸால் மன்னனுக்குப் பொருமை ஏற்பட்டது. ஒரு நாள் டேவிட் ஹார்ப் வாசித்துக்கொண்டு இருந்தபோது, ஸால் ஓர் ஈட்டியை எடுத்து டேவிடின்மீது எறிந்தான். நல்ல வேளேயாக டேவிட் தப்பிப் பிழைத்தார். ஆனுல் அது முதல் அவர் உயிருக்கு ஆபத்துக்கள் ஏற்பட்டுக்கொண்டே இருந்தன. அவர் நண்பனுன ஜானதன் அவர் உயிரைக் காப்பாற்ற முயற்சி செய்தான். அவர் அரண்மனேயைவிட்டு வெளியேறினுர்.

ஸாலும் ஜானதனும் தனியாகவே நின்று பிலிஸ்டைன் களோடு சண்டை செய்தார்கள். கடைசியில் ஒரு சண்டையில் ஸாலினுடைய மகன் ஜானதனே பிலிஸ்டைன்கள் கொன்று விட்டார்கள். மற்றும் இரண்டு குமாரர்களும் கொல்லப்பட் டார்கள். இதனுல் ஸால் மன்னன் மிகவும் மனம் வருந்தித் தற்கொலே செய்துகொண்டான். அதனுல் யூதர்களுக்கு அரசனே இல்லாமல் போய்விட்டது. யூதர்கள் எல்லோரும் ஒன்றுகூடி டேவிடை அரசன் ஆக்கினுர்கள். கடவுள் டேவிட் மீது கருணே கொண்டு அவரைச் சிறந்த மனிதர் ஆக்கினுர்.

டேவிடினுடைய ஆட்சியின் கீழ் யூதர்கள் மிகவும் பலம் வாய்ந்த இனமாக வாழ்ந்தார்கள். யூதர்களுக்குப் பலம் வாய்ந்த ஒரு தலைநகர் தேவை என்பதை டேவிட் உணர்ந்தார். ஆகையால் அவர் ஸையன் என்ற மலைக்குப் போனார். அந்த மலையின் உச்சியில் ஒரு பெரிய பட்டணத்தை நிறுவினார். அந்தப் பட்டணத்துக்கு இரண்டு பெயர்கள் உண்டு. ஒன்று ஜெருசலெம் என்பது; மற்றொன்று டேவிட் பட்டணம் என்பது. தம்மை யூதர்களுக்கு அரசன் ஆக்கிய கடவுளுக்காக அவர் பலவகையான பூஜைகளையும் செய்தார்.

பிலிஸ்டைன்களைத் தோற்கடிக்கக் கடவுள்தான் டேவிடுக்கு உதவி செய்தார். யூதர்களைப் பலம் உடையவர்களாக ஆக்கியதும் கடவுளே. அதனால் டேவிட் கடவுளை மிகவும் நேசித்தார். அவர் ஆண்டவன் புகழைப் பாட்டுக்களில் பாடினார். அவைகளுக்கு "சாம்ஸ்" அல்லது பிரார்த்தனைக் கீதங்கள் என்று பெயர். டேவிட் பெரிய அரசர் ஆகிவிட்டார் என்றாலும் அவர் தம்முடைய எளிமையான பிள்ளைப் பருவத்தை மறக்கவில்லை. ஒரு சிறந்த பிரார்த்தனைப் பாட்டில், அவர் தாம் ஒரு காலத்தில் ஆடு மேய்க்கும் பையனாக இருந்ததைக் குறிப்பிடுகிறார்; கடவுளை ஆடுகளைப் பாதுகாக்கும் இடையனாகவும், யூத மக்களை ஆட்டு மந்தைகளாகவும் கூறுகிறார். அந்தப் பாட்டு பின்வருமாறு ஆரம்பமாகிறது. "ஆண்டவனே என்னைப் பாதுகாக்கும் ஆட்டிடையன். எனக்கென எந்தவிதமான விருப்பமும் இல்லை. பசுமையான புல்தரையில் அவர் என்னைப் படுக்கவைக்கிறார்; அமைதியான நீர் நிலைக்கு அவர் என்னை அழைத்துப் போகிறார்." இந்தப் பாட்டு கிறித்தவர்களில் பெரும்பாலோருக்குத் தெரியும். ஆண்டவனை வணங்குவதற்காகக் கூடுகின்ற கிறித்தவரும் யூதர்களும் இன்றும் டேவிடினுடைய பாட்டுக்களைப் பாடுகிறார்கள்.

ஒருநாள் டேவிட் ஒரு கொடிய காரியத்தைச் செய்தார். அன்று இரவு மிகவும் புழுக்கமாக இருந்தது. அதனால் காற்றாடுவதற்காக, டேவிட் தம்முடைய வீட்டுக்கு மேல் புறத்தில் இருந்தார். அங்கே நின்றுகொண்டு பக்கத்தில் இருந்த ஒரு வீட்டின் வாசலை நோக்கினார். அங்கே அழகான ஒரு பெண்

நின்றுகொண்டு இருந்ததைப் பார்த்தார். அவள் யார் என்பதைத் தெரிந்துகொண்டு வருமாறு ஆட்களை அனுப்பினுர். அவள் பெயர் பாத்ஷீபா என்பது. அவள் ஏற்கெனவே உரையா என்பவனை மணம் செய்துகொண்டிருந்தாள். பாத்ஷீபா தமக்கு மனைவியாகவேண்டும் என்று டேவிட் விரும்பினுர். அந்தச் சமயம் உரையா சேனையில் சேர்ந்து சண்டை செய்துகொண்டிருந்தான். உரையா ஒரு சமயம் விடுமுறையில் வீட்டுக்கு வந்தான். அப்போது டேவிட் அவனை அழைத்தார்; அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தார். அதைச் சேனைத் தலைவர் ஜோவாப் என்பவரிடம் கொடுக்குமாறு சொன்னுர். அடுத்தாற்போல் நடக்கும் சண்டையில் உரையாவை ஆபத்தான இடத்துக்கு அனுப்பவேண்டும் என்று அந்தக் கடிதத்தில் ஜோவாபுக்கு எழுதியிருந்தார். அதன் மூலம் உரையாவை ஒழித்துவிட டேவிட் நினைத்தார். ஜோவாப் அரசருடைய கட்டளைக்குக் கீழ்ப் படிந்தான். அடுத்த சண்டையில் உரையாவை ஆபத்தான இடத்துக்கு அனுப்பினுன். சண்டையில் உரையா மாண்டுபோனுன். கணவன் இறந்து போனதற்காகப் பாத்ஷீபா வருந்தினுள். சிறிது காலத்துக்குப் பிறகு டேவிட் அவளை மறுமணம் செய்துகொண்டார். பாத்ஷீபா டேவிடோடு அரண்மனையில் வாழ்ந்தாள். அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது.

டேவிடின் இந்தச் செய்கை ஆண்டவனுக்குப் பிடிக்கவில்லை. ஆண்டவன் டேவிட் மீது கோபம் கொண்டார். நாதன் என்ற மதகுருவின் மூலமாக ஆண்டவன் ஒரு செய்தியை அனுப்பினுர். நாதன் டேவிடின் அரண்மனைக்கு வந்தார்; அவருக்கு ஒரு கதையைச் சொன்னுர். "ஒரு காலத்தில் ஒரு பட்டணத்தில் இருவர் வசித்து வந்தார்கள். ஒருவன் பெரிய பணக்காரன்; மற்றவன் மிகுந்த ஏழை. பணக்காரனுக்கு நிறைய ஆடுமாடுகள் இருந்தன. ஆனுல் ஏழைக்கோ ஒரே ஆட்டுக்குட்டிதான் இருந்தது. அந்த ஏழை தன் ஆட்டுக்குட்டி மீது உயிரையே வைத்திருந்தான். தன் குழந்தைகளோடு குழந்தையாக அதை வளர்த்து வந்தான். ஒரு நாள் பணக்காரன் வீட்டுக்கு ஒரு விருந்தாளி வந்தான்.

வந்த விருந்தாளிக்கு நல்ல சாப்பாடு போடவேண்டும் என்று பணக்காரன் ஆசைப்பட்டான். விருந்துச் சாப்பாட்டுக்குப் பணக்காரன் தன்னுடைய ஆடுகளில் ஒன்றைக் கொன்றிருக்க வேண்டும். ஆனல் அவன் அப்படிச் செய்யவில்லை. தன் ஆட்களை எல்லாம் அழைத்தான்; ஏழையின் வீட்டில் இருந்த ஆட்டுக்குட்டியைப் பிடித்து வரும்படி செய்தான். அதைக் கொன்று விருந்து சமைத்து விருந்தாளிக்குப் போட்டான்'' என்று நாதன் கதை சொன்னர். டேவிட் இந்தக் கதையைக் கேட்டார்; மிகுந்த கோபம் கொண்டார்; ‘‘பணக்காரன் வஞ்சகன்; அவனை உடனே கொலை செய்திருக்கவேண்டும்'' என்ருர். உடனே நாதன் டேவிடை ஏற இறங்க அமைதி யாகப் பார்த்தார்; பிறகு மெதுவான குரலில், ‘‘நீதான் அந்தப் பணக்காரன்'' என்று சொன்னர். டேவிடுக்கு விஷயம் விளங்கி விட்டது. அவர் மிகவும் வெட்கம் அடைந்தார்; ஆண்டவனிடம் மன்னிப்பை வேண்டினர். டேவிட் தாம் செய்த தப்புக்கு வருந்துவதால், அவரைக் கடவுள் மன்னிப் பார் என்று நாதன் கூறினர்; ஆனல் டேவிடின் மகன் மடிந்து விடுவான் என்று சொன்னர். இதற்குப் பிறகு கொஞ்ச காலத்துக் கெல்லாம் டேவிடின் மகன் நோயில் படுத்து விட்டான். தம்முடைய மகன் பிழைத்துக் கொள்ள வேண்டும் என்று டேவிட் எத்தனையோ விரதங்களைப் பூண்டார். இருந்தாலும் அவருடைய மகன் பிழைக்கவே இல்லை. ஆண்டவன் அந்த மகனுடைய உயிரை எடுத்துக் கொண்டார்.

டேவிடுக்கு மூப்பெய்தியது. அப்போது ஆண்டவனுக்கு ஓர் அழகான கோவிலைக் கட்டவேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். நாதனிடம் அவர் தம் ஆசையை வெளி யிட்டார். நாதன் டேவிடைப் பார்த்து, ‘‘நீர் சண்டை செய் வதற்கு உரியவர். நீர் கோவில் கட்டுவதை ஆண்டவன் விரும்பமாட்டார். உமக்குப் பின்னல் உமது மகன் அரசனகப் போகிருன். அவன் அமைதியைக் காப்பாற்றுவதற்காகப் பிறந்தவன். அவன் ஜெருசலெத்தில் ஆண்டவனுக்குக் கோயில் கட்டுவான்'' என்று சொன்னர். டேவிட் நாதன்

சொன்னதை ஒப்புக் கொண்டார். கோவில் கட்டும் ஆசையை விட்டுவிட்டார். இருந்தாலும் அவர் மனம் மிகவும் வருந்தியது.

பாத்ஷீபாவின் முதல் பிள்ளை இறந்ததும், அவளுக்கு இரண்டாவது மகன் பிறந்தான். அவன் பெயர் சாலமன் என்பது. அவன் அழகாகவும் திறமை சாலியாகவும் விளங்கினன். தம் மகனுடைய திறமையை எண்ணி டேவிட் பெருமைப் பட்டுக் கொண்டார். டேவிடின் உடல் தளர்ந்து கொண்டே வந்தது. இன்னும் சிறிது காலத்தில் தாம் இறப்பது நிச்சயம் என்பதை டேவிட் உணர்ந்து கொண்டார்; அவர் ஜதோக் என்ற பூசாரிக்கும் நாதன் என்ற மத குருவுக்கும் சொல்லி அனுப்பினர். தமக்குப் பின்னல் தம் மகனையே அரசன் ஆக்குமாறு கூறினர். அவர்கள் அதற்கு ஒப்புக் கொண்டு சாலமனுக்கு எண்ணெய் முழுக்குச் செய்தார்கள். இதன்பிறகு சிறிது காலத்தில் டேவிட் மரணம் அடைந்தார். அவர் மகன் சாலமன் அரசன் ஆனன்.

## 5. ஒடிஸியஸின் கதைகள் (ஹோமர்; சுமார் கி. மு. 800)

நீங்கள் எந்த நாட்டில் இருந்தாலும், அந்த நாட்டைப் பற்றிய பழங்கதைகள் பலவற்றைக் கேள்விப்பட்டிருப்பீர்கள் என்பது நிச்சயம். அந்த மாதிரிக் கதைகள் எல்லாம் மிக மிகப் பழையவை. நம்முடைய மூதாதைகள் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்வதற்கு முற்பட்ட காலத்திலிருந்தே அத்தகைய கதைகள் வழங்கி வந்திருக்கின்றன. அவைகள் வாய்மூலமாகவே ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு மாறும். கடைசியில் எழுதத் தெரிந்த யாராவது ஒருவர் அவற்றை எல்லாம் சேர்த்து எழுதிவைப்பார். அவ்விதக் கதைகள் எல்லாம் உண்மையில் நடந்தனவா, இல்லையா என்பதைப் பற்றி இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை. அவற்றில் வரும் பாத்திரங்கள் யாவும் உண்மையில் வாழ்ந்து வந்தவர்கள் தானு

என்றும் சொல்ல முடியாது. ஆனால் அந்தக் கதைகள் எல்லாம் மிக அழகான கதைகள் என்பதில் சந்தேகம் இல்லை. அந்த மாதிரிக் கதைகளைக் கேட்க எல்லோரும் ஆசைப்படுகிறார்கள். நாம் பெரியவர்களான பிறகு நம் குழந்தைகளுக்கு அந்தக் கதைகளைச் சொல்லிச் சொல்லி மகிழ்ச்சி அடைவோம். பழங்கால வீரர்களின் வீரச் செய்கைகளை எல்லாம் அந்தக் கதைகள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

கிரேக்கர்களைப் பற்றிய பல கதைகள் மிகவும் சிறந்தவை. கிரேக்கர்கள் என்ற மக்கள் தெற்கு ஐரோப்பாவில் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுடைய நாட்டின் பெயர் கிரீஸ் என்பது. கிரேக்கர்கள் கப்பல் ஓட்டுவதில் சிறந்தவர்கள் ; திறமை வாய்ந்த மாலுமிகள். கடலில் பல வீரதீரச் செயல்களைச் செய்யக் கூடியவர்கள். அவர்கள் கப்பல்களில் ஏறிக் கொண்டு மத்தியதரைக் கடல் முழுதும் பிரயாணம் செய்தார்கள். கிரேக்கர்களுக்குப் பழங்காலத்தில் ஒடிஸியஸ் என்று ஒரு தலைவர் இருந்தார். அவரைப் பற்றிப் பல கதைகள் சொல்லப் படுகின்றன. சிறிய ஆசியா என்ற தேசத்தில் டிராய் நகரத்துக்கு எதிராகக் கிரேக்கர்கள் சண்டை செய்தார்கள். அப்படிச் சண்டை செய்த கிரேக்கர்களில் ஒடிஸியஸும் ஒருவர்.

டிராய் நகரத்தைப் ப்ரையம் என்ற ஒரு மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்குப் பாரிஸ் என்று ஒரு மகன் இருந்தான். அவன் ஹெலென் என்ற கிரேக்க தேசத்து அரச குமாரியைத் தூக்கிக்கொண்டு போய் விட்டான். ஹெலென் அந்தக் காலத்தில் உலகத்திலேயே சிறந்த அழகியாக இருந்தாள். அவள் ஏற்கெனவே ஒரு கிரேக்க அரசனுக்கு மனைவியாக வாழ்ந்தவள். கிரேக்க தேசத்தில் ஸ்பார்ட்டா என்பது ஒரு பட்டணம். அந்தப் பட்டணத்தை ஆண்டுவந்த மெனலாஸ் என்ற அரசனுடைய மனைவியே ஹெலென். டிராய் நகரத்து வீரர்களுக்கு ட்ரோஜன்கள் என்று பெயர். அவர்கள் ஹெலெனைக் கைப் பற்றிய பிறகு, அவளைப் பாரிஸுக்குத் திருமணம் செய்து வைப்பதற்காகக் கொண்டு போனார்கள். அதனால் கிரேக்கர்கள் கோபம் கொண்டார்கள். ட்ரோஜன்களோடு சண்டை

போட்டு ஹெலெனை மீட்டுக்கொண்டு வருவதற்காக ஒரு பெரிய படையை அனுப்பினார்கள். அப்படி அனுப்பப்பட்ட கிரேக்கப் படைகளைப் பற்றியும், அவற்றின் வீரதீரச் செயல்களைப் பற்றியும் இரண்டு காவியங்கள் எழுந்தன. ஒன்று 'இலியட்' என்பது; இரண்டாவது 'ஆடிஸ்ஸி' என்பது. போராடப் போன கிரேக்கப் படைகளில் மூன்று பேர் குறிப்பிடத் தக்கவர்கள். ஒருவர் வீரதீரச் செயல்களுக்குப் பேர்போன அகிலீஸ் என்பவர். இரண்டாவது வீரர் நெஸ்டார் என்பவர். அவர் மற்றவர்களைவிட வயது மிகுந்தவர். பழுத்த அநுபவம் உடையவர். மூன்றாவது வீரர் ஒடிஸியஸ். அவர் மற்ற எல்லாக் கிரேக்கர்களைக் காட்டிலும் மதிநுட்ப முடையவர்.

கிரேக்கப் பட்டாளம் டிராய் நகரத்தை அடைந்தது. இருந்தாலும், அந்தப் பட்டணத்துக்கு உள்ளே நுழைய அந்தப் பட்டாளத்தால் முடியவில்லை. அந்தப் பட்டணத்தைச் சுற்றி உயரமான மதில் சுவர்கள் இருந்தன. அவை பலமான சுவர்கள்; அதனால் கிரேக்கப் படையால் அந்தச் சுவர்களை இடித்துத் தள்ளவோ, அவற்றின் மேல் ஏறிக் கடந்துச் செல்லவோ முடியவில்லை. பத்து ஆண்டுகாலமாக டிராய் பட்டணத்துக்குள்ளே நுழைய கிரேக்கப் படை முயற்சி செய்தது. ஆனால் எவ்வளவு முயற்சி செய்தும் காரியம் ஈடேறவில்லை. ஆரம்பத்தில் ஏற்பட்ட தோல்வியே, பத்து ஆண்டு முடிந்த பிறகும் ஏற்பட்டது.

கடைசியில் ஒடிஸியஸ் தீர ஆலோசனை செய்து ஒரு திட்டம் போட்டார். கிரேக்கர்களை எல்லாம் கூப்பிட்டு ஒரு பெரிய மரக் குதிரையைச் செய்யும்படி கட்டளையிட்டார். அதன் உள்பாகம் முழுவதும் குடையப் பட்டுக் குழிவாக இருந்தது. பல வீரர்களை அவர்களுடைய உடுப்புக்களோடு ஆயுத பாணிகளாக அந்தக் குதிரைக்குள்ளே விட்டு மறைத்து விட்டார்கள். குதிரைக்குள்ளே இருந்த கிரேக்கர்கள் போக மீதிப் பேர் எல்லாம் தங்கள் தங்கள் கப்பல்களில் ஏறிக் கொண்டார்கள். சண்டையை நிறுத்திவிட்டுத் தம்முடைய நாட்டுக்குத் திரும்புவது போல நடித்தார்கள்;

கப்பல்கள் எல்லாம் இரவில் விளக்கை ஏற்றிக் கொண்டு கடலில் பிரயாணம் செய்தன. டிராய் நகரத்து மக்களுடைய கண்ணில் படாமலிருக்க எல்லாரும் ஒரு பெரிய பாறையின் பின்னால் போய் ஒளிந்து கொண்டனர்.

டிராய் மக்களுக்கு ஒரே சந்தோஷம். கிரேக்கர்கள் எல்லோரும் கையாலாகாமல் ஓடிவிட்டார்கள் என்று அவர்கள் எண்ணினார்கள். ஆகையால் அவர்கள் தம்முடைய கோட்டை வாயிலின் பெரிய கதவுகளைத் திறந்தார்கள். கிரேக்கர்கள் கடற் கரையில் விட்டுவிட்டுப் போன மரக் குதிரையை இழுத்துக் கொண்டு வந்தார்கள். அதைத் தம்முடைய பட்டணத்துக்கு உள்ளேயே கொண்டு வந்து விட்டார்கள். இரவு வந்ததும், டிராய் நகரத்து வீரர்கள் யாவரும், பகைவர்கள் எல்லோரும் போய் விட்டார்கள், இனிமேல் ஒரு பயமும் இல்லை என்று எண்ணிக் கொண்டு நன்றாகத் தூங்கினார்கள்.

ஆனால் எல்லோரும் தூங்கியவுடனே, மரக்குதிரைக்குள் பதுங்கிக்கொண்டிருந்த கிரேக்க வீரர்கள் ஒருவர் பின் ஒருவராக வெளியே வந்தார்கள் ; பிறகு எல்லோரும் சேர்ந்து கோட்டைக் கதவை நன்றாகத் திறந்து விட்டார்கள். இதற்குள் இருட்டில் கடலில் கப்பல்களில் சென்ற கிரேக்கர்கள் எல்லோரும் திரும்பி வந்தார்கள். கப்பல்களில் இருந்து இறங்கிச் சந்தடி செய்யாமல் டிராய் நகரத்துக் கதவுக்கு அருகில் வந்து தங்கி இருந்தார்கள். ஆகையால் கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டவுடன் குபுகுபு என்று எல்லோரும் உள்ளே நுழைந்தார்கள். இவ்விதமாக ஒரு சூழ்ச்சியைக் கையாண்டு கிரேக்க வீரர்கள் டிராய் நகரத்தைப் பிடித்தார்கள் ; ஹெலெனையும் மீட்டுக்கொண்டு தங்களுடைய நாட்டுக்குத் திரும்பினார்கள். டிராய் நகரத்து முற்றுகையின்போது நடைபெற்ற செயல்கள் எல்லாம் விவரமாக ‘ இலியட் ’ என்ற காவியத்தில் சொல்லப் பட்டிருக்கின்றன.

கிரீஸ் தேசத்துக்குத் திரும்பிப் போய்த் தம் மனைவியான பினலோப், மகன் டெலிமாகஸ் ஆகியோரைப் பார்க்க வேண்டுமென்று ஒடிஸியஸ் மிகவும் ஆசைப் பட்டார். ஆனால் அவர் ஆசை நெடுங்காலமாக நிறைவேறவே இல்லை.

அவர் கிரீஸ் தேசத்தை நோக்கிக் கப்பலில் வந்து கொண்டிருந்தபோது, கடலில் ஒரு பெரிய புயல்காற்று வீசியது. அதனுல் ஒடிஸியஸின் கப்பல் வழி தவறிக் கடலில் வெகு தூரம் போய்விட்டது. ஒடிஸியஸ் திரும்ப கிரீஸ் தேசத்தை அடைவதற்கு முன்னுல் அவர் பல வகையான துன்பங்களுக்கு ஆளாக நேர்ந்தது. அவர் அந்தத் துன்பங்களிலிருந்து தப்பிப் பிழைத்துத் தம்முடைய நாட்டை அடைந்தார். ஒடிஸியஸின் கப்பல் பிரயாணக் கதைகளை விஸ்தாரமாகச் சொல்வதே 'ஆடிஸ்ஸி' என்ற மகா காவியம். ஒடிஸியஸின் வீரச் செய்கைகளைச் சொல்வதால் அதற்கு ஆடிஸ்ஸி என்ற பெயர் ஏற்பட்டது.

ஒடிஸியஸின் கப்பல் புயலில் சிக்கித் தத்தளித்தது; வழி தவறிப் போய்விட்டது. அந்தக் கப்பல் மத்திய தரைக் கடலுக்கு நடுவில் ஓடிவிட்டது. கடைசியாக கிரீஸிலிருந்து அநேக மைல் தொலைவில் உள்ள சிசிலி என்ற தீவுக்கு அவர் வந்து சேர்ந்தார். ஒடிஸியஸும் அவர் ஆட்களும் சிசிலித் தீவில் இறங்கினுர்கள். உணவுக்காகவும், தண்ணீருக்காகவும் அந்தத் தீவை எல்லாம் துருவினுர்கள். கடைசியில் அவர்கள் ஒரு பெரிய குகையின் வாசலுக்கு வந்து சேர்ந்தார்கள். குகைக்கு உள்ளே அவர்கள் பெரிய பெரிய பால் குடங்களைப் பார்த்தார்கள். அந்தக் குகை ஓர் அரக்கனுக்குச் சொந்தம். அவன் பெயர் பாலிவீமஸ் என்பது. அவனுக்கு ஒரே ஒரு கண் தான் இருந்தது. அந்த அரக்கன் ஒடிஸியஸையும் அவரது ஆட்களையும் பிடித்துக் குகையில் அடைத்துவிட்டான். நகர்த்துவதற்கு முடியாத ஒரு பெரிய கல்லைத் தூக்கிக் குகையின் வாசலை அடைத்து விட்டான். அங்கே அவர்களை நன்ருகக் கொழுக்க வைத்து, அதன்பின் அவர்களைக் கொன்று ஏப்பம் விட அவன் எண்ணினுன். ஒவ்வொரு நாளும் இரவில் அவன் குகைக்கு வருவான்; இரண்டு பேரைப் பிடித்துக் கொண்டு போய்ச் சாப்பிட்டுவிடுவான். இப்படியாக ஒடிஸியஸின் ஆட்களுடைய எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வந்தது. அவனிடமிருந்து எப்படித் தப்புவது என்று ஒடிஸியஸ் யோசித்தார்.

கடைசியில் அவருக்கு ஒரு யுக்தி தோன்றியது. குகையில் பாலிபீமஸுக்குச் சொந்தமாக ஓர் ஆட்டு மந்தை இருந்தது. அந்த மந்தையில் பெரிய பெரிய ஆடுகள் இருந்தன. அந்த ஆடுகள் எல்லாம் புல் மேய வேண்டும் அல்லவா? அதற்காக அவைகளை நாள்தோறும் பொழுது விடிந்ததும் அரக்கன்



குகையைத் திறந்து வெளியே விடுவான். ஒரு நாள் இரவு அந்த அரக்கனிடம் மிகவும் அன்பாக இருப்பவர்போல ஒடிஸியஸ் நடித்தார். அவர் கப்பலில் இருந்து வந்தபோது ஒரு தோல் பை நிறையச் சாராயம் கொண்டு வந்திருந்தார். அந்தச் சாராயம் எல்லாவற்றையும் அவர் பாலிபீமஸுக்கு ஊற்றிக் கொடுத்தார். அவன் அதை வெகு ஆவலோடு குடித்தான். அளவுக்கு மேல் குடித்ததால் அவனுக்குத் தூக்கம் வந்தது. அடித்துப் போட்டவன் போலத் தூங்கி

விட்டான். அதுதான் தக்க சமயம் என்று ஒடிஸியஸ் நன்ருக எரிந்து கொண்டிருந்த ஒரு கொள்ளிக் கட்டையை எடுத்தார். சந்தடி செய்யாமல் அரக்கனுக்கு அருகே சென்ருர்; அவனுடைய ஒற்றைக் கண்ணில் அந்தக் கொள்ளியைச் செருகினுர். அரக்கன் துடித்தான் ; அவன் கண் பொட்டையாய்விட்டது. பிறகு ஒடிஸியஸும் அவரது ஆட்களும் தங்களை ஆடுகளின் வயிற்றுப் புறத்தில் சேர்த்துக் கட்டிக் கொண்டார்கள். பொழுது விடிந்ததும் அரக்கன் ஆடுகளையெல்லாம் வெளியே விட்டான் ; கண் குருடாகிவிட்டதால் கையால் ஒவ்வோர் ஆட்டையும் தடவிப் பார்த்து வெளியே விட்டான். ஒடிஸியஸும் அவரது ஆட்களும் ஆடுகளுடைய வயிற்றின் அடியில் இருந்ததால், அவன் கைகளுக்கு அவர்கள் அகப்படவில்லை. இவ்விதமாக எல்லோரும் குகையை விட்டு வெளியேறித் தப்பித்துக் கொண்டார்கள். உடனே, எல்லோரும் தம்முடைய கப்பலை அடைந்து கடல் பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள்.

இன்னெரு சமயம் ஒடிஸியஸும் அவருடைய ஆட்களும் ஒரு தீவுக்குப் பக்கமாகக் கப்பலைச் செலுத்திக் கொண்டு போனுர்கள். அந்தத் தீவில் சில அழகான பெண்கள் குடியிருந்தார்கள். அவர்கள் தங்கள் நீண்ட கூந்தலைச் சீவி வாரிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருந்தார்கள். அவர்களுக்குச் சைரன்கள் என்று பெயர். கடலில் கப்பலைச் செலுத்தும் மாலுமிகள் அவர்களுடைய எழிலைக் கண்டும் அவர்களது பாட்டைக் கேட்டும் மயங்கி விடுவார்கள் ; பிறகு கப்பலை அந்தத் தீவை நோக்கிச் செலுத்துவார்கள். உடனே கப்பல்கள் தீவுக்குப் பக்கத்தில் உள்ள கற்பாறைகளில் மோதி உடைந்துவிடும். இவ்விபத்தைத் தடுக்க ஒடிஸியஸ் யோசனை செய்தார். மெழுகினுல் தம்முடைய ஆட்களின் காதுகளை எல்லாம் அடைத்துவிட்டார். அதனுல் சைரன்களின் பாட்டு கேட்காத அளவு தொலை தூரத்துக்கு வந்துவிட்ட பிறகுதான் ஒடிஸியஸ் தம் ஆட்களின் காதுகளில் இருந்த மெழுகை எடுத்துவிட அனுமதி கொடுத்தார்.

கடைசியில் ஒடிஸியஸின் கப்பலின்மேல் இடி விழுந்துவிட்டது. அதனுல் அது உடைந்து மூழ்கியது. ஒடிஸிய

ஸின் ஆட்கள் எல்லோரும் கடலில் மூழ்கி விட்டார்கள். ஒடிஸியஸ் மட்டுமே உயிர் தப்பிக் கரையை அடைந்தார். கடற்கரையில் சாகும் தருவாயில் அவர் பேச்சு மூச்சின்றிப் படுத்துக் கிடந்தார். அப்போது அந்தத் தேசத்து அரசகுமாரி தன்னுடைய தோழிமாரோடு கடற்கரையில் விளையாடிக்கொண்டிருந்தாள். அவள் மூர்ச்சையாகப் படுத்திருந்த ஒடிஸியஸைக் கண்டாள். அவளும் அவள் தோழிமாரும் அவர்மீது இரக்கம் கொண்டார்கள். அவரை அரண்மனைக்கு எடுத்துக்கொண்டு போனார்கள். அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்கள். வேண்டிய உணவும் உடையும் கொடுத்தார்கள். கடைசியில் அந்தத் தேசத்து அரசன் தன் கப்பல் ஒன்றை ஒடிஸியஸுக்குக் கொடுத்து வழி அனுப்பினான். ஒடிஸியஸ் அந்தக் கப்பலில் தம்முடைய தாய் நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்.

ஒடிஸியஸ் இருபது ஆண்டுக் காலமாகத் தம்முடைய தாய் நாட்டில் இல்லை. இதற்குள்ளாக அங்கு எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. இருந்தாலும் ஒடிஸியஸின் மனைவியான பீனலோப் மட்டும் தன் கணவர் எப்படியும் வந்துவிடுவார் என்ற நம்பிக்கையில் இருந்தாள். மற்றக் கப்பல்கள் எல்லாம் டிராயிலிருந்து ஹெலென் அரசியோடு திரும்பி வந்ததும், அவைகளில் இருந்தவர்கள் ஒடிஸியஸ் காணமல் போன விஷயத்தைப் பீனலோப்பிடம் சொன்னார்கள்: "நடுக் கடலில் அவருடைய கப்பல் புயலில் சிக்கிக் கொண்டது; வழியிலிருந்து விலகி நெடுந்தூரம் போய் விட்டது; ஒடிஸியஸ் கடலுக்குள் மூழ்கிச் செத்திருக்க வேண்டும்", என்று அவர்கள் பீனலோப்பிடம் தெரிவித்தார்கள். திரும்பி வந்தவர்களில் சிலர் பீனலோப்பிடம் சென்று, அவள் தங்களில் யாரையாவது ஒருவரை மணம் செய்துகொள்ள வேண்டும் என்று கூறினார்கள். அவள் யாரை மணந்து கொள்ளுகிருளோ அவர் ஒடிஸியஸின் இடத்தில் அரசராக இருக்கவேண்டும் என்றார்கள். ஆனல் ஒடிஸியஸ் செத்து விட்டிருக்கலாம் என்பதைப் பீனலோப்பால் நம்ப இயலவில்லை. ஆகையால் மறுபடியும் மணம் புரிய அவள் விரும்பவில்லை. ஆனல், மற்றவர்கள் விடாமல்,

அவள் மறுமணம் செய்து கொள்ளவே வேண்டும் என்று அடிக்கடி தொந்தரவு செய்து வந்தார்கள். ஆகையால் அவள் ஒரு சூழ்ச்சி செய்தாள். "நான் ஒரு துணியை நெய்துகொண்டிருக்கிறேன். அதை நெய்து முடித்ததும் நான் மறுமணம் செய்து கொள்ளுகிறேன்", என்ருள். இப்படிச் சொல்லிய பிறகு பகலில் நெய்த துணி முழுவதையும், ஒருவருக்கும் தெரியாமல் இரவு நேரத்தில் பிரித்து விடு வாள்.அதனுல் அத்துணி நெய்யப்படாமலேயே இருந்தது.

ஒடிஸியஸ் கடைசியாகத் தம்முடைய தாய் நாட்டை அடைந்தார்; தம்மை யாரும் அடையாளம் கண்டுபிடிக்க முடியாது என்று நினைத்தார். காரணம் அவர் மிகவும் கிழவராக மாறிவிட்டிருந்ததுதான். ஆகையால் அவர் ஒரு கிழப் பிச்சைக்காரன் போல வேஷம் போட்டுக்கொண்டார்; அந்தக் கோலத்திலேயே அரண்மனை வாயிலை அடைந்தார். வாயில் காவலாளி அவரை உள்ளே விடமுடியாது என்று சொல்லிவிட்டான். ஆனுல் ஒரு கிழட்டு நாய் அப்போது கோட்டைக்கு வெளியே வெயிலில் படுத்துக்கொண்டிருந் தது. அந்த நாய் ஒடிஸியஸின் பழைய வேட்டை நாய். அது அவரைக் கண்டவுடன் அடையாளம் கண்டு கொண் டது. புது ஆளாக இருந்தால் அந்த நாய் அவரைப் பார்த்துக் குரைத்திருக்கும். ஆனுல் அவர் அதன் பழைய எசமானர் ஆகையால் அது குரைப்பதற்குப் பதிலாக வாலை ஆட்டிக் கொண்டு ஒடிஸியஸிடம் வந்தது; அவர் கையை நாக்கால் நக்கியது. இதைக் கண்டு கோட்டைக் காவல்காரன் ஆச்சரியப்பட்டான். நடந்ததை எல்லாம் பீனலோப்புக்கு ஓர் ஆளின் மூலம் தெரிவித்தான். அரண்மனைக்கு வெளியே நின்ற பிச்சைக்காரன் யார் என்பது அவளுக்குத் தெரியாது. ஆனுல், ஒடிஸியஸின் வளர்ப்புத் தாயைக் கொஞ்சம் சாப்பாட்டுடன் அனுப்பி வைத்தாள். அவள் ஒடிஸியஸைக் கண்டவுடன் அடையாளம் கண்டு கொண்டாள். அவருடைய வலது காலில் ஒரு தழும்பு இருந்தது. அதைப் பார்த்தவுடனே அவளுக்கு வந்திருப்பவர் ஒடிஸியஸ்தான் என்பது விளங்கி விட்டது. ஒடிஸியஸை அழைத்துக்கொண்டு அவள் அரண் மனைக்குப் போனுள்; பிறகு பீனலோப் இருந்த இடத்துக்கு அழைத்துச் சென்ருள்.

கடைசியில் ஒடிஸியஸின் துன்பங்கள் எல்லாம் ஒரு முடிவுக்கு வந்தன. பீனலோப்பின் மன உறுதி வீண் போக வில்லை. அவர்கள் மகனான டெலிமாகஸ் இப்போது பெரியவ னாக வளர்ந்திருந்தான். ஒடிஸியஸ் தம் மனைவியோடும் மகனோடும் நீண்ட காலம் இன்பமாக வாழ்க்கை நடத்தினார்.

## 6. கௌதம புத்தர் (கி. மு. 623-543)

சிறிய ஆசியா என்ற இடத்தில் ஈசப் பிறந்து மூன்று ஆண்டுகளுக்குப் பின் இந்தியாவில் ஒரு புகழ் வாய்ந்த குழந்தை பிறந்தது. அது கபிலவஸ்து என்ற நகரத்தின் அரசருக்குப் பிறந்தது. பல ஆண்டுகளாக அக் குழந்தையின் பெற்றோருக்குப் பிள்ளைப் பேறே இல்லாமல் இருந்தது. ஆனால் இராணியின் நாற்பத்தைந்தாவது வயதில் அந்தக் குழந்தை பிறந்து எல்லோருக்கும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. அதற்குக் கௌதமர் என்று பெயர். அவர் பிறப்பை எல்லோரும் விருந் துண்டு மகிழ்ந்து கொண்டாடினர். அவர் பிறந்த சில நாளைக் கெல்லாம் அவருடைய தாயார் மரணம் அடைந்தார். தாய் இல்லாத கௌதமரை அவர் தந்தையார் கண்ணும் கருத்து மாகப் பாதுகாத்து வளர்த்தார். அரண்மனைக்கு வெளியில் அவரைப் போகவே விடவில்லை. அவ்வளவு கடினமான காவல் அரண்மனையில் வைக்கப்பட்டிருந்தது. துன்பம் தரத்தக்க காட்சி எதுவும் அவர் கண்ணில் படாதவாறு பார்த்துக் கொண்டார்கள்.

கௌதமர் அரண்மனையிலேயே நல்ல ஆசிரியர்களிடம் கல்வி பயின்றார். அவர் கெட்டிக்காரராக இருந்ததை ஆசிரி யர்கள் கண்டு மகிழ்ந்தார்கள். அவர் சிறு வயதிலேயே எல்லா வற்றையும் கற்று முடித்துவிட்டார். அவருடைய ஆசிரியர்கள் அரசரிடம் போய்க் கௌதமர் எல்லாவற்றையும் கற்றுக்கொண் டார் என்றும், அவர் கற்றுக் கொள்ளவேண்டியது ஒன்றுமே இல்லையென்றும் சொன்னார்கள். கௌதமர் இளமையை வெகு

சந்தோஷமாகக் கழித்தார். ஆனால், சிறு வயதிலேயே அரண்மனைத் தோட்டத்தில் இருந்த மரங்களுக்கிடையில் மனம் போனபடி எல்லாம் திரிவார். எங்காவது உட்கார்ந்துகொண்டு அமைதியாகப் பல விஷயங்களைப் பற்றிச் சிந்திப்பார்.

கௌதமரின் பத்தொன்பதாவது வயதில் அவருக்கு மணம் ஆனது. தம் தாயாருடைய அண்ணன் மகளையே அவர் மணந்து கொண்டார். அவர் மனைவி மிகமிக அழகானவர். மணம் ஆனதும் கௌதமர் சிற்றின்பப் பிரியராக இருந்தார். பலவகைக் கேளிக்கைகளில் மனதைப் பறிகொடுத்தார். இதைக் கண்டு அவர் குடும்பத்தவர்கள் கவலை கொண்டார்கள்; கௌதமரின் போக்கைப்பற்றி அவர்கள் அவர் தகப்பனாரிடம் கூறினார்கள்.

தம் மகனுடைய திறமைகளைச் சோதிக்க அவர் தந்தையார் விரும்பினார். தம் இனத்தவரான ஐந்நூறு இளைஞர்களை அவர் வரவழைத்தார்; அவர்களுக்குள்ளே பலவகைப் போட்டிப் பந்தயங்கள் ஏற்படுத்தினார். கௌதமர் படிப்பில் மட்டும் அல்லாமல், அம்பெய்தல், குஸ்தி போடுதல் முதலியவைகளிலும் அந்த ஐந்நூறு இளைஞர்களையும் தோற்கடித்தார்.

ஆனால் இவைகளால் எல்லாம் கௌதமருக்கு மன நிம்மதி உண்டாகவில்லை. அவர் அடிக்கடி களிப்பில்லாமலும், கவலையோடும் இருப்பதைக் கண்டு அவர் தகப்பனார் மிகுந்த கவலைக்குள்ளானார். பின்னர் கௌதமர் மூன்று காட்சிகளைக் காண நேர்ந்தது. இத்தகைய காட்சிகள் அவர் கண்ணில் படாதவாறு மறைக்கப்பட்டுவந்தன. புதிதாக அவர் கண்ட அந்த மூன்று காட்சிகளும் அவர் மனத்தை அலைக் கழித்தன. ஒரு நாள் நடக்க முடியாமல் தள்ளாடித் தள்ளாடி நடந்துபோன ஒரு கிழவனைக் கண்டார். அவன் ஓர் ஊன்று கோலை ஊன்றிக்கொண்டு விழுந்து விடுபவன் போல நடந்து சென்றான். அவனுக்கு என்ன நேர்ந்தது, ஏன் அவன் அப்படி நடந்து போகிறான் என்று கௌதமர் தம்மோடு வந்தவர்களைக் கேட்டார். அவர்கள் அவன் அப்படி நடப்பதற்கு அவன் கிழப் பருவமே காரணம் என்றும், உலகில் உள்ள ஒவ்வோர் ஆணும் பெண்ணும் என்றைக்காவது மூப்பு அடைந்தே தீருவார்கள் என்றும் சொன்னார்கள்.

இன்னெரு நாள் காய்ச்சலால் வருந்திக் கொண்டிருந்த நோயாளி ஒருவனைக் கௌதமர் கண்டார். அவன் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. மிகுந்த பிரயாசையோடு அவன் மூச்சு விட்டான். அவன் முகம் மஞ்சள் நிறமடைந்திருந்தது ; அது அவன் மிகுந்த வேதனையை அனுபவிக்கிருன் என்பதைக் காட்டியது. கௌதமர் அதற்கு முன்னுல் எந்த நோயாளியையும் கண்ணுல் கண்டதே கிடையாது. ஆகையால் அந்த நோயாளியைக் கண்டதும் அவர் உள்ளம் மிகவும் வருந்தியது. உயிரோடு வாழும் ஒவ்வொருவனுக்கும் என்றைக்காவது ஒரு நாள் நோய் வந்தே தீரும் என்பதை அறிந்தவுடன் அவருடைய மனம் மேலும் வேதனையுற்றது.

கடைசியாக, ஒரு பிணம் வழி ஓரத்தில் கிடந்ததைக் கௌதமர் பார்த்தார். பின் அதைப்பற்றிக் கேட்டு இறப்பைப் பற்றித் தெரிந்து கொண்டார். வாழும் ஒவ்வொரு மனிதனும் கடைசியில் செத்தே தீரவேண்டும் என்பதை அறிந்து துக்கப் பட்டார். இந்தக் காட்சிகள் எல்லாம் அவரைச் சிந்திக்கச் செய்தன ; இடைவிடாமல் வேதனையைக் கொடுத்தன. அதனுலேயே அவர் இன்ப வாழ்க்கையில் நிலைத்திருந்த போதும்கூட அவருக்கு மன அமைதி உண்டாகவேயில்லை.

மக்கள் வாழ்க்கையைப் பற்றி முழுவதும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆவல் கௌதமர் மனத்தில் எழுந்தது. மக்கள் துன்பங்களுக்கெல்லாம் ஒரு முடிவு காண அவர் முயற்சி செய்தார். வீட்டில் இருந்து வெளியேறித் தகுந்த குருநாதரைக் கண்டுபிடித்து அவரிடம் இருந்து வாழ்க்கையைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்று முடிவு செய்து கொண்டார். அவர் தகப்பனுர் அரண்மனையில் இருந்த எவராலும் அவர் கேட்ட கேள்விகளுக்குச் சரியான விடை சொல்ல முடியவில்லை. ஆகையால், ஜூலை மாதம் ஒரு வெண்ணிலா இரவில் கௌதமர் சத்தம் செய்யாமல் படுக்கையை விட்டு எழுந்தார். தம் மனைவி படுத்துக் கொண்டிருந்த அறையின் கதவைத் திறந்தார். அந்த அம்மையார் சிறிது காலத்துக்கு முன்புதான் பிறந்த குழந்தையுடன் நன்குகத் தூங்கிக்கொண்டிருந்தார். கௌதமர் சத்தம் செய்யாமல் சிறிது நேரம் அவர்களைப் பார்த்துக்

கொண்டு நின்றார் ; பேச்சின்றியே அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டார் ; தம் கேள்விகள் எல்லாவற்றிற்கும் சரியான விடைகளைக் கண்டு பிடிக்கும் வரை வீட்டுக்குத் திரும்புவது இல்லையென்று உறுதி செய்துகொண்டார். பிறகு அரண்மனையிலிருந்து வெளியேறினார் ; அவர் தம்முடன் ஒன்றையும் எடுத்துப்போகவில்லை ; உடுத்த உடையோடு சென்றார் ; தமக்கு அன்பான தேர்ப்பாகனை மட்டும் தம்மோடு அழைத்துக் கொண்டு போனார்.

பொழுது விடிந்தது ; அதற்குள் கௌதமர் அரண்மனையை விட்டு வெகு தொலைவு போய் விட்டார். அவர் தகப்பனார் எங்கெல்லாமோ தேடினார் ; ஆனால் கௌதமரைக் கண்டு பிடிக்க முடியவே இல்லை. சில நாட்கள் தேரில் பிரயாணம் செய்த பிறகு, கௌதமர் தம் தேர்ப்பாகனையும் அரண்மனைக்கே திருப்பி அனுப்பிவிட்டார் ; தாம் மட்டும் தனியே பிரயாணம் செய்தார். தம்முடைய நீண்ட தலைமுடியை வெட்டி எறிந்தார். தாம் உடுத்தி இருந்த விலை மிகுந்த உடைகளை யெல்லாம் கழற்றிவிட்டு ஒரு தோல் ஆடையை மட்டும் அணிந்துகொண்டார். வட இந்தியாவில் உள்ள கிராமங்கள், நகரங்களில் எல்லாம் அவர் அலைந்து திரிந்தார். தம் கேள்விகளுக்கு ஏற்ற விடைகள் எங்கே கிடைக்கும் என்று ஆராய்ந்தார்.

கௌதமர் பல அறிவாளிகளிடம் சென்று பேசினார். பல குருமார்களோடு சம்பாஷணை செய்தார். என்றாலும் அவருடைய கேள்விகளுக்கு விடை கிடைக்கவே இல்லை. ஆகையால் கடைசியில் குருமாரைத் தேடி அலைகின்ற பணியை விட்டு விட்டார். வாழ்க்கையின் உண்மையைக் கண்டு பிடிக்கும் நோக்கத்தோடு கௌதமர் தனியாகக் காட்டுக்குள் நுழைந்து பிரயாணம் செய்தார். அமைதியாகச் சிந்திப்பதன் மூலம் சந்தோஷத்தின் இரகசியத்தைக் கண்டு பிடிக்க முயற்சி செய்தார். ஆறு ஆண்டுக் காலம் சிந்தனை செய்தார். கேளிக்கை நிறைந்த இன்ப வாழ்க்கையில் அவர் சந்தோஷத்தின் இரகசியத்தை ஏற்கெனவே காணவில்லை. இப்போது அவர் பட்டினி கிடந்தும், உடலை வாட்டியும் அதைக் காண முயற்சி செய்தார். அவர் உடல் மெலிந்தது ; களைப்பு ஏற்பட்டது. இருந்தாலும் அவர் விடாப் பிடியாக

உடம்பை வாட்டினர். ஆனல், கடைசியில் உடம்பை வாட்டுவதன் மூலமும் சந்தோஷத்தின் இரகசியத்தைக் காணமுடியாது என்று கண்டு கொண்டார்.

ஆகையால் அவர் காடுகளிலிருந்து திரும்பி வந்து மறுபடியும் கிராமம் கிராமமாகச் சுற்றி அலேந்தார். ஒரு நாள் வெயில் உக்கிரமாகக் காய்ந்துகொண்டிருந்தது. அப்போது கௌதமர் ஊருக்கு வெளியே ஓர் அரச மரத்தடியின் கீழ் உட்கார்ந்து சிந்திக்கத் தொடங்கினர். அன்று முழுவதும், இரவிலும்கூட அங்கேயே அமர்ந்திருந்தார்; பொழுது விடிந்ததும் அவ்வளவு காலமாக அவர் தேடிக்கொண்டிருந்த விடை திடீர் என்று அவருக்கு உதயம் ஆனது. இரவில் சிந்தித்துக் கொண்டிருந்தபோது, மற்றவர்களுக்காகத் தம்மை முழுதும் அர்ப்பணம் செய்து கொள்வதன் மூலம்தான் தாம் சந்தோஷத்தைக் காணமுடியும் என்ற எண்ணம் அவருக்கு உதித்தது. அதுமுதல் கௌதமர் தம்முடைய வாழ்க்கை முழுவதையும் தாம் கண்டறிந்த உண்மைகளே மக்களுக்குப் போதிப்பதிலேயே செலவிட்டார்.

தாம் ஒரு கடுமையான வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்திருப்பதைக் கௌதமர் விரைவில் உணர்ந்தார். தன்னலத்தை முற்றிலும் விட்டுவிட்டு மற்றவர்களுக்காகவே ஒருவன் வாழ்க்கை நடத்துவது என்பது உண்மையில் மிகவும் கடினமானதுதான். அத்தகைய மனிதனுக ஒருவன் ஆகவேண்டுமானல், அவன் எவ்வகைப் பாதையைப் பின்பற்றிச் சந்தோஷமாக வாழவேண்டும் என்று கௌதமர் கூறினர். அவர் கூறிய எண்வகைப் பாதைகளாவன: (1) தூய எண்ணம், (2) தூய நோக்கம், (3) தூய சொற்கள், (4) தூய செயல்கள், (5) தூய வாழ்க்கை, (6) தூய முயற்சி, (7) தூய நினைவு, (8) தூய அமைதி என்பன. இந்த எண் வகைப் பாதையில் ஒருவன் தன் வாழ்வை நடத்தினல், அவன் எல்லாவித ஆசைகளேயும் வென்றுவிடுவான்; உண்மையான சந்தோஷத்தையும், அமைதியையும் அனுபவிப்பான். பிறகு அவன் தனக்கென்று எதையும் வைத்துக்கொள்ளமாட்டான்; மற்றவர்களுடைய நன்மைக்காகவே வாழ்வான்.

கௌதமர் மீதியிருந்த தம்முடைய வாழ்நாள் முழுவதும்

சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகள் தாம் கண்டறிந்த உண்மைகளை மக்களுக்குப் போதித்துக்கொண்டே இருந்தார். வட இந்தியா முழுவதும் கௌதமரின் பெயரும் புகழும் பரவின. நூற்றுக் கணக்கான மக்கள் கௌதமரிடம் வந்தார்கள். அவர் முகத்தில் குடிகொண்டிருந்த அமைதியையும், கருணையையும் கண்டு பிரமித்துப் போனார்கள். அவர்கள் கௌதமருக்குப் 'புத்தர்' என்ற பெயரைக் கொடுத்தார்கள் ; புத்தர் என்றால் மெய்யொளியைக் கண்டவர் என்பது பொருள். அதுமுதல் அவருக்குக் கௌதம புத்தர் என்ற பெயர் வழங்கியது.

புத்தர் தம்முடைய கொள்கைகளைப் பரப்பத் தொடங்கிய சிறிது காலத்துக்கெல்லாம், இச் செய்தி அவர் தகப்பனாருக்கு எட்டியது. அவர் தம் ஆட்களை அனுப்பிப் புத்தரை வீட்டுக்குத் திரும்புமாறு அழைத்தார். புத்தர் கபிலவஸ்துவுக்குத் திரும்பினார் ; ஆனால் அரண்மனைக்குள் வரவில்லை. கபில வஸ்துவின் தெருக்களில் புத்தர் பிச்சை எடுக்கும் செய்தி அவர் தகப்பனாருக்குத் தெரிந்தது. அவருக்குக் குழப்பம் உண்டானது. அவர் தாமே புத்தரிடம் நேரில் வந்தார். புத்தர் தம் தந்தையைக் கண்டதும், "அப்பா, நீங்களும், உங்கள் குடும்பத்தாரும் அரச பரம்பரையில் பிறந்தவர்கள் ; அதற்கேற்ற உரிமைகளைக் கொண்டாடுகிறீர்கள். நானோ பழங்கால மெய்ஞ்ஞானிகள் பரம்பரையில் வந்தவன். மெய்ஞ்ஞானிகள் நடந்த வழியிலேயே நானும் நடக்கவேண்டியவன். சட்டங் களும் பழக்கங்களும் நாட்டுக்கு நல்லவையே. ஆனால் ஒருவன் பெறுவதற்கு அருமையான செல்வங்களைப் பெற்றால், அவன் அந்தச் செல்வங்களில் எல்லாம் மிகவும் சிறந்ததாய் இருப் பதைத் தன் தந்தைக்குக் கொடுக்கக் கடமைப்பட்டவன். ஆகையால் நான் சம்பாதித்துள்ள செல்வங்களை உங்களோடு பகிர்ந்துகொள்ள அனுமதி கொடுக்கவேண்டும்," என்றார். இவ்விதம் தாம் கண்டறிந்த உண்மைகளைத் தம் தந்தையாருக் குப் போதிக்கப் புத்தர் முயற்சி செய்தார். ஆனால் அவர் தகப்பனாரோ புத்தர் கொள்கைகளை ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால் புத்தர் அரண்மனைக்குத் திரும்ப முடியாது என்று சொல்லிவிட்டு நாடு முழுவதும் திரிந்து பிரசாரம் செய்வதற்குப் புறப்பட்டார்.

புத்தர் ஒரு புதிய மதத்தையே ஸ்தாபித்துவிட்டார். அவருக்குப் பின்னுல் அந்த மதத்துக்குப் புத்த மதம் அல்லது பௌத்தம் என்ற பெயர் ஏற்பட்டது. இன்றைக்கு இந்தியா இலங்கை, சைனு, மலேயா முதலிய நாடுகளில் பல்லாயிரக் கணக்கான மக்கள் பௌத்த மதத்திலே நம்பிக்கை வைத்து வாழ்கிருர்கள்.

புத்தர் தம்முடைய எண்பதாவது வயதில் பாவா என்ற கிராமத்துக்கு வந்தார். அது காசிக்குப் பக்கத்தில் இருக்கிறது. அங்கு ஒரு மாமரத்தின் அடியில் ஓய்வு கொள்வதற்காக அவர் அமர்ந்தார். குந்தன் என்ற ஒரு கிராமவாசி அவருக்கு உணவு கொண்டு வந்தான். உணவில் ஏதோ ஒருவகையான விஷம் இருந்தது. அதனுல் புத்தர் நோயால் படுத்தார். கிராமவாசிகள் எல்லோரும் உணவு கொடுத்த குந்தன்மீது கோபம் கொண்டு பழிக்குப் பழி வாங்கத் துடித்தார்கள். ஆனுல் கௌதமர் அவர்கள் ஆத்திரத்தை எல்லாம் அடக்கினுர். தம்மூலம் யாருக்கும் எந்தவிதத் தீமையும் ஏற்படக் கூடாது என்று புத்தர் எண்ணினுர். அவருடைய நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது. விரைவில் தாம் மாண்டுபோவது நிச்சயம் என்பதை அவர் உணர்ந்தார்; அவர் தம் சீடர்களை எல்லாம் தம்முடைய படுக்கையின் அருகில் அழைத்தார். "நான் போன பிறகு உண்மையே உங்களுடைய குரு," என்று சொல்லிவிட்டு நிர்வாணம் அடைந்தார்.

இங்ஙனம் புத்தர் மறைந்தார். ஆனுல் அவருடைய போதனைகள் இன்றைக்கும் நிலைத்தோங்குகின்றன. ஆசியாக் கண்டத்தில் நூற்றுக் கணக்கான நகரங்களிலும், கிராமங் களிலும் புத்தருக்குக் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு கோயிலிலும் ஒரு புத்தர் சிலையைக் காணலாம்.

# 7. ஈசப் (பிறப்பு கி. மு. 620)

ஈசப் ஓர் அடிமையாகப் பிறந்தார். எனினும் அவருடைய புகழ் எங்கும் பரவியது. சிறிய ஆசியா என்ற தேசத்தில் இரண்டு கிரேக்க அடிமைகள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்குத் தான் ஈசப் பிறந்தார். ஈசப் வளர்ந்து பெரியவர் ஆனதும், அவருடைய எசமானர் அவரை ஏதன்ஸ் பட்டணத்துக்குக் கூட்டிக் கொண்டு போனார். ஏதன்ஸ் கிரேக்கப் பட்டணங்களிலேயே மிகவும் அழகானது. மிகவும் புகழ் வாய்ந்தது. அந்தப் பட்டணத்தில் அடிமைச் சந்தைக்கு ஈசப் கொண்டு போகப் பட்டார். அந்தச் சந்தையில் ஈசப்பின் எசமானர் அவரை விலைக்கு விற்று விட்டார். ஈசப் பல எசமானர்களிடம் வேலை செய்தார். கடைசியில் இயத்மன் என்ற கிரேக்கப் பணக்காரர் ஈசப்பை வாங்கினார். ஈசப் அவரிடம் உண்மையுடன் நடந்து கொண்டார். அதனால் இயத்மனும் ஈசப்பின் மீது அன்பு கொண்டு நம்பிக்கை வைத்தார். ஈசப் சிறு சிறு கதைகள் சொல்வதில் சமர்த்தர். அவர் எசமானின் அன்புக்கு இந்தச் சக்தியும் ஒரு காரணமாக இருக்கலாம்.

கதைகளின் மூலம் மக்கள் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம்; மற்ற வழிகளில் தெரிந்து கொள்ள முடியாத விஷயங்களையும் அவற்றின் மூலம் தெரிந்து கொள்ளலாம். விரும்பத்தகாத சில விஷயங்களையும் கதைகள் மூலம் சொன்னால் எல்லோரும் மனச் சங்கடமின்றிக் கேட்பார்கள். இவை எல்லாம் ஈசப்புக்கு நன்றாகத் தெரியும். இயத்மனுக்கு ஈசப்பின்மீது அன்பு பிறந்தது. கடைசியில் ஈசப்புக்கு விடுதலையே கொடுத்து விட்டார். ஈசப் இப்போது அடிமை இல்லை. இயத்மன் இறந்த பிறகு ஈசப் கிரீஸ் தேசத்தை விட்டுப் புறப்பட்டார். தாம் பிறந்த சிறிய ஆசியாவுக்குச் சென்றார்.

ஈசப் லிடியா தேசத்தை அடைந்தார்; அந்த நாட்டு மன்னன் க்ரீஸஸிடம் வேலையில் அமர்ந்தார். ஈசப்பின் புகழ் அவருடைய கதைகளின் மூலம் நாடெங்கும் பரவியது. அவ்வப்போது தம்முடைய கதைகளின் மூலம் அவர் க்ரீஸ-

ஸுக்கு நல்ல புத்திமதிகளைக் கூறுவார். க்ரீஸஸ் மன்னனின் நம்பிக்கைக்கு அவர் பாத்திரமானர். அது முதல் க்ரீஸஸ் வாழ்ந்த வரையில், அந்த மன்னனிடம் மிகுந்த விசுவாசத்தோடு நடந்து கொண்டார். ஈசப்பினுடைய புத்திக் கூர்மையையும் திறமையையும் க்ரீஸஸ் வெகுவாகப் பாராட்டினன்; தொலை நாடுகளுக்குத் தூது அனுப்புவதாக இருந்தால், ஈசப்பைத்தான் அவன் அனுப்புவது வழக்கம். ஒருமுறை டெல்பி என்ற கிரேக்க நகரத்துக்கு ஈசப் தூது



போனர். அந்தப் பட்டணத்தில் வாழ்ந்த மக்களுக்குக் கொடுப்பதற்காகக் க்ரீஸஸ் ஈசப்பிடம் நிறைய பணம் கொடுத்தனுப்பினர். ஈசப் டெல்பியை அடைந்தார். தாம் கொண்டு வந்த செல்வத்தை மக்களுக்குப் பகிர்ந்து கொடுக்கத் தொடங்கினர்; பிரித்துக் கொடுப்பதில் சச்சரவு ஏற்பட்டது. சச்சரவு தீருகின்ற வரையில் பணம் தரமுடியாது என்று ஈசப் சொல்லிவிட்டார். இதனல் அந்தப் பட்டணத்து மக்கள் மிகவும் கோபம் கொண்டார்கள். அவர்கள் ஈசப்பைப் பிடித்துக் கட்டினர்கள்; ஓர் உயரமான மலைக்கு அவரைத் தூக்கிக்

கொண்டு போனர்கள்; அந்த மலையிலிருந்து உருட்டி அவரைக் கொன்று விட்டார்கள்.

ஈசப் மறைந்தாலும் அவருடைய கதைகள் மறையவில்லை. அந்தக் கதைகள் எல்லாம் ஒன்ருகத் திரட்டப் பட்டன. எழுத்தில் எழுதி வைக்கப்பட்டன. ஆகையால், இன்றைக்கும் நாம் ஈசப்பின் கதைகளைப் படித்து அனுபவிக்க முடிகிறது. கீழே சில சிறந்த கதைகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் எப்பொருள்களை ஈசப் கற்பிக்க விரும்பினுர் என்பதை நீங்களே ஊகித்துத் தெரிந்துகொள்ளலாம்.

1

முன் ஒரு காலத்தில் நான்கு எருதுகள் வசித்து வந்தன. அவை நான்கும் ஒற்றுமையாயிருந்தன. அவை ஒன்ருகவே கூடி ஓர் இடத்திலேயே புல் மேய்ந்து வந்தன. அவை மேய்ந்த இடத்துக்கு அருகில் ஒரு சிங்கத்தினுடைய குகை இருந்தது. எருதுகள் நான்கும் நாள்தோறும் ஒன்ருகப் புல் மேயப் போவதைச் சிங்கம் பார்த்தது. அதன் வாயில் நீர் ஊறியது. எப்படியாவது அந்த எருதுகளைக் கொன்று தின்ன வேண்டுமென்று எண்ணியது. ஆனல் அந்த நான்கு எருதுகளும் மிகவும் பலம் வாய்ந்தவை. அதனல், அவைகளுக்கு எதிரில் வரச் சிங்கம் பயப்பட்டது.

அந்தச் சிங்கம் தந்திரம் உள்ளது. நான்கு எருதுகளின் நட்பைக் கலைக்க ஓர் உபாயத்தை எண்ணியது. அதன்படி ஒருநாள் ஓர் எருதிடம் வந்து மற்ற எருதுகளைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாகக் கட்டி விட்டது. இதனல் எருதுகளுக்குள் ஒற்றுமை குலைந்து போனது; ஒன்றுடொன்று பொருமை கொண்டன. அவை ஒன்று கூடிப் போகாமல் தனித்தனியே போய்ப் புல் மேயத் தொடங்கின. இது சிங்கத்துக்கு நல்லதாகப் போயிற்று. அது ஒவ்வொரு எருதாக அடித்துத் தின்று விட்டது. இவ்விதமாகக் கடைசியில் நான்கு எருதுகளும் தம் உயிரை இழந்தன.

## 2

ஒரு காலத்தில் ஒரு குடியானவன் வாழ்ந்து வந்தான்; அவனுக்கு இரண்டு மைந்தர்கள் இருந்தார்கள். அவன் இறக்கும் தருவாயில் தன் மைந்தர்களைப் படுக்கைக்கு அருகே அழைத்தான். கடைசி முறையாகச் சில விஷயங்களை அவர்களுக்குச் சொல்ல விரும்பினன். " என் அருமை மைந்தர்களே! நான் என் நிலத்தை உங்களுக்கு விட்டு விட்டுப் போகிறேன். அதை நீங்களே உங்களுக்குள் பங்கிட்டுக் கொள்ளுங்கள். எந்தக் காரணத்தைக் கொண்டும் யாருக்கும் அந்த நிலத்தைக் கொடுக்க வேண்டாம்; விலைக்கு விற்று விடவும் வேண்டாம். நான் சம்பாதித்த பொருள் எல்லாவற்றையும் அந்த நிலத்தில்தான் புதைத்து வைத்திருக்கிறேன்; நிலத்தைக் கொஞ்சம் தோண்டித் தேடினல் அது கிடைக்கும்," என்ருன்.

இரண்டு மைந்தர்களும் சந்தோஷப் பட்டார்கள். தம் தகப்பனர் தங்கத்தையோ, இரத்தினங்களையோ நிலத்தில் புதைத்து வைத்திருக்கிருர் என்று நினைத்தார்கள். அவர்கள் தகப்பனர் மாண்டு போனர். உடனே அவர்கள் நிலம் முழுவதையும் தோண்டினர்கள்; புதைத்து வைத்த செல்வம் கிடைக்கும்; வெகு சீக்கிரத்தில் பணக்காரர் ஆய்விடலாம் என்று நிலம் முழுவதும் தோண்டி விட்டார்கள். ஆனல் அவர்களுக்கு எந்த விதமான புதையலும் கிடைக்கவில்லை. இருந்தாலும் நிலம் முழுவதும் நன்ருகத் தோண்டப்பட்டுவிட்டதால் அது வளம் கொழிக்கும் நிலம் ஆயிற்று; நல்ல விளைச்சலைக் கொடுத்தது. நிறைய தானியம் கிடைத்தது; அதை இரண்டு மைந்தர்களும் கடைத் தெருவில் நல்ல விலைக்கு விற்ருர்கள். இவ்வாறு அவர்கள் தாங்கள் எதிர்பார்த்த வழியில் இல்லாவிட்டாலும், வேருெரு வகையில் பணக்காரர்கள் ஆனர்கள்.

## 3

ஒரு காலத்தில் ஒரு கிராமத்தில் நிறைய பெட்டைக் கோழிகள் ஒன்ருகச் சேர்ந்து வாழ்ந்து வந்தன. அவைகளில் சில

கொழுத்திருந்தன; பெரியவையாகவும் ஆரோக்கியமாகவும் இருந்தன. ஆனால் மற்றக் கோழிகளோ மெலிந்தும் எலும்பில் சதை இல்லாமலும் இருந்தன. கொழுத்திருந்த கோழிகள் எல்லாம் தம் உடலைப் பார்த்துப் பெருமையும் கர்வமும் கொண்டன. மெலிந்திருந்த கோழிகளைப் பார்த்துக் கேலியும் கிண்டலும் செய்தன.

ஒரு நாள் சில புதிய மனிதர்கள் கிராமத்துக்கு வந்தார்கள். அவர்களுக்கு ஒரு விருந்து வைக்கக் கிராம மக்கள் நினைத்தார்கள்; ஆகையால் சில கோழிகளைப் பிடித்துக் கொன்று சமையல் செய்யும்படி சமையற்காரர்களுக்கு அவர்கள் கட்டளை யிட்டார்கள். கோழிகளைப் பிடிப்பதற்காகச் சமையற்காரர்கள் வெளியே போய்த் தேடினார்கள். கொழுத்த கோழிகளையும், பெரிய கோழிகளையும் சமையற்காரர்கள் தேர்ந்தெடுத்தார்கள்; அவைகளை எல்லாம் கொன்று விருந்து சமைத்தார்கள். சாவதற்குமுன் கொழுத்த கோழிகள் எல்லாம் மெலிந்த கோழிகளைப் பார்த்துப் பொருமைப்பட்டன. தாங்களும் மெலிந்திருந்தால் இன்னும் உலகத்தில் உயிர் வாழலாமே என்று வருத்தப்பட்டன.

4

முன்னொரு காலத்தில் ஒரு கிராமத்தில் ஒரு பையன் இருந்தான். அவன் அந்தக் கிராமத்து ஆடுகளை எல்லாம் மேய்த்து வந்தான். வேறு வேலை ஒன்றும் இல்லாமல் ஒரே இடத்தில் உட்கார்ந்து கொண்டு ஆடுகளைப் பார்த்துக் கொண்டு இருப்பது அவனுக்கு அலுப்பாயிருந்தது. ஆகையால் ஒரு நாள் அவன் திடீரென்று, “புலி, புலி!” என்று கத்தினான். அப்போது பக்கத்து வயலில் சில கிராமத்து மக்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் வேலையை அப்படியே போட்டு விட்டு ஓடி வந்தார்கள். பையனிடம் வந்து பார்த்தபோது புலியுமில்லை எதுவுமில்லை. வந்தவர்கள் எல்லோரும் பையனைக் கண்டபடி ஏசிவிட்டுத் திரும்பினார்கள்.

அந்தப் பையன் இப்படியே பலதடவை கிராமத்து மக்களை ஏமாற்றிவிட்டான். ஆகவே, கடைசியில், பையன் எப்படித்

தான் கத்தினுலும் திரும்பிப் பார்ப்பது இல்லை என்று கிராமத்து மக்கள் முடிவு செய்து கொண்டார்கள். மற்ருெரு நாள் பையன் ஆடு மேய்த்துக்கொண்டிருந்தபோது உண்மையாகவே புலி வந்து விட்டது; அது ஆடுகளின் மேல் பாய்ந்து அவற்றைக் கொல்லத் தொடங்கியது. பையன் உரத்த தொண்டையில், "புலி ! புலி !" என்று கத்தினுன். அவன் வழக்கம் போல் ஏமாற்றுவதற்காகவே அப்படிக் கத்துகிருன் என்று கிராம மக்கள் நினைத்தார்கள். அதனுல் யாரும் அவன் பக்கம் திரும்பவில்லை. ஆகையால், புலி எல்லா ஆடுகளையும் கொன்று விட்டது.

## 8. பேரரசன் சைரஸ் (இறப்பு கி. மு. 529)

ஆசியாவின் மலைப் பகுதியில் ஒரு விவசாயக் கூட்டம் வாழ்ந்து வந்தது. அதற்குப் பாரசீக இனம் என்று பெயர். பாரசீகர்கள் நல்ல உழைப்பாளிகள். அவர்களுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. என்ருலும், அவர்கள் தம் முன்னேர்களைப் பற்றிப் பல கதைகளை வாய்மொழியாகவே சொல்லிக்கொண்டு வந்தார்கள். அவர்களுக்குத் தம்முடைய மதத்தில் பற்று அதிகம். அவர்களுக்கு ஜோராஸ்டர் என்ற ஒரு மதகுரு இருந்தார். அவர் அவர்களுக்குப் பல உண்மைகளைக் கற்றுக் கொடுத்தார். ஆரிமன் என்ருெரு குட்டிச்சாத்தான் இருக்கிறது என்றும், மக்கள் நல்ல காரியங்களைச் செய்யாதபடி அது தடுக்கிறது என்றும் சொன்னுர். ஆனுல் அவர்களுடைய தெய்வமான ஆஹுர மஜ்டா நல்ல காரியங்களை விரும்புகின்ற கடவுள். மக்கள் உண்மையுடனும் நம்பிக்கையுடனும் கீழ்ப்படிந்து நடந்தால், அவர்களுக்கு அந்தக் கடவுள் தேவையான உதவிகளைச் செய்வார் ; அவர்களைக் காப்பாற்றுவார். ஜோராஸ்டரையும் அவர் போதனைகளையும் பற்றிப் பாரசீகர்கள் மிகவும் பெருமைப்பட்டார்கள். அவர் போதனைகளைப் பின்பற்றிப் பலம் வாய்ந்த ஒரு சிறந்த நாட்டை உருவாக்கினுர்கள். அவர்கள் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டவுடன், ஜோராஸ்டரின் போதனை

களை ஒன்று சேர்த்து எழுதி வைத்தார்கள். அப்படி எழுதப் பட்ட புத்தகத்துக்கு "அவெஸ்தா" என்று பெயர். பாரசீகரின் மதத்துக்கு அதுவே வேத புத்தகம்.

பாரசீகர்கள் சுதந்தரமாக வாழவில்லை. அவர்களுக்கு வடக்கே மீடியர்கள் என்ற இனத்தார் வாழ்ந்து வந்தார்கள். அந்த மீடியர்கள் பாரசீகர்களை அடக்கி ஆண்டு வந்தார் கள். பாரசீக மக்களுக்குள்ளேயே பல இனங்களும் பிரிவு களும் உண்டு. அவைகளில் ஒரு சிறிய இனத்தின் பெயர் ஆன்ஷன் இனம் என்பது. அந்த இனத்துக்கு ஒரு காலத்தில் சைரஸ் என்ற ஓர் இளைஞர் அரசராக இருந்தார். அவர் மிக வும் நல்லவர்; சிறந்த தைரியசாலி. தம்முடைய இனத்தா ரைப் பலம் வாய்ந்தவர்களாகச் செய்ய வேண்டும் என்பது அவருடைய எண்ணம். அந்தக் காலத்தில் பாரசீகர்கள் எல் லோரும் சிதறிப் போயிருந்தார்கள். அவர்களுக்குள்ளே பல வகுப்புக்கள் இருந்தன. அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந் தால் பலம் மிகுந்தவர்களாக வாழலாம் என்று சைரஸ் சொன் ஞர். பாரசீகர்கள் எல்லோரும் அவர் சொன்னதைக் கேட்ட னர். அவர் சொல்வதே சரி என்று முடிவு செய்தார்கள். எல்லா இனங்களும் ஒரே இனம் ஆயின. அந்தப் பெரிய இனத்துக்குச் சைரஸே அரசர் ஆனுர். சைரஸின் பலம் நாளுக்குநாள் வளர்ந்து கொண்டு வந்தது. அவருடைய வளர்ச்சியைக் கண்டு மீடியா மன்னன் அச்சம் அடைந்தான். சைரஸ் தன் சம்மதம் இல்லாமல் எல்லாப் பாரசீகருக்கும் எப் படி அரசன் ஆகலாம் என்று நினைத்தான். தன் சம்மதத்தைப் பெருததற்காகச் சைரஸைத் தண்டிக்க நினைத்தான். உடனே ஒரு பெரிய சேனையைத் திரட்டிஞன். சைரஸோடு சண்டை யிடவும் வந்து விட்டான்! சைரஸ் அவனை எதிர்த்து வீர மாகப் போராடிஞர்; மெடிஸ் மன்னனுடைய படைகளை எல் லாம் தோற்று ஓடும்படி செய்தார். அம் மன்னனையும் சிறை பிடித்தார். இவ்விதமாகச் சைரஸ் தம்முடைய மக்களை மீடியர்களின் ஆட்சியிலிருந்து விடுவித்தார். பாரசீகர், மீடி யர்கள் இருவகையாருக்கும் சைரஸே அரசர் ஆனுர்.

சைரஸ் தீய குணம் படைத்தவர் அல்லர். அவர் சண் டையில் கைதானவர்களை அடிமைகளாக வைத்துக்

கொள்ளவில்லை. அடிமையாக வைத்துக் கொள்வதுதான் அந்தக்கால வழக்கம். என்றாலும் சைரஸ் அப்படிச் செய்ய வில்லை. அவர் கைதிகளை எல்லாம் விடுதலை செய்தார். அவர் களை மறுபடியும் தம்முடைய இருப்பிடத்துக்கே திரும்பிச் சென்று வாழ்க்கை நடத்துமாறு சொன்னார். தம்முடைய ஆட்சியில் அவர்கள் அமைதியாக வாழ்ந்தால், அவர்களுக் குத் தேவையான நன்மைகளைச் செய்வதாக அவர் சொன் னார். அவர்களும் ஒப்புக்கொண்டு சைரஸின் ஆட்சியிலேயே வாழ்ந்தார்கள்.

சைரஸ் மிகவும் சிறந்த அறிவாளி. அதனால், அவரு டைய ஆட்சிக் காலத்தில் நாடு வெகுவாக முன்னேறியது. நாட்டு மக்கள் எல்லோரும் செல்வம் உடையவர்கள் ஆனார் கள். சைரஸுக்கு முன்னேற வேண்டும் என்ற எண்ணம் உண்டு. ஒரு பெரிய சாம்ராச்சியத்தை நிறுவ வேண்டும் என்று அவர் எண்ணினார். ஆகையால் அவர் தம்முடைய சேனையில் ஆட்களைச் சேர்த்துக் கொண்டு நல்ல பயிற்சி கொடுத்தார். ஒரு சிறந்த சேனையை உருவாக்க வேண்டும் என்பது அவருடைய திட்டம். அவருடைய சேனை வீரர் கள் அம்பு எய்வதில் மிகவும் தேர்ந்தவர்கள். பயிற்சி கொடுக் கப் பயிற்சி கொடுக்க, அவர்கள் உலகத்திலேயே பெரிய வீரர்களாக விளங்கினார்கள். எதிரிகள் தொலை தூரத்தில் இருந்தாலும், அவர்கள்மேல் எப்படி அம்புகளை எய்வது என் பதை அவர்கள் கற்றுக்கொண்டார்கள். அவர்கள் கூட்ட மாக நின்று கொண்டு எதிரிகள் மீது அம்பு எய்தால், அந்த அம்புகள் எதிரிகளின்மேல் வானத்திலிருந்து மழை பொழிவது போலத் தொடர்ந்து விழுந்துகொண்டே இருக்கும். சைரஸின் சேனையில் குதிரை வீரர்களும் இருந்தார்கள். வில் வீரர்கள் அம்புகளை ஏவிய பிறகு, குதிரை வீரர்கள் தம் குதிரைகளைத் தட்டி விடுவார்கள். அம்புகள் விழுந்து சாகாத பகைவர்களை எல்லாம் குதிரை வீரர்கள் சென்று கொன்று விடுவார்கள், அல்லது போர்க் கைதிகளாகப் பிடித்துக் கொள்ளுவார்கள்.

சைரஸின் படைபலம் நாலா பக்கங்களிலும் பரவியது. சுற்றிலும் இருந்த நாடுகள் எல்லாம் அச்சங் கொண்டன. சைரஸ் தம்மைத் தனியாக எதிர்த்தால் தம்மால் எதிர்ப்பைத்

தாங்க முடியாது என்று அந்த நாடுகள் அஞ்சின. எல்லா நாடுகளும் ஒன்று சேர்ந்து சைரஸை எதிர்க்க முடிவு செய்தன. பாபிலோனியா மன்னர், லிடியா தேசத்து மன்னர், எகிப்துதேச மன்னர், இன்னும் சில சிற்றரசர்கள் ஒன்ருகச் சேர்ந்தனர். சைரஸ் இப்படிப் பகைவர்கள் ஒன்று சேர்ந்து எதிர்க்க முடிவு செய்ததை அறிந்து கொண்டார். உடனே சேனைகளோடு சென்று பகைவர்களுடைய கூட்டு முயற்சியைத் தூளாக்க வேண்டும் என்று எண்ணினர். படைகளுடன் பயணம் ஆனர்; முதலில் லிடியா தேச மன்னனை க்ரீஸஸோடு சண்டைக்குப் போனர். அவனே பலம் பொருந்திய எதிரி. க்ரீஸஸிடம் நிறையச் செல்வம் இருந்தது. அவனுடைய செல்வம் உலகப் பெயர் பெற்றது. அவனுடைய மக்களும் செல்வந்தர்களாக வாழ்ந்தார்கள். அதனல் அவர்கள் சோம்பேறிகளாகவும், கோழைகளாகவும் இருந்தார்கள்! ஆகையால் சைரஸ் படைகளைத் திரட்டிக் கொண்டு வந்தபோது யாராலும் அவரை எதிர்க்க முடியவில்லை. க்ரீஸஸ் சிறை செய்யப் பட்டான். அவனுடைய நாடு சைரஸின் சாம்ராச்சியத்தின் ஒரு பகுதி ஆனது.

க்ரீஸஸ் சைரஸின் அரண்மனைக்கு வந்தான். சைரஸ் அப்பொழுது தம் வீரர்களுக்கெல்லாம் பலவகையான விலை மிகுந்த வெகுமதிகளைக் கொடுத்துக் கொண்டிருந்தார். அதைக் கண்டு க்ரீஸஸ் ஆச்சரியப்பட்டான். இப்படி வெகுமதிகள் கொடுத்துக் கொண்டே இருந்தால், செல்வம் குறைந்து போகாதோ என்று அவன் சைரஸை நோக்கிக் கேட்டான். சைரஸ் க்ரீஸஸை அமைதியாகப் பார்த்தார்; "இவ்வளவு செல்வத்தையும் மற்றவர்களுக்குக் கொடுக்காமல் நானே வைத்துக் கொள்ளலாம். அப்படி வைத்துக் கொண்டால் என்னிடம் எவ்வளவு செல்வம் குவிந்திருக்கும்? சொல்லுங்கள் பார்க்கலாம்," என்று கேட்டார். க்ரீஸஸ் ஒரு பெரிய தொகையைக் கூறினன். அவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்று சைரஸ் நினைத்தார். அவர் ஒரு கடிதத்தை எழுதி அதைத் தம் இராச்சியத்தின் நாலா பக்கங்களுக்கும் அனுப்பினர்; தம்முடைய சேனைச் செலவுக்குப் பொருள் தேவையாக இருக்கிறது என்றும், மக்கள் முடிந்த

அளவு பணம் கொடுத்து உதவ வேண்டும் என்றும் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு சைரஸின் தூதுவர்கள் திரும்பினுர்கள். மக்கள் கொடுத்த பண மூட்டைகளோடு அவர்கள் வந்தார்கள். சைரஸ் தம்முடைய தூதர்கள் கொண்டு வந்த செல்வத்தை எல்லாம் குவித்தார். க்ரீஸஸ் குறிப்பிட்ட தொகையைவிட அதிக அளவு செல்வம் வந்து சேர்ந்திருந்தது. சைரஸ் க்ரீஸஸை நோக்கினுர். "பார்த்தீர்களா? நான் வெகுமதிகள் கொடுக்காமல் இருந்



தால், மக்கள் எல்லோரும் என்னை வெறுத்திருப்பார்கள். ஆனுல் நான் நிறைய வெகுமதிகள் கொடுக்கிறேன். அதனுல் எல்லோரும் என்னை விரும்புகிருர்கள். எனக்குத் தேவை யானபோது தேவையான பணத்தைக் கொட்டிக் கொடுக்கிருர்கள்," என்று சொன்னுர்.

சைரஸ் லிடியா தேசத்தைக் கைப்பற்றிய பிறகு பாபிலோனியாவின்மேல் படை எடுத்தார். அப்பொழுது பெல்ஷாஸர் என்பவன் பாபிலோனியாவை ஆண்டு வந்தான். அவனுடைய தலைநகரமான பாபிலன் ஒரு பலம் வாய்ந்த கோட்டை. அதைச் சுற்றி உயரமான மதில் சுவர்கள்

இருந்தன. சைரஸின் சேனையால் தன்னுடைய கோட்டையின் மதில்களைக் கடக்க முடியாது என்று பெல்ஷாஸர் நினைத்தான். ஆனால் அவன் நினைத்தது தவறு. பாரசீகச் சேனை பட்டணத்துக்கு அருகே வந்து விட்டது என்றாலும் பெல்ஷாஸர் அதைப் பொருட்படுத்தவில்லை. தன்னுடைய பிரபுக்களோடு அரண்மனையில் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். இந்த விருந்தின் கதையை நாம் பைபிளில் டானியலின் புத்தகம், அத்தியாயம் ஐந்தில் பார்க்கலாம்.

விருந்தின் நடுவே ஒரு திடுக்கிடும் நிகழ்ச்சி நடந்தது. திடீரென்று ஒரு மனிதனுடைய கை தோன்றியது. அது சுவரின்மேல் எதையோ எழுதிவிட்டு மறைந்தது. அரசன் அச்சத்தோடு எழுந்தான். சுவரில் எழுதியுள்ளதைப் படித்து யாராவது பொருள் சொல்ல முடியுமா என்று கேட்டான். டானியல் என்ற மதகுரு எழுந்து முன் வந்தார்; "பெல்ஷாஸரின் சாம்ராச்சியத்தைக் கடவுள் அழிக்கப் போகிறார் என்று எழுதப்பட்டிருக்கிறது," என்று கூறினார். அதே இரவு பாரசீகச் சேனைகள் தலைநகருக்குள் நுழைந்தன; அதை எளிதாகப் பிடித்துக் கொண்டன. பாபிலோனியாவில் பல அழகான பட்டணங்கள் உண்டு. அந்தப் பட்டணங்கள் உள்பட பாபிலோனியா முழுவதும் சைரஸின் சாம்ராச்சியத்தோடு சேர்ந்துவிட்டது.

சைரஸ் பாபிலன் பட்டணத்துக்குள் நுழைந்தார். அங்குப் பல நாட்டு மக்கள் அடிமைகளாக இருந்ததைக் கண்டார். டானியல் என்ற மதகுருவும், அவரைச் சேர்ந்த யூதர்களும் கூட அடிமைகளாக இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் சொந்த நாட்டுக்குத் திரும்பிப்போக ஆசைப்பட்டனர். அவர்கள் நிலைமைக்குச் சைரஸ் மிகவும் வருந்தினர். எல்லா அடிமைகளையும் விடுதலை செய்தார். அவர்கள் தங்கள் தாய்நாடுகளுக்குப் போய் வாழலாம் என்று அனுமதி கொடுத்தார். அந்த அடிமைகள் எல்லாம் எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார்கள் என்பதை நாம் ஊகித்து உணரலாம். யூதர்கள் ஜெருசலெமுக்குத் திரும்பிய கதையைப் பைபிளில் எஸ்ராவின் புத்தகத்தில் காணலாம்.

சைரஸ் ஒரு பெரிய போர் வீரர் மட்டுமல்லர். அறிவில்

சிறந்த அரசராகவும் விளங்கினர். அவர் ஆட்சி செய்த காலம் வரையில், மக்களுக்கு எந்தவிதமான குறையும் உண்டாகவில்லை. நல்ல சட்ட திட்டங்கள் நாட்டில் ஏற்பட்டன. சைரஸ் உண்மையாகவும் விசுவாசத்துடனும் நடந்து கொண்டார். தீயவர்களின் பயம் இல்லாமல் மக்கள் எல்லோரும் சந்தோஷமாக வாழ்ந்தார்கள். அவருடைய நாடு வளம் மிகுந்த நாடானது. ஆனல் பாபிலனை வென்ற பிறகு அவர் நீண்ட காலம் வாழவில்லை. அவருடைய சாம்ராச்சியத்தின் வடக்கே சில காட்டுமிராண்டி இனங்கள் வாழ்ந்து வந்தன. அவைகள் அவருடைய மக்களுக்குத் தொல்லை கொடுத்து வந்தன. ஆகையால் சைரஸ் அவைகளோடு சண்டை செய்வதற்காகப் போனர். அந்தச் சண்டையில் அவர் மரணம் அடைந்தார். அவர் இறந்த செய்தியைக் கேட்டு அவர் மக்கள் எல்லோரும் மிகவும் வருந்தினர்கள். சேனை வீரர்கள் அவருடைய சவத்தைத் தூக்கிக்கொண்டு வந்தார்கள். அவரே நிர்மாணித்த பெர்ஸெபொலிஸ் நகரத்துக்குக் கொண்டு வந்தார்கள். அங்கு அவர் சவத்தை ஓர் அழகான சமாதியில் அடக்கம் செய்தார்கள்; அவரை நினைத்து நினைத்துப் பல நாட்கள் வருந்தினர்கள்.

## 9. லியானிடாஸ் (இறப்பு கி. மு. 480)

பண்டைக் காலத்தில் உலகில் பல இனங்கள் மேன்மையாக வாழ்ந்தன. அந்த இனங்களில் கிரேக்க இனமும் ஒன்று. கிரேக்கர்கள் கிரீஸ் என்ற நாட்டைச் சேர்ந்தவர்கள். அவர்கள் சுதந்திர உணர்ச்சி உடையவர்கள்; அவர்கள் பல நகரங்களில் வாழ்க்கை நடத்தினர்கள். ஒவ்வொரு நகரமும் அதனதன் வேலையைக் கவனித்துக் கொண்டது. அதோடு தன்னைச் சுற்றிலும் இருந்த தேசப் பகுதியில் வாழ்ந்த மக்களையும் ஆண்டு வந்தது. கிரேக்கர்கள் நல்ல வியாபாரிகள். அவர்களுடைய வியாபாரக் க்ப்பல்கள் பொருள்களை ஏற்றிக்கொண்டு தொலை நாடுகளுக்குச் சென்று வியாபாரம்

செய்தன. பல கிரேக்க வியாபாரிகள் தம்முடைய சொந்த நாட்டை விட்டுவிட்டு அந்நிய நாடுகளில் சென்று குடியேறினர்கள்; தாம் குடியேறிய நாடுகளில் பொருள்களை வாங்கியும் விற்பனை செய்தும் வாழ்ந்து வந்தார்கள். இத்தகைய கிரேக்க வியாபாரிகளில் பலர் சிறிய ஆசியா என்ற நாட்டில் தங்கியிருந்தார்கள். அந்த நாடு பாலஸ்தீனத்துக்கு வடமேற்கே இருக்கிறது. பல கிரேக்க வியாபாரிகள் சிறிய ஆசியாவில் வாழ்ந்து வந்த காலத்தில், அந்த நாட்டைப் பாரசீக அரசரான சைரஸ் பிடித்துக் கொண்டார். சிறிய ஆசியாவில் வாழ்ந்து வந்த மற்ற மக்கள் எல்லோரும் பாரசீகருடைய ஆட்சியை ஒப்புக்கொண்டார்கள். ஆனல் கிரேக்கர்கள் ஓர் அந்நிய நாட்டானுக்கு அடங்கி வாழச் சம்மதிக்கவில்லை. அதனல், அவர்கள் அடிக்கடிக் குழப்பத்தையும், கலகத்தையும் உண்டாக்கினர்கள். கிரீஸ் தேசத்தில் இருந்த அவர்களுடைய நண்பர்களும், உறவினர்களும் அவர்களுக்கு ஊக்கம் கொடுத்தார்கள்.

சைரஸ் இறந்ததும், அவருடைய மகன் டரையஸ் பட்டத்துக்கு வந்தான். அவன் கிரீஸ் தேசத்தை வெல்வதற்கு ஒரு சேனையை அனுப்ப முடிவு செய்தான். அதன்மூலம் எல்லாக் குழப்பத்தையும் அடக்கி விடலாம் என்பது அவனுடைய எண்ணம். அவனுக்கு முக்கியமாக ஆதென்ஸ் பட்டணத்து மக்கள்மீதுதான் அதிகச் சினம். அவர்கள்தான் மற்றக் கிரேக்கர்களைவிட அவனுக்கு அதிகத் தொல்லையைக் கொடுத்தார்கள். டரையஸ் நீண்ட காலத்துக்குப் பிறகுதான் படை திரட்டிக்கொண்டு போனன். ஆனல், அதுவரை கிரேக்கர் மீது தனக்கிருந்த சினம் ஆறிவிடுமோ என்று நினைத்தான். அது ஆருமல் இருப்பதற்காக ஓர் உபாயம் செய்தான். ஓர் ஆளைச் சம்பளம் கொடுத்து அமர்த்திக் கொண்டான். அந்த ஆளின் வேலை அவனிடம் ஒரு நாளைக்கு மூன்று தடவை வந்து, "அரசே, அதீனியர்களை மறந்து விடாதீர்கள்" என்று சொல்வதே.

கிரேக்கர்களோடு சண்டையிட டரையஸ் இரண்டு தடவை தன்னுடைய சேனைகளை அனுப்பினன். இரண்டு தடவையும் பாரசீகப் படை தோற்றுத் திரும்பி விட்டது.

பாரசீகம் ஒரு பெரிய நாடு ; ஆனுல் கிரீஸோ ஒரு குட்டி நாடு. ஆகையால் கிரேக்கர்கள் பாரசீகப் படையைத் தோற்கடித்தது எங்கும் ஆச்சரியத்தை உண்டாக்கியது. முதல் தடவை கிரேக்கர்கள் பாரசீகப் படையைப் பார்த்து மிகவும் பயந்து விட்டார்கள். அவர்கள் சண்டையில் தோற்றுவிடுவார்கள் போலவே தோன்றியது. ஆனுல் கிரேக்கர்களுக்குப் பலம் வாய்ந்த தலைவர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் மில்டி யடீஸ் என்பது. அவர் வீரத்தோடு சண்டை போடும்படி கிரேக்கர்களைத் தூண்டினுர். இதன் காரணமாக டரையஸின் சேனை படுதோல்வி அடைந்தது. மாரதான் என்ற இடத்தில் நடந்த சண்டையில் பின்வாங்கி ஓடியது.

ஆனுல் ஆபத்து அதோடு முடிந்து விடவில்லை. பாரசீகம் ஒரு பரந்த நாடு. அந்த நாட்டு மக்களுக்கு அவமானம் ஏற்பட்டது. சிறு நாடான கிரீஸ் தம்மை வென்று விடுவதா என்று பாரசீகர்கள் நினைத்தார்கள். ஆகையால் அவர்கள் கடைசிவரை சண்டை செய்து பார்த்து விடுவது என்று முடிவு செய்தார்கள். டரையஸ் இறந்ததும் அவன் மகன் ஸர்க்ஸீஸ் என்பவன் அரசன் ஆனுன். அவன் இதற்கு முன்னுல் காணுத அளவுக்கு ஒரு பெரிய படையைத் திரட்டினுன். அந்தப் பெரிய சேனையில் நாற்பத்தாறு நாடுகளைச் சேர்ந்த வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் பாரசீக மன்ன னுக்கு அடங்கி வாழ்பவர்களாகவோ நண்பர்களாகவோ இருந்தார்கள். அந்தச் சேனையில் ஆப்பிரிக்கர்கள், இந்தியர் கள், பல நாடுகளைச் சேர்ந்த வெள்ளைக்காரர்கள் முதலியவர் களும் இருந்தார்கள். அவர்களிடம் குதிரைகளும், யானை களும், ஒட்டகங்களும் ஏராளமாக இருந்தன. சேனைகளுக்கு வேண்டிய சாமான்களையும், வீரர்களையும் அவை சுமந்து கொண்டு சென்றன. சிறிய ஆசியாவிலிருந்து ஐரோப்பாவுக் குப் போக வேண்டுமானுல் ஒரு சிறிய கடல் பாகத்தைத் தாண்டியாகவேண்டும். அந்தக் கடல் பாகம் நெடுகப் படகு களை நிறுத்தி ஸர்க்ஸீஸ் ஒரு பாலத்தைக் கட்டினுன். அந்தப் பாலத்தின் வழியாக அவனுடைய சேனைகள் ஐரோப்பாவை அடைந்தன. அவன் சேனை கடல் போல இருந்தது ; அந்தச் சேனை முழுவதும் பாலத்தைக் கடந்துபோக ஏழு பகலும் ஏழு

இரவும் பிடித்தன. ஸர்க்ஸீஸின் பெரிய சேனை வருகிறது என்பதைக் கிரேக்கர்கள் கேள்விப் பட்டார்கள்; மிகுந்த அச்சங் கொண்டு நடுங்கினார்கள்.

அந்தக் காலத்தில் கிரீஸ் நாட்டிலேயே மிகவும் பலம் வாய்ந்த பட்டணமாக இருந்தது ஸ்பார்ட்டா என்ற பட்டணம்தான். ஸ்பார்ட்டா நகரமக்கள் சிறந்த போர் வீரர்கள். அவர்கள் தங்கள் குழந்தைகளை எல்லாம் இளமையில் இருந்தே போருக்குப் பழக்கி வளர்த்தார்கள். ஓர் ஆண் குழந்தை பிறந்ததும், அதைப் பட்டணத்துப் பெரிய மனிதர்கள் கூடியிருக்கும் இடத்துக்குத் தூக்கிக் கொண்டு போவார்கள். அந்தக் குழந்தை பலசாலியாக வளராது என்று பெரிய மனிதர்களுக்குத் தோன்றினால், அதை ஸ்பார்ட்டாவுக்கு வெளியே சிறிது தொலைவில் இருந்த மலைப் பிரதேசத்திற்குத் தூக்கிக்கொண்டுபோய் அங்கு போட்டுவிட்டு வந்து விடுவார்கள். அந்தக் குழந்தை அங்கேயே கிடந்து செத்துவிடும். பிறந்த குழந்தை திடமானதாக இருந்தால் அதை அதனுடைய தாயிடமே திருப்பிக் கொடுப்பார்கள். குழந்தைக்கு ஏழு வயதாகும் வரை அது தாயிடமே வளரும். ஏழு வயதானதும் அதைத் தாயிடமிருந்து பிரித்துக்கொண்டு வந்து இராணுவப் பயிற்சி கொடுத்து வளர்ப்பார்கள். ஓட்டப் பந்தயங்களில் அடிக்கடி ஓட விடுவார்கள். எல்லாவற்றையும் விட, தனக்கு உண்டாகும் கஷ்டங்களைச் சகித்துக்கொள்ளவும் அவனைப் பழக்குவார்கள். அடிக்கடி உடலின்மேல் சாட்டையைக் கொண்டு விளாசுவார்கள்; அப்படி அடிப்பது தண்டனைக்காக அல்ல; எவ்வளவு தூரம் அவன் வாய் விட்டு அழாமல் துன்பத்தைத் தாங்கிக் கொள்வான் என்பதைச் சோதிப்பதற்காகவே. பட்டணத்து வேலைகளையெல்லாம், வியாபாரத்தைக்கூட, அடிமைகளே செய்தார்கள். ஆகையால் ஸ்பார்ட்டா ஆண்கள் போர்ப் பயிற்சி பெறுவதற்கு நிறைய நேரம் கிடைத்தது. இவ்விதக் காரணங்களால், கிரீஸ் தேசத்திலேயே ஸ்பார்ட்டா சேனைதான் சிறந்த சேனையாக விளங்கியது.

ஆகையால், ஸர்க்ஸீஸின் படைகள் வருகின்றன என்று கேள்விப்பட்டதும், கிரேக்கர்கள் எல்லோரும் ஸ்பார்ட்டா

மன்னருக்குத் தூது அனுப்பினுர்கள். அப்போது ஸ்பார்ட்டா வுக்கு அரசராக இருந்தவர் லியானிடாஸ் என்பவர். கிரேக் கராகிய தங்களை எல்லாம் காப்பாற்றவேண்டும் என்று அவரை எல்லோரும் வேண்டிக் கொண்டார்கள்.

லியானிடாஸ் அதற்கு ஒப்புக்கொண்டார். கிரீஸ் தேசத் தின் பல பாகங்களிலிருந்து ஏழாயிரம் வீரர்களைத் திரட்டிக் கொண்டார்; ஸ்பார்ட்டாவில் இருந்து முந்நூறு வீரர்களைச் சேர்த்துக்கொண்டார். இந்தப் படைகளோடு லியானிடாஸ் கிளம்பினுர். ஸர்க்ஸீஸ் ஆதென்ஸ் பட்டணத்தை நோக்கிச் செல்வதைக் கூடுமானவரை தடுத்தார். ஆனுல் சிறிது சிறி தாக அவருடைய சேனை சிறுத்துக்கொண்டே வந்தது. சில வீரர்கள் சண்டையில் உயிர் இழந்தார்கள். இன்னும் பலர் பாரசீகப் படை தம்மைச் சூழ்ந்து கொண்டவுடன் உயிர் பிழைக்க ஓடி விட்டார்கள். கடைசியில் லியானிடாஸும் சில ஸ்பார்ட்டா வீரர்களுமே மிகுந்தார்கள். ஆனுல் லியானிடாஸ் நல்ல அறிவாளி. பாரசீகப் படை முழுவதும் ஒரு மலை இடுக்கின் வழியாகவே போயாகவேண்டும் என்பது லியானிடாஸுக்குத் தெரியும். அந்த வழிக்கு வலது புறம் பெரிய உயரமான மலைகளும் இடது புறம் பரந்த கடலும் இருந்தன. ஆகையால் அந்த வழியில் ஒரு சமயத்தில் சில பேர் மட்டுமேதான் தாண்டிச் செல்ல முடியும். அந்தக் குறுக லான வழிக்குத் தர்மாபைலி என்று பெயர். இந்த வழிக்குக் குறுக்கே லியானிடாஸ் தம்முடைய சிறிய படையை நிறுத்தி வைத்தார். பாரசீகப் படை தம்மைத் தாக்குவதற்காக அவர் கள் தயாராகக் காத்துக்கொண்டு நின்ருர்கள்.

தம்முடைய பெரிய சேனையைக் கண்டு கிரேக்கர்கள் நடுங்கிவிடுவார்கள் என்று பாரசீகர்கள் நினைத்தார்கள். ஆனுல் கிரேக்கர்கள் எல்லோரும் அமைதியாக இருக்கிருர் கள், தேகாப்பியாசம் செய்துகொண்டும், தலைவாரிக் கொண் டும் இருக்கிருர்கள், என்று பாரசீக ஒற்றர்கள் பார்த்து வந்து சொன்னுர்கள். இதைக் கேட்டுப் பாரசீகர்கள் மிகுந்த வியப் படைந்தார்கள். கடைசியில் பாரசீகப் படை ஸ்பார்ட்டா வீரர்களைத் தாக்கியது. இரண்டு இரவு, இரண்டு பகல் பாரசீகச் சேனை ஸ்பார்ட்டா வீரர்மேல் விழுந்து மோதியது.

இருந்தாலும் அவர்களைக் கடந்து போக முடியவில்லை. நூற்றுக் கணக்கான பாரசீகர்கள், ஸ்பார்ட்டா வீரர்களுடைய ஈட்டிகளுக்கு இரையானார்கள். ஆகையால் ஸ்பார்ட்டா வீரர்களுக்கு முன்னால் பாரசீகப் படைகள் குவியல் குவியலாகக் குவிந்து கிடந்தன. பாரசீகர்கள் தோல்வியடையும் நிலைக்கு வந்து விட்டார்கள் போல் தோன்றியது. ஆனால் அதற்குள் ஓர் அதிர்ச்சி தரக்கூடிய செய்தியை லியானிடாஸ் கேள்விப் பட்டார். எவனோ ஒரு கிரேக்கத் துரோகி அவர்களைக் காட்டிக் கொடுத்துவிட்டான்; ஒரு சிறிய மலை வழியைப் பாரசீகர்களுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டான். அந்த வழியில் பாரசீகச் சேனை முன்னேறி லியானிடாஸைப் பின்னால் வந்து தாக்கியது. முயற்சி செய்திருந்தால் லியானிடாஸும் அவர் வீரர்களும் ஓடி உயிர் தப்பி இருக்கமுடியும். அதற்கு வேண்டிய அளவு நேரம் இருந்தது. ஆனால் லியானிடாஸைப் பார்த்து மற்ற ஸ்பார்ட்டா வீரர்கள், “ஸ்பார்ட்டா வீரன் ஒருவன் போரில் மடிவானே தவிர மடங்கித் திரும்ப மாட்டான்,” என்று சொன்னார்கள். ஆகையால், அவர்கள் எல்லோரும் இருந்த இடத்திலேயே தைரியத்தோடு நின்றார்கள். அவர்களுக்கு முன்னாலும் பின்னாலும் பாரசீகச் சேனை வந்து தாக்கியது; ஸ்பார்ட்டா வீரர்கள் தங்களால் முடிந்த அளவுக்குப் பாரசீகச் சேனையை வெட்டித் தள்ளினார்கள். பிறகு ஒவ்வொருவராகக் கடைசி ஆள்வரை சண்டையிட்டுக் கொண்டே செத்து விழுந்தார்கள். பிற்காலத்தில் அந்தச் சண்டை நடந்த இடத்துக்குப் பக்கத்தில் ஒரு பாறையில் கிரேக்க மக்கள் பின்வரும் சொற்களை எழுதி வைத்தார்கள்: “வழிப்போக்கனே! ஸ்பார்ட்டா மக்களின் கட்டளைப்படி நாங்கள் இங்கே செத்து மடிந்தோம் என்பதை அவர்களுக்குத் தெரிவிப்பாய்.” லியானிடாஸும் அவர் ஆட்களும் சாவதற்கு முன் இப்படித் தான் சொல்ல நினைத்திருப்பார்கள் என்று கிரேக்கர்கள் எண்ணினார்கள்.

லியானிடாஸ், அவருடைய ஆட்கள் ஆகியோருடைய வீரச் செயல் கிரேக்கர்களுக்குப் புதிய தைரியத்தைக் கொடுத்தது. ஆகையால் கடைசிவரை கிரேக்கர்கள் பாரசீகர்களுக்குப் பணியவே இல்லை. பாரசீகப் படை ஆதென்ஸ்

பட்டணத்துக்குள்ளே நுழைந்தது. அந்தப் பட்டணத்தின் பெரும்பாகத்தைக் கொளுத்தி நாசப்படுத்தி விட்டது; என்ருலும் கிரேக்க மக்கள் சரணடையவே இல்லே. அவர்கள் தங்கள் நகரத்தை விட்டுவிட்டுப் பக்கத்தில் இருந்த சலமிஸ் என்ற தீவுக்கு ஓடிவிட்டார்கள். அவர்களுக்குத் தெமிஸ்டொக்லீஸ் என்பவர் தலேவராக இருந்தார். பாரசீகப் படைகளுக்கு உணவுப் பொருளும் ஆயுதமும் போவதைத் தடுத்து விட்டால் அந்தப் படை கிரீஸுக்குள் முன்னேற முடியாது என்று அவர் நினேத்தார். அதனுல், உணவையும் ஆயுதங்களேயும் கொண்டு போகும் பாரசீகக் கப்பல்களேத் தடுத்து அழிப்பது என்று முடிவு செய்தார். பாரசீகக் கப்பல்கள் எல்லாம் உருவத்தில் பெரியவை. அவை எல்லாம் சலமிஸ் வளேகுடா என்ற ஒரு சிறிய வளேகுடாவில் சேர்த்து வைக்கப்பட்டிருந்தன. கப்பல்கள் நிறைய இருந்ததால் அவைகள் அசைவதற்குக்கூட இடம் இல்லாமல் இருந்தது. தெமிஸ்டொக்லீஸ் சிறு சிறு கிரேக்கப் படகுகளுடன் சென்று பாரசீகக் கப்பல்களேத் தாக்கினுர். அவர் படகுகள் சிறியவையாக இருந்தமையால் பிறகு எளிதாக அவை பல இடங்களுக்கும் பறந்து சென்று தாக்கின. பாரசீகக் கப்பல்கள் ஒன்றன்பின் ஒன்ருகக் கடலில் மூழ்கின. பக்கத்தில் இருந்த ஒரு மலேயின் உச்சியில் இருந்துகொண்டு ஸர்க்ஸீஸ் சண்டையைக் கவனித்துக் கொண்டிருந்தான். ஒரே நாளில் இறுநூறு கப்பல்கள் மூழ்கி விட்டதை அவன் பார்த்தான்; உடனே அவனே அச்சம் பிடித்துக் கொண்டது. தன்னுடைய வீரர்களேக் கூடாரத்தைத் தூக்கிக்கொண்டு புறப்படும்படி உத்திரவிட்டான். எல்லோரும் மூட்டை கட்டிக்கொண்டு பாரசீகத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

ஸர்க்ஸீஸ் தான் மட்டும் முன்னுல் பாரசீகத்துக்கு ஓடி விட்டான்; அவனுடைய வீரர்கள் தனியாக விடப்பட்டார்கள். முதுகு காட்டி ஓடிய அவர்களேக் கிரேக்கப் படைகள் ஓட ஓட விரட்டின. பல பாரசீகர்கள் உயிர் இழந்தார்கள். பிலடீயா என்ற இடத்தில் நடந்த சண்டையில் அநேகப் பாரசீகப் படை வீரர்கள் கொல்லப்பட்டார்கள். ஒரு சிலரே பாரசீகத்துக்குத் திரும்பிப் போனுர்கள். இப்படிப் படுதோல்வி

அடைந்ததால், மறுபடியும் பாரசிகப் படை கிரீஸ் பக்கம் தலைகாட்டவே இல்லை. கிரீஸில் அமைதி நிலவியது. ஆகவே, ஸ்பார்ட்டா வீரர்கள் உயிரைக் கொடுத்துப் போராடியது



வீண் போகவில்லை; அவர்களுடைய வீரச் செயல் தெமிஸ்டொக்லீஸுக்கும், அதீனியர்களுக்கும் தைரியத்தை உண்டாக்கியது. அதனாலேயே கிரீஸ் காப்பாற்றப்பட்டது. வீரத்துக்கு மதிப்புள்ளவரை லியானிடாஸின் புகழ் நிலைத்திருக்கும்.

## 10. சாக்ரடீஸ் (கி. மு. 470 - 399)

சாக்ரடீஸ் பல நூற்றுண்டுகட்கு முன்னுல் ஆதென்ஸ் என்ற கிரேக்கப் பட்டணத்தில் வாழ்ந்து வந்தார். அப்பட்டணம் கெய்ரோவைப் போலவோ, ஜொஹானிஸ்பர்க் போலவோ, இபாடான் போலவோ ஒரு பெரிய பட்டணம் இல்லை; இலண்டனைப்போல ஒரு பெரிய சாம்ராச்சியத்தின் தலைநகர மாகவும் இல்லை. ஒரு சிறிய கிரேக்க இனம்தான் அந்தப்பட் டணத்தைக் கட்டியது. ஆதென்ஸ் உலகத்திலேயே பெயர் போன பட்டணமாக இருந்தபோது கிரீஸ் தேசமும் சிறிய தேசமாகத்தான் இருந்தது. ஆனுல், இன்றைக்கும் உலகில் வாழ்கின்ற பலர் உலகத்தில் வாழ்ந்த மக்கள் ஜாதியில் அதீனியர்களே சிறந்தவர்கள் என்று நினைக்கிருர்கள்; மற்ற எந்த நகரத்தையும் விட ஆதென்ஸ் பட்டணத்தைப் போய்ப் பார்ப்பதே அதிருஷ்டம் என்று எண்ணுகின்றனர்.

கிரீஸ் தேசத்தில் பல இனங்கள் வசித்து வந்தன. பல ஆண்டுகளாக அந்த இனங்களுக்குள் சண்டைகள் நடந்தன. பிற்காலத்தில் அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து பார சீகச் சேனைகளைத் தாக்கினுர்கள். பாரசீகர்கள் கிரீஸைப் பிடித்துக்கொள்ளும் எண்ணத்தோடு படை எடுத்தார்கள். அவர்களைக் கிரேக்கர் எதிர்த்துப் போராடித் தோற்கடித்தார் கள். அவர்கள் திறமையாகச் சண்டை செய்தார்கள் என்பத தற்காக இப்போது பெரும்பாலும் யாரும் அவர்களை நினைப்ப தில்லை. அமைதியான காலத்தில், அவர்கள் புரிந்த ஆச்சரிய மான செய்கைகளுக்காகவே இன்றைக்குப் பல பேர் அவர்களை நினைக்கிருர்கள்.

முதலாவதாக அவர்கள் ஜனநாயக வாதிகள். அவர் களுக்குச் சிறு அரசர்களோ, சக்கரவர்த்தியோ இல்லை; வயது முதிர்ந்த ஒவ்வொரு மனிதனுக்கும் பட்டணத்து ஆட்சியில் பங்கு இருந்தது. ஆதென்ஸ் மக்கள் படிக்காதவர்களாக இருந் தால், அவர்களால் அரசாங்கத்தில் பங்கு பெறமுடியாது என்பதை அதீனியர்கள் நன்ருக உணர்ந்து கொண்டார்கள். ஆகையால் எல்லோரும் நன்ருகப் படித்தார்கள். உலகத்தி

லேயே ஆதென்ஸ் மக்கள்தான் கல்வி அறிவு உள்ளவர்களாக விளங்கினர்கள். அவர்கள் படிப்பாளிகளாக மட்டும் இல்லாமல் அறிவாளிகளாகவும் இருந்தார்கள். மக்களைப் படிப்பாளிகளாக ஆக்குவதோடு, அறிவாளிகளாகவும் அவர்களை வாழச் செய்ய வேண்டும் என்று அவர்கள் எண்ணினர்கள். அறிவு இல்லாமல் வெறும் படிப்பு மட்டும் இருந்தால், அதனால் நாட்டுக்குத் தீமைதான் விளையும் என்பதை அவர்கள் நன்முக உணர்ந்திருந்தார்கள். ஆகையால் தத்துவ ஞானிகளே, சிறந்த அறிவாளிகளே ஆதென்ஸ் பட்டணத்தில் மிகவும் கொண்டாடப்பட்டார்கள். அவர்கள்தாம் உண்மையில் ஆதென்ஸ் பட்டணத்து மக்களின் மனத்தை எல்லாம் நல்ல வழியில் திருப்பியவர்கள். மக்கள் எவைகளை விரும்ப வேண்டும், எவைகளை மதிக்கவேண்டும் என்றெல்லாம் அவர்களே மக்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள்.

ஆதென்ஸுக்கு ஒரு சமயம் பெரிக்லீஸ் என்பவர் தலைவராக இருந்தார். அவருடைய காலத்தின்தான் ஆதென்ஸின் புகழ் உயர் நிலையில் இருந்தது. பாரசீகர்கள் தோற்கடிக்கப் பட்டார்கள்; ஆதென்ஸ் நகரம் அமைதியாக வாழ்ந்தது. பெரிக்லீஸ் ஆதென்ஸின் பெருமையை உயர்த்துவதற்கு விரும்பினர். அதை மிகவும் அழகு படுத்தவேண்டும் என்பது அவருடைய அவா. ஆகையால் அவர் ஆதென்ஸ் முழுவதிலும் அழகான பல கட்டடங்களைக் கட்டினர். ஆதென்ஸ் பட்டணத்துக்கு நடுவே ஒரு பெரிய மலை இருந்தது. அந்த மலையின் பெயர் அக்ரொபொலிஸ் என்பது. அந்த மலையின்மீது பெரிக்லீஸ் சில அழகான கோயில்களைக் கட்டினர். அவர் கைதேர்ந்த சிற்பிகளையும் கலைஞர்களையும் தம்மிடம் வேலைக்கு அமர்த்திக் கொண்டார். அவர்களில் பீடயஸ் என்ற பெரிய சிற்பியும் ஒருவர். அவர் சில சிலைகளைச் செய்திருக்கிருர். அவை உலகிலேயே அற்புதமான சிலைகள் ஆகும். ஆதென்ஸ் பட்டணத்துக்கு ஒரு தேவதை உண்டு. அந்தத் தேவதையின் பெயர் அதீனி என்பது. அதீனியின் சிலையையும் பீடயஸ் அற்புதமாகச் செய்திருக்கிருர். அந்தச் சிலை பதினைந்து அடி உயரம் இருக்கிறது. அதன் கையில் ஒளிவீசும் தங்க ஈட்டி கொடுக்கப்பட்டிருந்தது. அந்த ஈட்டி கடலில் வெகு

தொலேவில் இருப்பவர்களுக்கும் தெரிந்தது. வெளி நாடுகளுக்குப் பிரயாணம் சென்று கப்பலில் திரும்பும் அதீனிய மக்களுக்கு அது ஆறுதலேயும் சந்தோஷத்தையும் கொடுத்தது.

மக்களேச் சுற்றி அழகான பொருள்கள் இருந்தால் மட்டும் போதாது; அவர்கள் அழகான கவிதையையும் படிக்கவேண்டும்; சிறந்த நாடகங்களேயும் பார்க்கவேண்டும் என்று பெரிக்லீஸ் நினேத்தார். ஆகையால் அவர் ஒரு பெரிய திறந்த வெளி நாடக மேடையை அமைத்தார்; கவிஞர்களேக் கொண்டும், நாடக ஆசிரியர்களேக் கொண்டும் பல நாடகங்களே எழுதுவித்தார்; பணக்காரர்களேத் தங்களுக்கென்று நாடகக் குழுக்களே வைத்துக்கொள்ளுமாறு ஊக்குவித்தார். ஒரு பெரிய திருவிழாவில் சிறந்த நாடகங்களே எழுதியவர்களுக்குப் பரிசுகளேயும், வெகுமானங்களேயும் கொடுத்தார். கிரேக்கர்கள் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்னுல் வாழ்ந்தவர்கள், என்ருலும் அவர்கள் எழுதிய நாடகங்களே இன்றைக்கும் உலகம் எங்கும் நடிக்கின்ருர்கள்; படிக்கின்ருர்கள். கிரேக்க நாடக ஆசிரியர்களில் மிகச் சிறந்தவர்கள் ஐஸ்சிலஸ், ஸோபொக்லீஸ், யூரிபிடீஸ் என்பவர்கள். அவர்கள் எழுதிய நாடகங்களேவிடச் சிறந்த நாடகங்களே உலகத்தில் இன்னும் எவருமே எழுதவில்லே.

ஆனுல், ஆதென்ஸ் பட்டணத்தில் மிகவும் சிறப்பாகப் போற்றப்பட்டவர்கள் தத்துவ அறிஞர்கள். அவர்கள் அறிவு ஆராய்ச்சியிலும் உண்மைகளேக் கண்டுபிடிப்பதிலும் தங்களுடைய வாழ்க்கையை அர்ப்பணம் செய்தார்கள். மேலும் அவர்கள் தங்களேச் சுற்றிச் சிறுசிறு இளேஞர் கூட்டங்கள் வைத்துக்கொண்டு அவர்களுக்குப் போதித்தார்கள். அப்படிப்பட்ட சிறந்த தத்துவ அறிஞர்களில், சாக்ரடீஸ் என்பவர் ஒருவர். அவர் இளேஞராக இருந்தபொழுது சேனே வீரனுக இருந்தார். ஆனுல் சண்டையெல்லாம் முடிந்த பிறகு அவர் சேனேயில் இருந்து விலகி விட்டார். அதன் பிறகு ஒரு பெரிய ஆசிரியராக ஆனுர். அவர் பார்ப்பதற்குச் சிறுத்தும், விகாரமாகவும் இருப்பார். அவருடைய தலே சொட்டை விழுந்து அளவுக்கு மீறிப் பெரிதாக இருக்கும். ஆனுல் ஆதென்ஸ் மக்கள் எல்லோரும் அவருக்கு மிகவும் மரியாதை

கொடுத்தார்கள். அதற்குக் காரணம் அவர் பெரிய அறிவாளியாக இருந்ததே. அதோடு அவர் தமக்கு என்று எதையும் விரும்பமாட்டார். அவர் சாதாரண முரட்டுத் துணிகளையே உடுத்திக் கொண்டார். காலில் செருப்புக்கூடப் போட்டுக் கொள்ளாமல் வெறுங்காலுடன் வீதிகளில் நடமாடினர். அவர் தம்முடைய மாணவர்களிடமிருந்து பணம் சிறிது கூட வாங்கமாட்டார். அவருடைய பள்ளிகூடத்திற்குக் கட்டடம் எதுவும் இல்லை. ஆனல் அவர் மரத்தடிகளிலும், கோவில் சுவர்களின் நிழலிலும் வாலிபர்களை வைத்துக் கொண்டு பாடம் கற்பிப்பார். ஆகையால் பணக்காரர்கள், ஏழைகள், கூலியாட்கள், எஜமானர் முதலிய எல்லா வகையான மக்களும் அவரிடம் படிப்பதற்கு வந்தார்கள். பணம் எதுவும் தரவேண்டியதில்லை. எனவே, எல்லோரும் வந்து படிக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது.

மக்களை ஒவ்வொன்றைப் பற்றியும் சிந்திக்கச் செய்ய வேண்டும் என்பதே சாக்ரடீஸின் கொள்கை. ஆகையால் அவர் தம்மிடம் படிக்க வந்தவர்களுக்கு முன்னல் பிரசங்கம் செய்யவில்லை. அல்லது சாதாரண வழியில் பாடங்களைச் சொல்லி கொடுக்கவும் இல்லை. கேள்விகள் கேட்பதன் மூலமே இவர் பல விஷயங்களைச் சொல்லிக்கொடுத்தார். புரியாத சொற்களைப் பயன்படுத்துகின்ற மக்களைக் கண்டால் சாக்ரடீஸுக்குச் சிறிதும் பிடிக்காது. ஆகையால், அவருடைய மாணவர்கள் கௌரவம், மேன்மை முதலான சொற்களைப் பயன்படுத்தும்போது அச்சொற்களின் மூலம் அவர்கள் எதைக் குறிப்பிடுகிருர்கள் என்பதைக் கேட்பார். அவர்கள் சொல்லும் விடையிலிருந்து அச்சொற்களின் உண்மையான பொருளைப் புதிய வழியில் விளக்குவார்.

சிறிது காலத்தில் ஆதென்ஸ் பட்டணத்தின் தலைவராக இருந்த பெரிக்லீஸ் காலமானர். சாக்ரடீஸ் அப்போது வாலிபராக இருந்தார். பெரிக்லீஸுக்குப் பின்னல் ஆதென்ஸ் பட்டணத்தின் மதிப்பு சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. அந்த நகரத்தில் பலவகையான சண்டைகளும், அரசியல் குழப்பங்களும் ஏற்பட்டன. அந்தச் சண்டையில் சாக்ரடீஸ் தலையிட்டுக் கொள்ளவேயில்லை. அரசியல் சண்டை

கள் மக்களை உண்மையான வாழ்க்கையிலிருந்து இழுத்துக் கொண்டுபோய் விடுகின்றன என்பது அவருடைய எண்ணம். மேலும், மக்கள் அறிவை விரும்புவதற்கு மாருக ஆதிக்கம் செலுத்த விரும்புவது தப்பானது என்று அவர் நினைத்தார். இக்காரணத்தால் அரசியல் தலைவர்கள் சாக்ரடீஸை மதிக்க வில்லை. சில அரசியல் தலைவர்களிடம் இருந்த பேராசை, தன்னலம், நம்பிக்கைத் துரோகம் முதலிய குணங்களைச் சாக்ர டீஸ் எடுத்துக்காட்டினர். அரசியல் தலைவர்களின் குற்றங் களைப் பார்க்குமாறு அவர் தம்முடைய மாணவர்களுக்குப் போதனை செய்தார். இதனுல், சாக்ரடீஸுக்கு இன்னும் கெட்ட பெயர் வளர்ந்தது.

ஆகையால், அரசியல் தலைவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந் தார்கள். சாக்ரடீஸ் மீது ஒரு பழியைச் சுமத்தினர்கள். ஆதென்ஸ் பட்டணத்து வாலிபர்களுக்குள் மனக் குறை யையும் குழப்பத்தையும் சாக்ரடீஸ் உண்டு பண்ணுவதாகக் கூறினர்கள். பெரியவர்களைக் கேள்வி கேட்கும்படி சாக்ரடீஸ் வாலிபர்களைத் தூண்டுவதாகவும் குற்றம் சாட்டினர்கள். எல்லாவற்றையும்விட மற்ருேர் இழிவான குற்றமும் சாக்ரடீஸின் மீது சுமத்தினர்கள். கடவுளை அவமதிக்கும் படி சாக்ரடீஸ் இளைஞர்களுக்குப் போதனை செய்கின்ருர் என்பதே அந்தக் குற்றச் சாட்டு. சாக்ரடீஸ் தம்மீது சாட்டப் பட்ட குற்றச் சாட்டுக்களை யெல்லாம் மறுத்தார். சிறிது கூடச் சினங்கொள்ளாமல் அமைதியாகத் தாம் நிரபராதி என்பதை விளக்கினர். தம்மீது சுமத்தப்பட்ட பழிகள் எல்லாம் எவ்வளவு தூரம் பொய்யானவை என்பதை எடுத்துக் காட்டினர். சாக்ரடீஸ் இனிமேல் போதனை செய்வதில்லை என்று ஒப்புக் கொண்டால் அவரை விட்டு விடுவதாதக் கூறினர்கள். ஆனல் சாக்ரடீஸ் இதற்குச் சம்ம திக்கவில்லை. "மக்களுக்கு உண்மையைப் புகட்டுவதற்காகவே தெய்வங்கள் என்னை ஆதென்ஸ் பட்டணத்திற்கு அனுப்பி இருக்கின்றன. ஆகையால் நான் தெய்வங்களின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தே ஆகவேண்டும். நீங்கள் என்னைக் கொல்வதனல் உங்களுக்கு ஏற்படப்போகும் ஊறு சொல் லொணுது" என்று கூறினர்.

நீதிபதிகளுக்குள் வாக்கெடுக்கப்பட்டது. பெரும்பான்மை யோர் அவரைக் குற்றவாளி என்று தீர்மானித்து மரண தண்டனை விதித்தார்கள். முப்பது நாட்களுக்குள் சாக்ரடீஸைக் கொல்ல வேண்டும் என்று தீர்ப்பில் இருந்தது. சாக்ரடீஸின் நண்பர்கள் எல்லோரும் மிகவும் குழப்பமடைந்தார்கள். அவரைத் தப்பி ஓடி விடும்படி வேண்டிக் கொண்டார்கள். அல்லது சாவதற்குப் பதிலாக அபராதம் கட்டிவிட அனு



மதிக்குமாறு நீதிபதிகளை வேண்டிக்கொள்ளச் சொன்னார்கள். ஆனால் சாக்ரடீஸ் அதற்கெல்லாம் சம்மதிக்கவில்லை. உயிரைக் காத்துக்கொள்ள அவ்வாறெல்லாம் முற்படுவது கோழைத்தனம் என்று அவர் கூறினார். எத்தகைய இன்னல் ஏற்பட்டாலும் எதிர்கொண்டு வரவேற்பதே தருமம் என்றார். சாக்ரடீஸ் சாகும் நாள் வந்தது. அவருடைய தோழர்கள் எல்லோரும் அவரைச் சூழ்ந்து கொண்டு தேம்பித் தேம்பி அழுதார்கள். சாக்ரடீஸ் அவர்களைத் தேற்றினார். தம்முடைய உடல் அழிந்தாலும் உயிர் என்றென்றைக்கும் நிலைத்து வாழும் என்று அவர் சொன்னார். தம்மு

டைய மரணத்திற்குப் பிறகு தம்முடைய நண்பர்கள் எல்லாரும் தெய்வங்களுக்கு ஒரு திருவிழாக் கொண்டாடவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். அதற்குக் காரணம், சாவு என்பது உலகக் கட்டுகளிருந்து விடுபட்டு ஒரு பூரண வாழ்க்கையில் இறங்குவதாகும் என்று அவர் நினைத்ததே.

அந்தக்காலத்தில் மரண தண்டனை அடைந்தவர்கள் ஒரு கிண்ணம் விஷத்தைக் குடிக்கவேண்டும். அந்த விஷம் அவர் களை மெதுவாகக் கொன்றுவிடும், சாக்ரடீஸுக்கு விஷக் கிண்ணத்தைக் கொடுத்தபொழுது, அவர் அதை அமைதி யாக வாங்கிக் கொண்டார். கடைசித் தடவையாக ஆண்ட வனைத் துதி செய்தார். பிறகு சந்தோஷத்தோடு விஷத்தைக் குடித்தார். சாகும்வரை தம்முடைய நண்பர்களுடன் அவர் இன்பமாகப் பேசிக்கொண்டே இருந்தார். தம்முடைய கடன்களையெல்லாம் அடைத்துவிடுமாறு அவர் அவர்களைக் கேட்டுக்கொண்டார். தம்முடைய மரணத்தால் யாருக்கும் எந்த விதமான தொல்லையும் ஏற்படக்கூடாது என்பது அவர் எண்ணம். பிறகு அவர் அமைதியாகக் கீழே படுத்துக் கொண்டு உயிர் நீத்தார். இவ்வாறு உலகத்திலேயே மிகச் சிறந்த அறிவாளியானவர் அநியாய மரணத்தை அடைந்தார்.

சாக்ரடீஸ் எந்த விதமான புத்தகத்தையும் எழுதி வைத்து விட்டுப் போகவில்லை. தாம் புகழ் பெற வேண்டும் என்ற எண்ணமே அவருக்கு இருந்ததில்லை. மாணவர்களுக்குப் போதனை செய்ய வேண்டும் என்பதே அவருடைய எண்ணம். ஆனால், அவருடைய மாணவர்களில் பலர் சாக்ரடீஸ் சொன்ன வற்றையெல்லாம் மனத்தில் அப்படியே பதித்துக்கொண்டார் கள். மறுபடியும் அவைகளை நினைவுக்குக் கொண்டுவந்து எண்ணிப் பார்த்தார்கள். அத்தகைய மாணவர்களுள் முக்கிய மானவர் பிளேடோ என்பவர். அவர் சாக்ரடீஸை மிகவும் நேசித்தார். சாக்ரடீஸ் சொல்லியவற்றையெல்லாம் அவர் அப்படியே எழுதிவைத்தார். பிளேட்டோவின் மூலமாகத் தான் சாக்ரடீஸின் கருத்துக்கள் நமக்குக் கிடைத்திருக் கின்றன. பிளேடோவின் புத்தக்ங்கள் பல ஆண்டுகளாகக் கையினாலேயே பிரதி எடுக்கப்பட்டன. இப்படி நூற்றுக் கணக்கான ஆண்டுகள் கழிந்த பிறகு, அச்சு இயந்திரம் நடை

முறைக்கு வந்தபோது அந்தப் புத்தகங்கள் அச்சிடப்பட்டன. பிறகு பல மொழிகளிலும் அவை மொழிபெயர்க்கப்பட்டன. இந்தக் காலத் தத்துவ அறிஞர்களும் பிளேடோவின் புத்தகங் களைப் படிக்கிறார்கள். இன்றும் சாக்ரடீஸ் உலகத்திலேயே சிறந்த அறிஞராக மதிக்கப்படுகிறார்.

## 11. மாவீரன் அலெக்சாந்தர் (கி. மு. 356-323)

ஆதென்ஸை ஆண்டு வந்த பெரிக்லீஸ் என்ற தலைவர் இறந்த பிறகு, பல கிரேக்க இனங்களுக்குள் சண்டைகள் ஏற்பட்டன. ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டே இருந்ததால், கடைசியில் எல்லோரும் பலம் குறைந்து விட்டார்கள். அப் பொழுது கிரீஸ் தேசத்துக்கு வடக்கே மற்றொரு நாடு இருந் தது. அதன் பெயர் மாசிடன் என்பது. அங்கு ஒரு பலம் வாய்ந்த அரசர் ஆண்டு வந்தார். அவருடைய பெயர் பிலிப் என்பது. பிலிப் சிறுவராக இருந்தபோது, அவரது நாட்டு மக்கள் கிரேக்கரோடு சண்டையிட்டார்கள். அந்தச் சண்டை யில், தீபர்கள் என்ற கிரேக்க இனத்தால் பிலிப் சிறை செய்யப் பட்டார். அவர் வாலிபப் பருவம் வரை கிரீஸிலேயே வளர்ந்து வந்தார். அவர் கிரேக்க மொழியைப் பேசக் கற்றுக்கொண் டார்; கிரேக்க மக்களுடைய வாழ்க்கை அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. கிரேக்கர்களை மிகவும் நேசித்துப் புகழ்ந்தார். அந்தச் சமயம் பாரசீகச் சேனைகள் கிரீஸ் நாட்டின் மீது படை எடுத்தன. இதைப் பிலிப்பால் பொறுக்கமுடியவில்லை; தாம் மாசிடன் நாட்டுக்கு அரசர் ஆனவுடன் அதைப் பலமுள்ள நாடாகச் செய்ய வேண்டும், ஒரு பெரிய படை யுடன் போய்ப் பாரசீக சாம்ராச்சியத்தைத் தண்டிக்க வேண் டும் என்று பிலிப் முடிவு செய்து கொண்டார்.

சிறிது காலத்தில் பிலிப் மாசிடனுக்குத் திரும்பினார்; திரும்பியதும் மாசிடனைக் கிரீஸ் நாடு போல் செய்யத் தம்மால் முடிந்தவரை முயற்சி செய்தார். அவருக்கு அலெக் சாந்தர் என்ற மகன் பிறந்தார்; பிலிப் அலெக்சாந்தரைக்

கிரேக்கச் சிறுவரை வளர்க்கும் முறையிலேயே வளர்த்தார். அரிஸ்டாட்டில் என்ற பெரிய கிரேக்க ஞானியை அலெக்சாந் தருக்கு ஆசிரியராக நியமித்தார். அலெக்சாந்தர் நன்ருகப் படித்தார்; தம்முடைய ஆசிரியரை மிகவும் நேசித்தார். அதனுல் பொதுவாகத் தம்முடைய தந்தையைப் போலவே கிரேக்கருடைய பழக்கவழக்கங்களை மிகவும் விரும்பத் தொடங்கினுர். அவர் கூர்மையான புத்தியுள்ளவராகவும் இருந்தார். தம் மதி நுட்பத்தாலேயே அவர் பல பிரச்சனை களைத் தீர்ப்பது வழக்கம். ஒரு நாள் பிலிப் மன்னரிடம் சில ஆட்கள் ஓர் அழகான கருப்புக் குதிரையைக் கொண்டு வந் தார்கள். அதை விற்பதற்கு அவர்கள் விரும்பினுர்கள். அந் தக் குதிரை ஒரு முரட்டுக் குதிரை; கட்டுக்கு அடங்காமல் ஓடும். அதனுல் அதனிடம் செல்ல எல்லோரும் பயந்தனர். ஆகையால் பிலிப் அந்தக் குதிரையை வாங்காமல் கொண்டு போகும்படி சொல்லிவிட்டார், அலெக்சாந்தர் அப்பொழுது முன் வந்தார்; அவருக்கு அச்சமயம் பன்னிரண்டு வயது. அவர் தாம் அந்த முரட்டுக் குதிரையை அடக்குவதாகச் சொன்னுர். முயற்சி செய்து பார்க்குமாறு பிலிப் அலெக் சாந்தருக்குச் சொன்னுர். அலெக்சாந்தர் அந்தக் குதிரை யின் முகத்தைச் சூரியன் இருந்த திசைக்கு நேராகத் திருப்பினுர். அந்தக் குதிரை அதன் நிழலைக் கண்டு பயப்படு கிறது என்பதை அலெக்சாந்தர் கண்டு பிடித்தார். அதன் முகம் இப்பொழுது சூரியன் பக்கம் இருந்ததால் அதன் நிழல் அதற்குத் தெரிய வழியில்லாமல் போய்விட்டது. அதனுல் அது மிரளாமல், முரட்டுத்தனம் செய்யாமல் நின்றது. அலெக் சாந்தர் பிறகு அதன்மேல் ஏறிக்கொண்டு சவாரி செய்தார். அவரைக்காட்டிலும் வயதில் பெரியவர்கள் தங்கள் உடல் வலிமையால் செய்ய முடியாத ஒரு காரியத்தை அலெக் சாந்தர் தம் புத்திக் கூர்மையினுல் சாதித்தார்.

அலெக்சாந்தரின் இருபதாவது வயதில் ஒரு பயங்கரச் சம்பவம் நிகழ்ந்தது. பிலிப் மன்னருடைய மகளுக்குத் திரு மணம் நடந்தது. திருமணத்தில் பிலிப் மன்னர் விருந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தபொழுது அவருடைய பகைவன் ஒரு வன் அவரைக் கத்தியால் குத்திக் கொன்று விட்டான்.

ஆகையால், அலெக்சாந்தர் மாசிடன் தேசத்துக்கு அரசர் ஆனார். தம் தந்தையார் எண்ணியபடி பாரசீக நாட்டை வெல்ல வேண்டும் என்று அலெக்சாந்தர் திட்டம் போட்டார். முதலில் கிரீஸ் நாட்டுக்குப் போனார்; கிரேக்கர்கள் எல்லோரும் தம்மைத் தங்களுடைய அரசனாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சொன்னார்; அலெக்சாந்தர் சிறுவயதினர் ஆயிற்றே என்று முதலில் கிரேக்கர்கள் தயங்கினார்கள். ஆனால், அவருடைய கூர்மையான புத்தியையும், திறமையையும் கண்டு மனம் மாறினார்கள்; அலெக்சாந்தரைத் தம்முடைய மன்னராக ஒப்புக் கொண்டார்கள், அலெக்சாந்தர் புகழைவிட உண்மையையே பெரிதாக மதித்தார். இது கிரேக்கர்களுடைய மனத்தைக் கவர்ந்தது. ஒரு கிரேக்கப் பட்டணத்தில் டையாஜினீஸ் என்ற பெரிய தத்துவ ஞானி வசித்து வந்தார். அவர் பெரிய அறிவாளி. அதனால் பலர் அவரிடம் போய் யோசனை கேட்பார்கள். அலெக்சாந்தர் டையாஜினீஸினுடைய பட்டணத்துக்குப் போனார். அப்போது அவர் பாதை ஓரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். டையாஜினீஸின் மேதைக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்று அலெக்சாந்தர் ஆசைப்பட்டார்; ஆகையால் அவர் டையாஜினீஸைப் பார்த்து, "உங்களுக்காக நான் ஏதாவது செய்யக்கூடுமா?" என்று கேட்டார். அதற்கு டையாஜினீஸ் "ஒன்றும் இல்லை; சிறிது நகர்ந்து சூரிய ஒளியை மறைக்காமலிருந்தால் போதும்" என்று சொன்னார். அவர் ஒரு பெரிய மன்னருடன் இப்படிப் பேசுகிறாரே என்று சுற்றிலும் இருந்தவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஆனால், அலெக்சாந்தரோ அவர் உண்மையையே பேசியதற்காக அவரை மிகவும் கொண்டாடினார்.

கிரீஸ் தேசம் முழுவதும் சுற்றிய பிறகு அலெக்சாந்தர் மாசிடனுக்குத் திரும்பினார். வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டுப் படையுடன் பாரசீகத்தை நோக்கிப் புறப்பட்டார். பாரசீகர்களுக்கும் டரையஸ் என்ற ஒரு பெரிய அரசன் இருந்தான். யாராலும் வெல்லப்படாத ஒரு பெரிய சேனையும் பாரசீகருக்கு இருந்தது. பாரசீகப் படைகள் தாங்களே வெற்றிபெறுவோம் என்று கனவு கண்டுகொண்டு இருந்தன.

அலெக்சாந்தருடைய வீரர்கள் அவர்மேல் மிகவும் நம்பிக்கை வைத்திருந்தார்கள். அவருடைய தைரியம் அவர்களுக்கு நன்ருகத் தெரியும். அலெக்சாந்தர் தம்முடைய படைகளைத் தாமே முன்நின்று நடத்தினுர். ஆபத்து நிறைந்த இடங்களிலெல்லாம் அவரே முதலில் செல்வார்; தம்மால் செய்ய முடியாத வேலையைச் செய்யும்படித் தமது வீரர்களை ஏவ மாட்டார். ஒருமுறை கிரேக்கப் படையில் குடிதண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டது. வீரர்கள் தாகத்தால் வாடினுர்கள். கொஞ்சம் தண்ணீர் எங்கிருந்தோ கிடைத்தது. அதை அலெக்சாந்தருக்குத் கொண்டுவந்து கொடுத்தார்கள்; அவர் அதைக் குடிக்கவில்லை; தம்முடைய வீரர்கள் தாகத்தால் துன்பப்படும்போது, தாம் மட்டும் தண்ணீர் குடிப்பது அநியாயம் என்று அவர் எண்ணினுர். மேலும், தம்முடைய நுண்ணிய அறிவால், தம் வீரர்களைப் பல பயங்கரமான ஆபத்துக்களிலிருந்து பாதுகாத்தார். ஒருமுறை கிரேக்க வீரர்கள் ஒரு செங்குத்தான மலையின்கீழ் சிக்கிக்கொண்டனர். அந்த மலையின் உச்சியில் பாரசீகப் படைவீரர்கள் இருந்தார்கள். அவர்கள் உச்சியிலிருந்து கனமான இரதங்களை உருட்டிவிட்டார்கள். அவை மாசிடனியர் மீது உருண்டு விழுந்தன. மாசிடனியர்களுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. உடனே அலெக்சாந்தர் எல்லா வீரர்களையும் நெருக்கமாக உட்காரவைத்தார்; எல்லோரும் தம்முடைய கேடயங்களை உயரே தூக்கிக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும்படி செய்தார். மேலே இருந்து விழுந்த இரதங்கள் கேடயத்தின்மேல் உருண்டு அப்பால் போய் விழுந்தன. மாசிடனியர்களுக்கு எந்த விதமான சேதமும் ஏற்படவில்லை.

எவ்வித இடுக்கண்களும் அலெக்சாந்தரைத் தடுத்து நிறுத்தவில்லை. ஒருநாள் அவர் சிறிய ஆசியா என்ற நாட்டில் கார்டியம் என்ற பட்டணத்தை அடைந்தார். அந்தப் பட்டணத்துக்கு நடுவில் ஒரு தேர் இருந்தது. அது ஒரு கயிற்ருல் அழகாகக் கட்டப்பட்டிருந்தது. கயிற்றின் இரண்டு நுனிகளும் இருக்கும் இடம் என்பது தெரியாமல் கட்டப்பட்டிருந்தன. அதனுல் அந்தக் கயிற்றை யாராலும் அவிழ்க்க முடியவில்லை. அந்தக் கயிற்றை அவிழ்ப்பவர் உலகம் முழு

வதற்கும் அரசர் ஆவார் என்று அந்தப் பட்டணத்து மக்கள் சொன்னார்கள். அலெக்சாந்தர் அந்தத் தேரின் பக்கத்தில் போனார்; தம்முடைய வாளை உருவினார்; தேரில் கட்டப்பட்டு இருந்த கயிற்றை அறுத்து எறிந்தார்; இதன் மூலம் மற்றவர்க்குத் தொல்லை கொடுக்கும் துன்பங்கள் தமக்குத் தொல்லை கொடுக்கத் தாம் அனுமதிப்பது இல்லை என்பதை விளக்கி விட்டார்.

அலெக்சாந்தர் சிறிய ஆசியா தேசத்தின் வழியாகப் படையுடன் போனார். அவருக்கு வெற்றிமேல் வெற்றி கிடைத்தது. பாரசிகர்களைத் துரத்தித் துரத்தி அடித்தார். பிறகு அவர் பாலஸ்தீனத்துக்குப் போனார். அதன்பின் எகிப்து தேசத்தில் நைல் நதி தீரத்துக்குச் சென்றார்; அதன் முகத்துவாரத்தில் அவர் ஒரு புதிய பட்டணத்தைக் கட்டினார்; அதற்கு அலக்ஸாண்ட்ரியா பட்டணம் என்று பெயர் கொடுத்தார். அலக்ஸாண்ட்ரியா இன்றைக்கும் எகிப்து தேசத்தில் ஒரு முக்கியமான பட்டணமாக இருக்கிறது. அந்தப் பட்டணம் கிரேக்கக் கலைகளுக்கு நடுநிலையமாக விளங்க வேண்டும்; அதில் ஒரு சிறந்த புத்தகாலயத்தை நிறுவவேண்டும்; ஒரு சர்வகலா சாலையையும் ஏற்படுத்தவேண்டும்; அதில் உலகப் புகழ் வாய்ந்த ஆசிரியர்கள் சிலரை நியமிக்க வேண்டும் என்றெல்லாம் அலெக்சாந்தர் கனவு கண்டார்; அவருடைய கனவு இன்று பலித்துவிட்டது. அலெக்ஸாண்ட்ரியா பட்டணம் இன்று அதுபோலவே சிறந்து விளங்குகிறது.

பிறகு அலெக்சாந்தர் எகிப்திலிருந்து புறப்பட்டார்; பாரசிகர்களை மறுபடியும் தாக்க வேண்டும் என்பது அவருடைய எண்ணம். இஸ்ஸஸ் என்ற இடத்தில் அவர் டரையஸின் சேனைகளைச் சந்தித்தார். பாரசிகர்கள் அலெக்சாந்தரைக் கண்டு பயப்படவில்லை; ஒவ்வொரு கிரேக்க வீரனுக்கும் அவர்களிடத்தில் பத்துப் பாரசிகர்கள் ஈடு கொடுக்க இருந்ததே அதற்குக் காரணம். ஆனால் அலெக்சாந்தரின் ஆட்களோ மிகவும் திறமையாகவும், சிறிதுகூட அலுப்பு சலிப்பு இல்லாமல் சண்டை செய்தார்கள். அதனால், பாரசிகப் படை வெகு விரைவில் தோற்றோட ஆரம்பித்தது. டரையஸ் மன்னனே முதலில் பயந்து ஓடிவிட்டான்.

போர் முடிந்தது; கிரேக்க வீரர்கள் பாரசீகருடைய கூடாரங்களுக்குள் நுழைந்தார்கள். டரையஸ் அவனுடைய மனைவியையும், தாயையும் தவிக்க விட்டுவிட்டு ஓடிவிட்டதை அவர்கள் கண்டார்கள். அலெக்சாந்தர் இந்த விஷயத்தைக் கேள்விப்பட்டார்; உடனே அவர்களைத் தம்முடைய சொந்தக்





கூடாரத்துக்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டார். அங்கு அவர்களை மிகவும் மரியாதையாகவும் அன்பாகவும் நடத்தினர். ஒரு பெரிய அரசனுடைய இராணியையும், தாயாரையும் எப்படி நடத்தவேண்டுமோ அந்த விதமாக அவர்களை நடத்தினர். சிறிது காலத்துக்குப் பிறகு டரையஸ் மன்னன் கொல்லப்பட்டான். ஆகையால் பாரசீக சாம்ராச்சியத்துக்கு அலெக்சாந்தர் சக்கரவர்த்தி ஆனர்.

அலெக்சாந்தர் முதலில் புறப்பட்டபொழுது பாரசிகத்தை வெல்ல வேண்டும் என்பதே அவருடைய நோக்கமாக இருந்தது. இப்போது அந்த நோக்கம் பலித்தது. ஆகையால் அவர் திரும்பித் தம்முடைய தேசத்துக்குப் போயிருந்தால் நன்மையாக முடிந்திருக்கும். ஆனால், பாரசிகத்தை வென்றவுடன் அவருக்குக் கர்வம் பிடித்து விட்டது. அவருடைய ஆசை வளர்ந்தது. அவர் தம்முடைய நாட்டுக்குத் திரும்ப மறுத்துவிட்டார். உலகம் முழுவதையும் வெல்ல வேண்டும் என்று அவர் கூறினர். கிழக்குத் தேசங்களின் செல்வ வளம் அவருடைய ஆசையை வளர்த்தது. அவர் சாதாரணமான கிரேக்க ஆடைகளை உடுத்துவதை நிறுத்திவிட்டார்; விலை உயர்ந்த அழகான பாரசீக ஆடைகளை உடுத்திக் கொண்டார். பாரசீக மொழியையும் கற்றுக்கொண்டார். அவர் கிரேக்கர்களைவிடப் பாரசிகருக்கு அதிகச் சலுகை காட்டுகிருர் என்று அவருடைய ஆட்களே அதிருப்தி அடைந்தார்கள். அலெக்சாந்தர் ஓர் அழகான பாரசீக அரசகுமாரியையும் கலியாணம் செய்து கொண்டார். இதைப் பார்த்துக் கிரேக்கர்கள் முணுமுணுத்தார்கள். சிலர் உடனே கிரீஸ் தேசத்துக்குத் திரும்பிப்போக வேண்டும் என்றும், தம்முடைய மனைவி மக்களைப் போய்ப் பார்க்க வேண்டும் என்றும் சொன்னர்கள். ஆனால் அலெக்சாந்தர் அவர்கள் திரும்பிச் செல்ல அனுமதி கொடுக்கவில்லை. அவர்கள் இன்னும் கிழக்குத் திசையில் சென்று புதிய தேசங்களை வெல்ல வேண்டும் என்று கட்டளை இட்டார். கிரேக்க சேனை மலைகளையெல்லாம் தாண்டிக் கொண்டு கிழக்கே நடந்தது; இந்தியாவின் சமவெளிப் பிரதேசத்தை அடைந்தது. சிந்துநதிக் கரையில் நடந்த பல சண்டைகளில் அலெக்சாந்தரே வெற்றி பெற்ருர்; பாரசிகத்தை வென்றது போலவே, இந்தியாவையும் தாம் வெல்ல முடியும் என்று அலெக்சாந்தர் கனவு கண்டார். ஆனல் அவருடைய வீரர்கள் பொறுமை இழந்தார்கள். கிழக்குத் திசை நோக்கிச் செல்லப் பிடிவாதமாக மறுத்துவிட்டார்கள். உடல் தளர்ந்து மெதுவாக அவர்கள் பின்னேக்கித் திரும்பினர்கள். பாபிலனில் ஸூஸா என்ற பட்டணத்தை அடைந்தார்கள். அங்கு அலெக்சாந்தருக்குக் காய்ச்சல் கண்டது. நாளுக்கு

நாள் அவர் நிலைமை மோசமாகிக்கொண்டே வந்தது. கடை-சியில் அவர் அங்கேயே மரணம் அடைந்துவிட்டார்.

அலெக்சாந்தர் இறந்தபொழுது, அவருக்கு வயது முப்பத்துமூன்றுதான். அந்த வயதுக்குள்ளேயே அவரைப் போன்ற வீரர் உலகத்தில் இல்லை என்று பெயர் எடுத்தார். ஆனால் சாக்ரடீஸ் அல்லது அலெக்சாந்தரின் ஆசிரியரான அரிஸ்டாட்டில் முதலிய பெரிய தத்துவ ஞானிகளுடைய பணிகளைப்போல அலெக்சாந்தருடைய சாதனை நிலைத்து நிற்கவில்லை. அலெக்சாந்தருக்குப் பின்னால் நாட்டை ஆள வாரிசு எதுவும் இல்லை. அவருடைய மரணத்துக்குப்பின் அவருடைய சேனைத்தலைவர்களுக்குள் கலகம் ஏற்பட்டது; சண்டை போட்டுக்கொண்டு அலெக்சாந்தர் பிடித்த சேதங்களைத் துண்டு போட்டுக் கொண்டார்கள். அலெக்சாந்தருடைய தேசமான மாசிடன் மறுபடியும் சிறப்பற்ற நாடாகப் போய் விட்டது. அலெக்சாந்தருடைய பெருமையை உணர்த்த அவர் செய்த ஒரே ஒரு பணி தான் உதவி செய்தது; அவர் நிறுவிய பல பட்டணங்கள் இன்றைக்கும் உள்ளன. அலெக்சாந்தர் இறந்த பிறகும் அந்நகரங்கள் நிலைத்து நின்றன. எகிப்து தேசத்தில் உள்ள அலெக்ஸாண்ட்ரியா பட்டணம் ஆப்பிரிக்காவிலேயே முக்கியமான பட்டணம். அது உலக மக்களுக்கு எல்லாம் அலெக்சாந்தரின் பெயரை நினைவூட்டிக் கொண்டு இன்னும் நிலவுகிறது.

## 12. ஆர்க்கிமீடீஸ் (கி. மு. 287-212)

ஆர்க்கிமீடீஸ் என்பவர் ஒரு பெரிய விஞ்ஞானி; அவர் கிறிஸ்து பிறப்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தார். அவர் சாக்ரடீஸைப் போலவே ஒரு பெரிய கிரேக்கச் சிந்தனையாளர்; அரிஸ்டாட்டிலைப் போல ஆர்க்கிமீடீஸ் ஒரு சிறந்த விஞ்ஞானி. ஆனால், கிரேக்க நாடு தன் பெருமையை இழந்து இருநூறு ஆண்டுகள் ஆனபிறகு, ஆர்க்கிமீடீஸ் அந்த நாட்டில் பிறந்து வாழ்ந்தார். பல கிரேக்கர்கள் தம்முடைய சொந்த நாட்டை

விட்டுவிட்டு வெளியேறினர்கள்; அவர்கள் மத்தியதரைக் கடலைச் சுற்றிலும் இருந்த கிரேக்கக் குடியேற்ற நாடுகளுக்குப் போய் வாழ்க்கை நடத்தினர்கள். அங்குக் கிரேக்கக் கலை களைப்பற்றி ஆராய்ச்சி நடத்தினர்கள்.

கிரேக்கக் குடியேற்ற நாடுகளில் மிக முக்கியமான பெரிய நகரங்களும் இருந்தன. அவைகளில் ஒன்று ஸைரக்யூஸ் என்பது. அது ஒரு பெரிய செல்வச் செழிப்புடைய வாணிபத் தலம். மேலும் அது இத்தாலி நாட்டுக்குத் தெற்கே உள்ள ஸிஸிலி என்ற தீவுக்குத் துறைமுகப் பட்டின மாகவும் இருந்தது. ஆர்க்கிமீடீஸின் தந்தை சைரக்யூஸ் நகரத்தில் ஒரு பெயர் பெற்ற மனிதர். அவர் அரசனின் உறவினர் என்றும் சிலர் கூறுகிருர்கள். அவர் தம்முடைய மைந்தன் ஆர்க்கிமீடீஸ் நல்ல அறிவாளியாக இருப்பதை உணர்ந்து ஆர்க்கிமீடீஸைச் சிறந்த முறையில் படிக்கவைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். இதற்காக எகிப்தில் உள்ள அலெக்ஸாண்ட்ரியாப் பட்டணத்தில் இருந்த பெரிய பள்ளிக்கூடத்துக்கு ஆர்க்கிமீடீஸை அனுப்பினர். இந்த நகரம் அலெக்சாந்தர் என்ற பேர்பெற்ற கிரேக்க அரசரால் நிறுவப்பட்டது. அலெக்ஸாண்ட்ரியா நகரத்தில் கோனன் என்ற தலைசிறந்த ஆசிரியரிடம் ஆர்க்கிமீடீஸ் பாடம் கற்ருர். இந்தக் கோனன் என்பவர் யூக்லிட் என்ற பெயர் பெற்ற கணக்கு ஆசிரியரின் மாணவர். ஒரு காலத்தில் அலெக் ஸாண்ட்ரியா பட்டணம் கணித சாத்திரத்தில் மேம்பட்டு விளங்கியதற்கு இந்த யூக்லிடே காரணம் ஆவார். ஆர்க்கி மீடீஸ் மிகவும் கஷ்டப்பட்டுப் படித்தார். படிக்கத் தமக்குக் கிடைத்த வாய்ப்பை நன்ருகப் பயன்படுத்திக் கொண்டார். அவர் ஸைரக்யூஸுக்குத் திரும்பிய பிறகு, அறிவில் சிறந்த விஞ்ஞானியாக விளங்கினர். இறுதிவரை ஆர்க்கிமீடீஸ் தம்முடைய நகரத்தைவிட்டு வெளியே போகவே இல்லை.

ஸைரக்யூஸை ஆண்டு வந்த அரசனுடைய பெயர் ஹையெரோ என்பது. அவன் ஆர்க்கிமீடீஸினுடைய நண்பன். அந்த அரசனுக்கு ஆர்க்கிமீடீஸ் தம்முடைய அறிவு ஆராய்ச்சி யின் மூலம் எவ்வாறெல்லாம் உதவி செய்ய முடியுமோ அவ்வா றெல்லாம் உதவி செய்து வந்தார்; அலெக்ஸாண்ட்ரியாவில்

இருந்தபொழுதே ஆர்க்கிமீடீஸ் தமக்குக் கணிதத்தில் பேரறிவு இயற்கையாகவே உண்டு என்பதைக் காட்டினர்; சைரக்யூஸுக்குத் திரும்பிய பிறகும் அவர் தொடர்ந்து கணிதத்தைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தார்; விரைவில் உலகத்திலேயே தலைசிறந்த கணிதமேதையாக விளங்கினர். சைரக்யூஸ் மக்களுக்கு மகிழ்ச்சியூட்டுவதற்காக ஆர்க்கிமீடீஸ் பல புதுப் புது எந்திரங்களைக் கண்டு பிடித்தார். அவற்றை எல்லாம் பார்த்த மக்கள் அவரைப்பற்றி மிகவும் பெருமைப் பட்டுக் கொண்டனர். ஆர்க்கிமீடீஸ் கண்டுபிடித்த பலவகைப் பொறிகளிலும் மிகப் பெருமை வாய்ந்தது "ஆர்க்கிமீடீஸ் ஸ்கிரு" என்பது. இது ஒரு தண்ணீர் இறைக்கும் பம்ப்பு. இதன் கைப்பிடியை ஒருவன் திருப்பி விட்டால் போதும்; கடலிலிருந்து கப்பலினுள் சென்ற தண்ணீரையெல்லாம் இந்தப் பம்ப்பு இழுத்து வெளியே ஊற்றிவிடும்.

ஒருநாள் ஹைறயெரோ என்ற அரசன் ஆர்க்கிமீடீஸைத் தனக்கு உதவி செய்யுமாறு வேண்டிக்கொண்டான். அந்த அரசன் தட்டான் ஒருவனிடம் கொஞ்சம் பொன் கொடுத்திருந்தான். அந்தப் பொன் கிரீடம் செய்வதற்காகக் கொடுக்கப் பட்டது. ஆனல் அவன் அரசனையே ஏமாற்ற எண்ணினன்; அரசன் கொடுத்த பொன்னில் சிறிது எடுத்து மறைத்து விட்டான். அதற்குப் பதிலாக வேறு ஓர் உலோகத்தைப் போட்டுக் கிரீடத்தைத் தயாரித்தான்; பின் அதை அரசனிடம் கொண்டுபோய்க் கொடுத்தான். அரசனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று; தட்டான் பொன்னைத் திருடியிருக்கக்கூடும் என்று நினைத்தான். எப்படிக் கண்டுபிடிப்பது? இதற்கே ஆர்க்கிமீடீஸின் உதவியை அவன் வேண்டினன்; உண்மையைக் கண்டுபிடிக்குமாறு கேட்டுக்கொண்டான். ஆர்க்கிமீடீஸுக்கும் இதை எப்படிக் கண்டு பிடிப்பது என்று தோன்றவில்லை. இதைப்பற்றிச் சிந்தித்துச் சிந்தித்து அவருடைய மூளையே குழம்பிப்போய்விட்டது.

ஒருநாள் ஆர்க்கிமீடீஸ் பொதுமக்கள் குளிக்கும் தொட்டியில் குளிப்பதற்குப் போனர். தண்ணீர்த் தொட்டியில் இறங்கியதும், தண்ணீர் மேலே எழும்பி, தொட்டியின் விளிம்பில் வழிந்து ஓடியதைக் கண்டார். உடனே, அரசன் கேட்ட

கேள்விக்கு விடை அவருக்குப் பளிச்சென்று தோன்றியது. அவரால் மகிழ்ச்சியைத் தாங்கமுடியவில்லை. தொட்டியில் இறங்கியவர் அப்படியே எழுந்து சைரக்யூஸ் நகரத் தெருக்களின் வழியாக, ஆடை இல்லாமல் "யூரீகா, யூரீகா" என்று கத்திக்கொண்டே ஓடினார். இதற்குக் "கண்டுபிடித்து விட்டேன்; கண்டுபிடித்து விட்டேன்" என்பது பொருள். ஓடியவர் நேராக அரண்மனைக்குப் போய் அரசனைக்கண்டார்.

ஆர்க்கிமீடீஸ் ஒரு பாத்திரம் கொண்டுவரச் சொன்னார்; பாத்திரம் முழுதும் தண்ணீர் ஊற்றினார். அதற்குள் தட்டான் கொடுத்த கிரீடத்தை வைத்தார். அப்பொழுது பாத்திரத்தில் இருந்து வெளியே வழிந்த தண்ணீரை அளந்து கொண்டார்; பிறகு மூடியை எடுத்துவிட்டு மறுபடியும் பாத்திரம் நிறையத் தண்ணீர் ஊற்றினார்; தட்டானுக்கு முதலில் கொடுத்த அளவு பொன் கொண்டுவரச் சொல்லி அதை அந்தப் பாத்திரத்தில் போட்டார். அப்பொழுது பாத்திரத்தில் இருந்து வழிந்த தண்ணீரையும் அளந்து கொண்டார். இந்த இரண்டு அளவுகளுக்கும் இடையே இருந்த வேறுபாட்டைக் கண்டுபிடித்தார். இதைக் கொண்டு தட்டான் எவ்வளவு பொன் திருடி இருக்கவேண்டும் என்று கண்டுபிடித்துக் கூறினார்.

ஆர்க்கிமீடீஸின் வயதான காலத்தில் சைரக்யூஸ் பட்டணத்துக்குப் பெருத்த துன்பம் ஏற்பட்டது. அப்பொழுது இத்தாலி நாட்டில் ரோமானியர் என்ற மக்கள் வாழ்ந்து வந்தனர்; அவர்கள் பலம் மிகுந்த மக்களாக இருந்தனர்; அவர்களுக்கும் ஆப்பிரிக்காவில் கார்த்தேஜ் என்ற இடத்தில் வாழ்ந்த மக்களுக்கும் சண்டை மூண்டது.

கார்த்தேஜ் மக்கள் ஆப்பிரிக்க மக்கள் அல்ல; அவர்களுடைய முன்னோர்கள் ஆசியாக் கண்டத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்கள் ஆசியாக் கண்டத்தில், வட ஆப்பிரிக்காவுக்கு வியாபாரம் செய்ய வந்து அங்கேயே தங்கிவிட்டார்கள். அவர்களுக்குப் பினிஷியர்கள் என்று பெயர். அவர்களுடைய சொந்த நாடு பாலஸ்தீனத்துக்கு வடக்கே இருந்தது. அவர்களுடைய முக்கியமான நகரங்கள் டைர், ஸைடன் என்பன. இந்த நகரங்களிலிருந்து அவர்கள் கப்பல்கள்

மூலமாக உலகம் எங்கும் போய் வியாபாரம் செய்தார்கள். இவர்களில் சிலர் இங்கிலாந்துக்குக்கூடப் போனுர்கள். தென்மேற்கு இங்கிலாந்தில் கார்ன்வால் என்ற பட்டினத்து மக்களிடமிருந்து வெள்ளீயத்தை வாங்கிக்கொண்டு திரும்பினுர்கள். மற்றும் சிலர் ஆப்பிரிக்காவின் கடற்கரை நெடுகபெனின் வளைகுடாவரை வியாபாரம் செய்தார்கள். இவர்களைப் பற்றிய செய்தி பைபிளில் "அரசர்கள் புத்தகம்" என்ற பகுதியில் சொல்லப்படுகிறது. அந்தப் புத்தகத்தில், டைர் நகர அரசனுன ஹிரம் என்பவன் ஜெருசலெம் என்ற நகரில் ஸாலமன் என்ற மன்னன் கட்டிய கோயிலுக்கு வேண்டிய "ஸிடார்" மரங்களை அனுப்பிய செய்தி சொல்லப்படுகிறது. கிரேக்க மக்களைப் போலவே பினிஷியர்களும் தம் இருப்பிடத்தை விட்டுவிட்டு அயல் நாடுகளில் குடியேறினுர்கள். ஸிஸிலித் தீவில் சைரக்யூஸ் நகரம் கிரேக்கர் பட்டணமாக விளங்கியது போலவே, ஆப்பிரிக்காவில் கார்த்தேஜ் பட்டணம் பினிஷியர் நகரமாக விளங்கியது. இந்த நகரம் மிகவும் திறம்பட்ட, செல்வச் செழிப்புடைய பட்டணமாக விளங்கியது. ஆர்க்கிமீடீஸின் காலத்தில் கார்த்தேஜ் நகரத்தவரும், ரோமானியரும் மத்தியதரைக் கடலுக்கு உரிமையுடையவர்கள் யார் என்பதைப் பற்றிச் சண்டையிட்டுக் கொண்டார்கள். கார்த்தேஜ் பட்டணத்தில் ஹானிபல் என்ற சிறந்த தளகர்த்தன் இருந்தான். அவன் முயன்று சைரக்யூஸ் மக்களையும் தனக்கு உதவி செய்யுமாறு வேண்டி, அப்படியே அவர்கள் துணையையும் பெற்ருன்.

இதைப் பற்றிக் கேட்டவுடனே ரோமானியர்களுக்குக் கடுஞ்சினம் உண்டாகியது. சைரக்யூஸ் மக்கள் தங்களுக்குத் துரோகம் செய்துவிட்டார்கள் என்று நினைத்தார்கள்; சைரக்யூஸைப் பிடிப்பதற்காகத் தங்களுடைய கப்பல்களையும், போர் வீரர்களையும் அனுப்பினுர்கள் ; சைரக்யூஸ் நகரத்தைக் கடலிலிருந்து ரோமானியப் படை வீரர்கள் தாக்கினர். ஆர்க்கிமீடீஸ் தம்மாலான உதவிகளை எல்லாம் தம்முடைய அரசனுக்குச் செய்தார். அவர் பகைவர்களாகிய ரோமானியர்களைக் கொல்வதற்குப் பலவகைப்பட்ட பொறிகளைச் செய்து கொடுத்தார். இதனுல் ரோமானியர்கள் எளிதில்

சைரக்யூஸ் நகரைக் கைப்பற்ற முடியவில்லை ; மூன்று ஆண்டு கள் போர் நடத்திய பிறகே அந்த நகரத்தை அவர்களால் பிடித்துக்கொள்ள முடிந்தது.

ஒருமுறை ஆர்க்கிமிடீஸ் ஒரு பொறியைக் கண்டுபிடித் தார். அந்தப் பொறி ரோமானியர்களுடைய கப்பல்களின் முன் புறத்தைப் பிடித்துத் தூக்கியது. பிறகு திடீரென்று கீழே போட்டு நீரில் அமிழ்த்தி மூழ்கடித்தது. வேறொரு செய்தியும் ஆர்க்கிமிடீஸைப் பற்றிச் சொல்லப்படுகிறது. அவர் கண்ணாடியினுதவியால் சூரிய கிரணங்களை ரோமானியக் கப்பல்களின்மேல் பாய்ச்சி அவற்றை எரித்துச் சாம்பல் ஆக்கினாராம். இக் கதை எவ்வளவு உண்மை என்று சொல்ல முடியாது.

இறுதியில் ரோமானியர்கள் சைரக்யூஸ் பட்டணத்தைக் கைப்பற்றிவிட்டார்கள். காரணம், அவர்கள் படை சைரக்யூஸ் படையைவிடப் பெரியதாகவும் பலம் பொருந்தியதாகவும் இருந்ததே. ரோமானியப் படைகளுக்கு மார்செலஸ் என்பவன் தலைமை வகித்தான். அவனுக்கு ஆர்க்கிமிடீஸின் பெருமை நன்றாகத் தெரியும். அவரிடத்தில் அவனுக்கு நல்ல மதிப்பு உண்டு. அவருடைய கல்விச் சிறப்பைக் கண்டு ஆச்சரியப்பட்டவருள் அவனும் ஒருவன்.

சைரக்யூஸ் மீது கடைசித் தடவையாகப் போர் தொடுத்த பொழுது அவன் தன்னுடைய படை வீரர்கள் எல்லோரையும் ஒன்றாகத் திரட்டினான்; அவர்கள் ஆர்க்கிமிடீஸுக்கு எந்த விதமான தொல்லையையும் கொடுக்கக்கூடாது என்றும், கடுமையான கட்டளையிட்டான். துரதிருஷ்டவசமாக, ரோமானியர்கள் சைரக்யூஸ் நகரத்தைக் கைப்பற்றியபோது, ஆர்க்கிமிடீஸ் தம்முடைய வீட்டில் இல்லை. அவர் கடற்கரை யில், மணலில் ஒரு கணிதப் புதிரை விடுவித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவரே ஆர்க்கிமிடீஸ் என்று அறியாத ரோமானிய வீரன் ஒருவன், அவர்மீது தன் ஈட்டியைப் பாய்ச் சிக் கொன்றுவிட்டான். இப்படி ஆர்க்கிமிடீஸ் தற்செயலாகக் கொல்லப்பட்டதை அறிந்து, மார்செலஸ் மிகவும் வருத்தப் பட்டான். ஆர்க்கிமிடீஸின் உடலை அரச மரியாதையோடு அடக்கம் செய்யுமாறு தன்னுடைய வீரர்களுக்குக் கட்டளை

யிட்டான். ஆர்க்கிமீடீஸின் குடும்பத்தாரை எல்லாம் கண்டு பிடித்து அவர்களுக்குப் பல உதவிகளையும் செய்தான்.



அந்த நாளில் அலெக்ஸாண்ட்ரியா நகரத்தில் பல பெரிய விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து வந்தார்கள். அரிஸ்டார்கஸ் என்று ஒரு விஞ்ஞானி இருந்தார். அவரே முதன் முதல் உலகம் சூரியனைச் சுற்றுகிறது என்று கண்டு பிடித்துக் கூறியவர். அடுத்தாற்போல் எரடாஸ்தினீஸ் என்ற ஒரு விஞ்ஞானி இருந்தார். அவர்தான் முதன்முதலாக உலகம் எவ்வளவு பெரியது என்பதை அளந்து கூறியவர். ஆனால், இவர்கள் எல்லோரையும்விடச் சிறந்த விஞ்ஞானி யாக விளங்கியவர் ஆர்க்கிமீடீஸே. கணிதத்திலும் பொறி யியலிலும் அவர் கண்டு பிடித்தவை இன்றும் பயனுள்ளவை களாக இருக்கின்றன.

# 13. ஹானிபல் (கி. மு. 247-183)

அலெக்சாந்தரின் மரணத்திற்குப்பின் சுமார் நூறு ஆண்டுகட்குப் பிறகு கார்த்தேஜ் பட்டணத்தில் ஒரு குழந்தை பிறந்தது. கார்த்தேஜ் பட்டணம் வடக்கு ஆப்பிரிக்காவில் உள்ளது. அந்தக் குழந்தைக்கு ஹானிபல் என்று பெயர். ஹானிபலின் தகப்பனுருடைய பெயர் ஹமீல்கர் என்பது.

ஐரோப்பாவின் தெற்கே இத்தாலி என்று ஒரு தேசம் இருக்கிறது. அங்கு ரோமாபுரி என்று ஒரு முக்கியப் பட்டணம் உள்ளது. அந்தப் பட்டணத்துக்கும் கார்த்தேஜ் பட்டணத்துக்கும் இடையே ஒரு சமயம் சண்டை ஏற்பட்டது. அந்தச் சண்டையில் கார்த்தேஜ் வீரர்களுக்கு ஹானிபலின் தந்தை ஹமீல்கர் தலைமை வகித்தார். கார்த்தேஜ் பட்டணத்தில் மும்முரமாக வியாபாரம் நடந்தது; அங்கே நிறைய அடிமைகளும் வேலை செய்தார்கள். அதனுல் அந்தப் பட்டணம் செல்வம் மிகுந்த பட்டணமாக விளங்கியது. அதன் பண்டைச் சரித்திரத்தை நினைத்து அதன் மக்கள் பெருமைப்பட்டார்கள். அந்தப் பட்டணத்து மக்கள் பல அழகான பொருள்களைச் செய்தார்கள்; அவர்கள் கட்டிய கப்பல்கள் உலகத்திலேயே முதல் தரமானவை; அழகானவை; கார்த்தேஜ் மத்திய தரைக்கடல் கரையில் நெடுங்காலமாக முக்கியப் பட்டணமாக இருந்தது. ஆனுல் பிறகு ரோமாபுரி சிறிது சிறிதாக வளர்ந்து அதனேடு போட்டியிட்டது. ரோமாபுரியின் சிறப்பு வளர்ந்துகொண்டே போனது. அது முதலில் ஒரு சிறிய கிராமமாகவே தோன்றியது; ஆனுல் நாளடைவில் அதன் மக்கள் பல பக்கங்களிலும் பரவிச் சென்றுர்கள்; கடைசியில் இத்தாலி தேசம் முழுவதையுமே கைப்பற்றிக் கொண்டார்கள். ரோமானிய மக்கள் தைரியசாலிகள்; புத்திக் கூர்மை உடையவர்கள்; கார்த்தேஜ் பட்டணம் பலம் உடைய பட்டணமாக இருக்கும் வரை தாங்கள் பலம் அடைய முடியாது என்று அவர்கள் எண்ணினுர்கள். ஆகையால் ரோமுக்கும் கார்த்தேஜுக்கும் இடையே சண்டை மூண்டது. அப்போது ஹானிபல் சிறுவ

ஞக இருந்தார். அந்தச் சண்டையில்தான் அவர் தகப்பஞர் கார்த்தேஜ் படைக்குத் தலைமை வகித்தார்.

ஹானிபலுக்கு ஒன்பது வயதானபோது, அவருடைய தகப்பஞர் போர்முனையிலிருந்து வீட்டுக்குத் திரும்பினர். ரோமானியர்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள் என்ற துக்கச் செய்தியைத் தெரிவித்தார்; கார்த்தேஜ் மக்கள் சமாதானம் செய்து கொள்ள வேண்டும் என்று சொன்னர். ரோமானியர்களிடம் ஒரு கப்பல் கூட இல்லை; ஆனல் கார்த்தஜீனியரிடம் நிறையக் கப்பல்கள் இருந்தன. அதனல் ரோமானியர் தங்களை ஒன்றும் செய்யமுடியாது என்று கார்த்தஜீனியர் நினைத்தார்கள். ஆனல் அவர்களுடைய கப்பல் ஒன்று ரோமாபுரிப் பக்கம் கரைக்குப் போய்விட்டது. ரோமானியர்கள் அதைப் பார்த்து அதைப்போலவே கப்பல்கள் கட்டிக் கொள்ளக் கற்றுக் கொண்டார்கள். இப்படியே ரோமானியர்கள் இருநூறு கப்பல்கள் கட்டி முடித்துவிட்டார்கள். இதன் மூலம் தான் ரோமானியர்களால் கார்த்தஜீனியரைத் தோற்கடிக்க முடிந்தது.

அந்தக் காலத்தில் ஸ்பெயின் தேசத்திலும் கார்த்தேஜ் மக்கள் சண்டை நடத்திக்கொண்டு இருந்தார்கள். ரோமாபுரிச் சண்டை முடிந்ததும், ஹமீல்கர் ஸ்பெயினுக்குப் போய்ச் சண்டை செய்தார். அவர் ஸ்பெயினுக்குப் புறப்படுவதற்கு முன்னல் ஒரு காரியம் செய்தார். அவர் ஹானிபலைத் தம் வீட்டில் இருந்த சமயம் குடும்பப் பலிபீடத்துக்கு முன்னல் அழைத்துக்கொண்டு போஞர். ஹானிபலை உயிர் உள்ளவரை ரோமானியர்களோடு நட்பு பாராட்டுவதில்லையென்று தெய்வங்களின் மேல் ஆணையிட்டுச் சொல்லச் செய்தார். ரோமாபுரி பலமாக இருந்தவரை, கார்த்தேஜுக்கு ஆபத்துத் தான்; ஆகையால், ரோமாபுரியை அடியோடு அழித்திவிட கார்த்தேஜ் மக்கள் தீர்மானம் செய்து கொள்ள வேண்டும் என்று தம்முடைய மைந்தனுக்கு ஹமீல்கர் விளக்கிச் சொன்னர்.

ஹானிபல் தம்முடைய தந்தைக்குச் செய்து கொடுத்த சத்தியத்தை மறக்கவே இல்லை. சிறுவஞக இருந்த போதே அவர் பலவிதமான கனவுகளைக் கண்டார். தம்முடைய

தகப்பனாரைப் போலவே தாமும் இராணுவ வீரர் ஆகவேண்டும், ரோமாபுரியைத் தாக்கவேண்டும் என்றெல்லாம் கனவு கண்டார். ஹானிபலுக்கு ஒரு சகோதரர் இருந்தார். அவர் பெயர் ஹாஸ்ட்ருபல் என்பது. அவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து கொண்டு பெரியவர்களான பிறகு தாம் என்னென்ன செய்யவேண்டும் என்பது பற்றிப் பேசுவார்கள்; தம்முடைய பட்டணத்துக்கு எந்த வழியில் எல்லாம் பெருமை தேடிக் கொடுக்க முடியும் என்று திட்டம் போடுவார்கள்.

ஹானிபல் பெரியவர் ஆனதும் இராணுவ வீரர் ஆனார். அவர் மிகவும் கஷ்டப்பட்டு உழைத்தார். அதனால் அவர் ஒரு சேனைத் தலைவர் ஆக்கப்பட்டார். அவர் தம் தந்தைக்குச் செய்து கொடுத்த சத்தியத்தை மறக்கவில்லை; உடனே சேனையுடன் போய் ரோமைத் தாக்க வேண்டும் என்று துடித்தார். ஆனால், அவர் ரோமாபுரியோடு சண்டைக்குப் போக வேண்டும் என்று எவ்வளவுதான் துடித்த போதிலும், கார்த்தேஜியர் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. ஸ்பெயினில் சண்டை செய்ய அவர்கள் ஹானிபலை அனுப்பினார்கள். இது ஹானிபலுக்குப் பெருத்த ஏமாற்றத்தைக் கொடுத்தது. இருந்தாலும் அவர் உறுதி தளரவில்லை. எப்படியாவது ரோமாபுரியோடு சண்டையைக் கிளப்பிவிட வேண்டும் என்று முயற்சி செய்தார். ஸ்பெயின் தேசத்தில் சில பட்டணங்கள் இருந்தன. ஹானிபல் அந்தப் பட்டணங்களில் ஒன்றைத் தாக்கி அதைப் பிடித்துக் கொண்டார். அது ஒரு செல்வம் மிக்க பட்டணம். அந்தப் பட்டணத்தில் இருந்து சில விலை மிகுந்த பொருள்களை ஹானிபல் கார்த்தேஜுக்கு அனுப்பினார். இது கார்த்தஜீனியருக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஆனால் ரோமானியருக்கு இது மிகுந்த கோபத்தை உண்டாக்கியது. அவர்கள் கார்த்தேஜுக்கு ஆள் அனுப்பினார்கள். ஹானிபல் அனுப்பிய விலை மிகுந்த பொருள்களை யெல்லாம் திருப்பிக் கொடுத்துவிடுமாறு கேட்டார்கள். ஆனால் கார்த்தஜீனியர்கள் அவைகளைத் திருப்பிக் கொடுக்க மறுத்துவிட்டார்கள். ஆகையால் ரோமாபுரித் தூதன் தன் மேல்ஆடையை இறுக்கிக் கொண்டு, "சமாதானம், சண்டை: இதில் நீங்கள் எதை விரும்புகிறீர்கள்?" என்று கேட்டான். கார்த்தஜீனியர்

கள் "சண்டை" என்றார்கள். இவ்விதமாகக் கடைசியில் ஹானிபலின் எண்ணம் ஈடேறியது.

இந்தச் சமயத்தில் ஹானிபல் ஸ்பெயின் தேசத்திலேயே இருந்தார். அங்கிருந்து நேராகப் பகைவர் தேசத்துக்குள் படையெடுத்துக் கொண்டு போக எண்ணினார். ரோமாபுரிப் பட்டணத்தையே பிடித்துக்கொள்ள வேண்டும் என்பது அவருடைய அவா. ஸ்பெயினிலிருந்து இத்தாலி தேசத்தை அடைவதற்கு ஐரோப்பாவிலேயே மிகவும் உயரமான ஆல்ப்ஸ் என்னும் மலைகளைக் கடக்கவேண்டும். வெயில் காலத்தில்கூட அந்த மலைகளின் உச்சியைப் பனிக்கட்டி மூடிக்கொண்டிருக்கும். ஆற்றுத் தண்ணீர் எல்லாம் பனிக் கட்டியாக உறைந்துவிடும். ஆல்ப்ஸ் மலைகளின்மேல் போவதற்கு அந்தக் காலத்தில் பாதை எதுவும் இல்லை. அந்த மலைகளின் சரிவுகள் செங்குத்தாக இருக்கும். ஏறினால் காலை வழுக்கிவிடும். கார்த்தஜீனியப் படையில் சுமார் நாற்பதாயிரம் வீரர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு உணவுப் பொருள்களைக் கொண்டுபோக நிறைய வண்டிகளும் இருந்தன. ஹானிபல் நிறைய யானைகளையும் கொண்டுபோனார். அந்த யானைகளைக் கொண்டு ரோமானியர்களைப் பயப்படுத்த வேண்டும் என்பது அவருடைய எண்ணம். ஹானிபலின் வீரர்களில் பலர் குளிர் தாங்கமுடியாமல் செத்துப்போனார்கள். இன்னும் பலர் மலையின்மேல் ஏறிச் செல்லும்பொழுது ஏற முடியாமலும் வழுக்கி விழுந்தும் மாண்டு போனார்கள். ஹானிபல் இத்தாலி தேசத்தை அடைந்தபொழுது அவர் அழைத்துப்போன வீரர்களில் பாதிப் பேர்தான் உயிரோடு இருந்தார்கள். ஆனால் அவர் ரோமானியர்களை எதிர்பாராத விதமாகத் திடீரென்று தாக்கினார். ஆல்ப்ஸ் மலைகளைத் தாண்டி வந்து ஒரு படை தங்களைத் தாக்கக்கூடுமென்று ரோமானியர்கள் கனவிலும் நினைக்கவில்லை. ஆகவே, ஹானிபலின் தாக்குதலைச் சமாளிப்பதற்கு அவர்கள் தயாராக இல்லை. கார்த்தஜீனிய வீரர்கள் ஹானிபலை மிகவும் புகழ்ந்தார்கள். அவர்கள் அவர்மீது முழு நம்பிக்கை வைத்திருந்தார்கள். அதனால் அவர்கள் எல்லாவிதக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு முன்னேறினார்கள். தங்களுடைய நண்பர்கள்

நூற்றுக் கணக்கில் செத்து விழுந்ததைக்கூட அவர்கள் பொருட்படுத்தவில்லை. ஹானிபல் தம்முடைய வீரர்கள் அடைந்த இன்னல்களிலெல்லாம் தாமும் பங்கு கொண்டார். எப்பொழுதும் தம்முடைய வீரர்களோடு பேசி அவர்களுக்குத் தைரியம் ஊட்டினர். இத்தகைய காரணங்களினாலேயே அவருடைய சேனைகள் அவரை மிகவும் விரும்பின.



ஹானிபல் இத்தாலிய தேசத்தின் சமவெளியில் இறங்கியதும், ரோமானியர்கள் ஆச்சரியப்பட்டுப் போனர்கள். சண்டை செய்வதற்கு அவர்கள் தயாராக இல்லை. ஆகையால், ரோமாபுரிப் பட்டணத்துக்குப் பக்கத்தில் போகும்வரை ஹானிபலை யாரும் தடுத்து நிறுத்தவில்லை. இருந்தாலும் ரோமாபுரியை அவரால் பிடித்துக்கொள்ள முடியவில்லை.

அந்தப் பட்டணத்தைச் சுற்றிப் பலமுள்ள பல மதில் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. அந்த மதில் சுவர்களைக் கடந்து செல்லவோ, உடைத்துக் கொண்டு போகவோ ஹானிபலால் முடியவில்லை. ஆகையால் அவர் ரோமாபுரியைத் தாண்டித் தெற்கு இத்தாலிக்குள் நுழைந்தார். அவரை எதிர்ப்பதற்காக ரோமானியர்கள் ஒன்றன்பின் ஒன்ருகப் பல சேனைகளை அனுப்பினுர்கள். ஆனுல் ஹானிபல் தம்முடைய தைரியத்தாலும் திறமையாலும் அவைகளையெல்லாம் முறியடித்தார். அவர் பல ஆண்டுக் காலம் இத்தாலி தேசத்திலேயே சேனையுடன் தங்கி இருந்தார். இருந்த போதிலும் ரோமானியர்களால் அவரை வெளியேற்ற முடியவில்லை. ஆனுல் ஹானிபலின் சேனை சிறிது சிறிதாகச் சிறுத்துக்கொண்டு வந்தது. அவருடைய சேனை வீரர்கள் சண்டையில் இறந்ததால் புதிய வீரர்கள் தேவைப்பட்டார்கள். ஆனுல் கார்த்தேஜிய மக்கள் புதிய வீரர்களை ஹானிபலுக்கு அனுப்பி வைக்கவில்லை. கடைசியில் ஹானிபல் தம்முடைய சகோதரரான ஹாஸ்ட்ருபலுக்கு ஒரு கடிதம் எழுதினுர். அதில் தம்முடைய நிலைமையை விளக்கினுர். தமக்குப் புதிய வீரர்கள் உடனடியாகத் தேவை என்றும் ஹாஸ்ட்ருபல்தான் உதவி செய்ய வேண்டும் என்றும் அக்கடிதத்தில் குறிப்பிட்டார். ஹாஸ்ட்ருபல் அப்போது ஸ்பெயின் தேசத்தில் இருந்தார். ஹானிபலின் கடிதத்தைக் கண்டதும் ஹாஸ்ட்ருபல் ஒரு சேனையைத் திரட்டினுர். ஹானிபலுக்கு உதவி செய்வதற்காக அவர் சேனையுடன் இத்தாலி தேசத்துக்குப் புறப்பட்டார். இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு ஹானிபல் பேருவகையடைந்தார். ஹாஸ்ட்ருபல் வருவார் வருவார் என்று அவர் காத்துக் கொண்டே யிருந்தார். ஆனுல் கடைசிவரை ஹாஸ்ட்ருபல் வரவேயில்லை. ஒருநாள் காலை ஹானிபல் தம்முடைய கூடாரத்தில் தூங்கி எழுந்தபோது ஒரு காட்சியைக் கண்டார். அவருடைய படுக்கைக்குப் பக்கத்தில் தரையின்மேல் ஒரு பொருள் இருந்தது. அது ஹாஸ்ட்ருபலின் தலையே ஆகும். ரோமானியர்கள் ஹாஸ்ட்ருபலைத் தோற்கடித்தார்கள். பிறகு அவரைப் பிடித்து அவருடைய தலையை வெட்டிவிட்டார்கள். வெட்டின தலையை ஒரு ரோமானிய வீரனிடம் கொடுத்து

ஹானிபலின் கூடாரத்தில் கொண்டுபோய்ப் போடச் செய்தார்கள்.

அப்பொழுதும் ஹானிபலை ரோமானியர்களால் வெற்றி பெற முடியவில்லை. கடைசியில் ஒரு ரோமானிய வாலிபர் ஒரு சூழ்ச்சி செய்தார். அவருடைய பெயர் ஸிபியோ என்பது. அவர் ஒரு சேனைத் தலைவர். அவர் ஹானிபலை இத்தாலிய தேசத்திலேயே இருக்கும்படி விட்டுவிட்டுக் கப்பலின் மூலம் ஒரு சேனையுடன் ஆப்பிரிக்காவை அடைந்தார். கார்த்தேஜ் பட்டணத்தைத் திடீர் என்று தாக்கினார். ஸிபியோ எண்ணியது போலக் கார்த்தேஜிய மக்கள் நடுங்கிப் போனார்கள். அவர்களுடைய தலைவர்கள் ஹானிபலுக்கு அவசர அவசரமாக ஓர் ஆளைத் தூது அனுப்பினார்கள். கார்த்தேஜை ஆபத்திலிருந்து காப்பாற்றக் கூடியவர் ஹானிபல் ஒருவரே என்று அவர்கள் நினைத்தார்கள். ஹானிபல் மிகவும் துயரப்பட்டார். இருந்தாலும் கார்த்தேஜ் மக்கள் கட்டளைக்குச் சம்மதித்தார். ஆகையால் ரோமாபுரியைக் கைப்பற்றாமலேயே அவர் இத்தாலியிலிருந்து புறப்பட்டார். இவ்விதமாக ஹானிபலை இத்தாலி தேசத்திலிருந்து வெளியேற்றுவதற்கு ஸிபியோ செய்த தந்திரம் பலனளித்தது. ஹானிபல் கார்த்தேஜ் பட்டணத்தை அடைந்தார். ஸிபியோவின் சேனை தம்முடைய சேனையைவிட மிகவும் பெரியதாக இருந்ததைக் கண்டார். அவருடைய இருதயம் வெடித்துவிடும் போல் இருந்தது. தம்முடைய வாழ்வின் நோக்கம் நிறைவேறாமல் போய்விட்டதே என்று வருந்தினார். தம்முடைய தகப்பனாருக்குச் செய்து கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லையே என்று மனம் நொந்தார். ஆகையால் அவர் ஸிபியோவால் தோற்கடிக்கப் பட்டார். ஸிபியோ கார்த்தேஜைக் கைப்பற்றிக்கொண்டார். கார்த்தஜீனியர்கள் ரோமாபுரியுடன் சமாதானம் செய்து கொண்டார்கள். கார்த்தஜீனியர்கள் தம்மிடம் இருந்த சண்டைக் கப்பல்களையெல்லாம் ரோமாபுரிக்குக் கொடுக்க வேண்டி ஏற்பட்டது. அவர்கள் தங்களுடைய சுதந்தரத்தையும் இழந்தார்கள். இவற்றோடு ரோமாபுரிக்குக் கார்த்தேஜ் நகரம் பத்தாயிரம் டேலன்ட்களையும் அபராதமாகக் கட்டியது.

பத்தாயிரம் டேலன்ட் என்பது முப்பது லட்சம் பவுனுக்குச் சமானமாகும். கார்த்தஜீனியர்கள் திறமையான வியாபாரிகள். ஆகையால் அவர்கள் இவ்வளவு பெரிய தொகையை ரோமாபுரிக்கு அபராதமாகக் கட்டினாலும் கூட, அவர்கள் நகரம் செல்வ வளம் உள்ளதாகவே இருந்தது. மறுபடியும் அதனுடைய செல்வாக்கு உயரத் தொடங்கியது. இதைக் கண்டு ரோமானியர்கள் அச்சமுற்றார்கள். கார்த்தேஜ் பட்டணத்தை அடியோடு அழித்துவிட வேண்டுமென்று அவர்கள் கட்டளை போட்டார்கள். ரோமானிய வீரர்கள் கார்த்தேஜ் பட்டணத்தை இருந்த இடம் தெரியாமல் அழித்துவிட்டார்கள். அந்தப் பட்டணம் இருந்த நிலத்தை ஏர் பூட்டி உழுதார்கள். அப்படி உழுத நிலத்தில் நிறைய உப்பைக் கொண்டு போய்த் தூவிட்டார்கள். இதன் மூலம் அந்த நிலத்தில் எதுவுமே வளராதபடி ரோமானியர்கள் செய்து விட்டார்கள்.

ஹானிபல் கார்த்தேஜ் பட்டணத்திலிருந்து தப்பி ஓடி விட்டார். ஆனால் அவர் அதற்குப் பிறகு எங்கும் நிலையாகத் தங்கி வாழவில்லை. ரோமானியருடைய கோபத்திற்குப் பயந்து எந்த நாடும் அவருக்குத் தஞ்சம் அளிக்கவில்லை. அவர் ஊர் ஊராக ஓடிக்கொண்டே இருந்தார். அப்படிப் போன இடத்திலும் கூட ரோமானியர்களுக்கு எதிராக ஏதாவது கலகத்தை விளைவித்துக் கொண்டேயிருந்தார். அவருக்கு மூப்பு மேலிட்டது. அப்போது அவர் தங்கி இருந்த நாட்டின் அரசன் அவரை ரோமானியர்களுக்குக் காட்டிக் கொடுப்பதாக இருந்தான். இதை ஹானிபல் தெரிந்து கொண்டார். ரோமானியர் கையில் அகப்படுவதைவிடத் தற்கொலை செய்து கொண்டு மாண்டுவிடுவதே மேல் என்று நினைத்தார். ஆகையால் விஷத்தைச் சாப்பிட்டு மரணம் அடைந்தார். இவ்விதமாகச் சிறந்த வீரரான ஹானிபலின் வாழ்க்கை ஒரு முடிவுக்கு வந்தது.

ரோமாபுரியின் பலம் உயர்ந்துகொண்டு போனதை யாராலும் தடுக்க முடியவில்லை. ஹானிபலின் தோல்விக்குப் பிறகு ரோமாபுரி அரசு வளர்ந்துகொண்டே போனது. பல தேசங்கள் அதனுடைய ஆட்சியின் கீழ் வந்தன. ரோமப் பேரரசு உலக வல்லரசுகளில் ஒன்றாக விளங்கியது.

## 14. ஜூலியஸ் ஸீஸர் (கி. மு. 100-44)

டார்க்வினை விரட்டியடித்த பிறகு, ரோம் குடியாட்சியின் பலம் ஒவ்வொரு நாளும் பெருகிக் கொண்டே போனது. இத்தாலியில் வசித்துவந்த எல்லாக் குடி மக்களையும் அது வென்று விட்டது; இட்ரஸ்கன்களும் அதற்கு அடங்கி வாழ்ந்தார்கள். இறுதியில் இத்தாலி முழுவதிலும் ரோமாபுரி ஆட்சி நடைபெற்றது. அப்பொழுதுதான் ரோமாபுரிக்கும் கார்த்தேஜ் என்ற பட்டணத்துக்கும் போட்டி ஏற்பட்டது; அதன் விளைவாகச் சண்டையும் மூண்டது. கார்த்தேஜ் வீரரான ஹானிபலை ரோமாபுரி வீரரான ஸிபியோ தோற்கடித்தார். அதன் பின் ரோமாபுரியை எதிர்க்க நெஞ்சுரம் உள்ளவர்கள் ஒருவரும் இல்லை. ஆகையால் ஒரு காலத்தில் வட ஆப்பிரிக்காவிலும், ஸ்பெயின் தேசத்திலும் கார்த்தேஜுக்குச் சொந்தமாக இருந்த இடங்களை எல்லாம் ரோமாபுரி இப்போது ஆட்சி செய்தது. கிரீஸ் தேசமும்கூட ரோமபுரியின் ஆட்சியில் சேர்ந்துவிட்டது.

இப்படியாக ஒரு காலத்தில் சந்தைப்பட்டணமாக இருந்த ரோமாபுரி, இப்போது ஒரு பெரிய நகரமாக மாறிவிட்டது. அதன் அரசியல் தலைவர்கள் தொலை தூரத்திலிருந்த நாடுகளையும் மக்களையும்கூட ஆண்டு வந்தார்கள். இது ரோமானியர்களுக்கு நன்மையைத் தரவில்லை. அவர்கள் பெரிய பணக்காரர்கள் ஆய்விட்டார்கள். ரோமின் "கான்ஸல்"கள் இன்ப வாழ்க்கையிலும், கேளிக்கைகளிலும் பொழுதைப் போக்கினர்கள்; இதனல் சோம்பேறித்தனமே வளர்ந்தது. வேலை செய்வதற்கு நிறைய அடிமைகளையோ பணியாட்களையோ வைத்துக் கொண்டார்கள். ரோமாபுரியில் வாழ்ந்த ஏழை மக்கள் அதிருப்தி அடைந்தார்கள்.

இத்தருணத்தில்தான் ஜூலியஸ் ஸீஸர் பிறந்தார். அவர் பிறந்த குடும்பம் பணக்காரக் குடும்பம். மிகவும் செல்லமாக அவர் வளர்க்கப்பட்டார். அவருக்குச் சிறு வயதில் இருந்தே தாம் ஒரு பெரிய தலைவர் ஆக வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆனல் ஸீஸருக்கும் மற்றப் பணக்கார

வாலிபர்களுக்கும் நிறைய வேறுபாடு இருந்தது. ஸீஸருக்குச் சிறிதுகூடத் தன்னலம் கிடையாது. ரோமாபுரியில் வாழ்ந்து வந்த ஏழை மக்களின் மீது ஸீஸர் இரக்கம் காட்டினர். அவர்கள் நிலைமைக்கு வருந்தினர்; அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும், அவர்களுக்கு நீதி வழங்கவேண்டும் என்று எண்ணினர். ஒரு நாள் ரோமாபுரி முழுவதற்கும் தலைவன் ஆகவேண்டும், எல்லோருக்கும் நீதி கிடைக்கும்படி செய்ய வேண்டும், ஒவ்வொருவரையும், ஏழைகளையும் கூட, இன்பமாக வாழச் செய்யவேண்டும் என்று முடிவு செய்து கொண்டார்.

ஸீஸர் ஒரு படை வீரர் ஆனர். விரைவில் சேனையில் நல்ல பெயர் பெற்றார். அவருடைய துணிச்சலே அதற்குக் காரணம். அவருடைய தைரியத்தை எல்லோரும் புகழ்ந்தார்கள். அவருடைய பெயர் மக்களுடைய இதயத்தில் நிலை பெற்றது. ஒருமுறை ஒரு வீரனுடைய உயிரைக் காக்க ஸீஸர் தம்முடைய உயிரையே பணயமாக வைத்து ஆபத்தில் குதித்தார்; இன்னொரு முறை ஒரு சண்டையில் ரோமானிய வீரர்கள் எல்லோரும் ஓடிப்போக இருந்தார்கள். அச்சமயம் ஸீஸர் சேனைக்கு முன்னல் ஆபத்துள்ள இடத்துக்குப் போய் நின்று கொண்டு எதிரிகளைத் தாக்கினர். அதனல் ஸீஸருக்கு என்ன நேருமோ என்ற கவலையில் மற்ற வீரர்கள் தம்முடைய பயத்தையும் மறந்து சண்டையிட்டார்கள். ஒரு வேளை ஸீஸர் இளவயதில் ஹொரேஷியஸின் கதையைக் கேட்டிருக்கலாம். அவரைப்போலவே தாமும் வீரராக இருக்க விரும்பினர். ஸீஸர் மிகவும் பெரிய பணக்காரர். ஆனல் அவர் தம்முடைய செல்வத்தை எல்லாம் தமக்காகவே செலவழிக்கவில்லை. தம்முடைய பணத்தைக் கொடுத்து ரோமாபுரியில் பெரிய பெரிய அழகான கட்டடங்களைக் கட்டினர். அந்தக் கட்டடங்களில் பொதுமக்களுக்காக நாடகம் முதலியவைகளை நடத்தினர். இதனல் பொதுமக்களுக்கிடையே ஸீஸருக்கு செல்வாக்கு ஏற்பட்டது. ரோமில் வசித்த சில பிரபுக்கள் ஸீஸரைக் கண்டு பொருமை கொண்டார்கள்; இருந்தாலும் மக்கள் ஸீஸருக்கு உயர்ந்த பதவியைக் கொடுத்தார்கள். இவருக்குக் கிடைத்த முதல் உயர் பதவி

ஸ்பெயின் தேச கவர்னர் பதவி. அங்கு அவர் ஒரு சேனை யுடன் சென்று பல சண்டைகளில் வெற்றி பெற்றார். இதன் மூலம் தாம் திறமை வாய்ந்த சேனைத் தலைவர் என்பதை விளக்கினார். அவருடைய வீரர்கள் எல்லோரும் அவர் மீது முழு நம்பிக்கை வைத்திருந்தார்கள். அதனால் அவர் எந்த இடத்துக்குப் போகச் சொன்னாலும் அவர்கள் விருப்பு டன் போனார்கள். ஸீஸர் ஸ்பெயின் தேசத்திலிருந்து திரும்பியவுடன் ரோமாபுரியை ஆண்ட தலைவர்கள் கூட்டத் தில் அவரும் ஒருவர் ஆனார்.

அந்தச் சமயம் வடக்குத் திசையில் இருந்து ரோமாபுரி ராஜ்யத்துக்கு ஒரு பேராபத்து வர இருந்தது. ரோமாபுரிக்கு வடக்கே கால் என்று ஒரு நாடு இருந்தது. அதற்கு இப் போது பிரான்சு என்று பெயர். கால் தேச மக்கள் கொடூர குணம் உடையர்கள், ரோமானியர்கள் அவர்களையும் அடக் கித் தங்களுக்குக் கீழ் கொண்டு வர விரும்பினார்கள் ; ரோமா புரியின் ஆட்சியில் கால் மக்களும் அமைதியாக வாழ்க்கை நடத்துவார்கள் என்று ரோமானியர்கள் நினைத்தார்கள். ஆகையால் ஜூலியஸ் ஸீஸர் கால் தேசத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார். ஸீஸர் ஒரு சேனையுடன் கால் தேசத்தை வெல்வதற்காகப் புறப்பட்டார். ஸீஸர் பத்தாண்டுக் காலம் கால் தேசத்தில் தங்கி இருந்தார். கால் தேசம் முழுவதையும் ரோமின் ஆட்சிக்குக் கொண்டு வந்தார். ஒரு முறை வட மேற்கு முனையில் அவர் சண்டை செய்துகொண்டு இருந்த போது சில அந்நிய நாட்டாரைக் கைது செய்தார் ; அவர்கள் எல்லோரும் எந்த நாட்டிலிருந்து வந்தவர்கள் என்று கேட் டார். அவர்களுக்குப் பிரிட்டன்கள் என்று பெயர் என்றும், அவர்கள் கடலுக்கு அப்பால் உள்ள ஒரு தீவில் இருந்து வந்த வர்கள் என்றும் ஸீஸர் கேள்விப் பட்டார். கால் தேசத்தா ருக்கு அவர்கள் உதவி செய்ததற்காக அவர்களைத் தண்டிக்க வேண்டும் என்று ஸீஸர் முடிவு செய்தார். ஆகையால் அவர் சில கப்பல்களுடன் புறப்பட்டார் ; சேனைகளுடன் கடலைத் தாண்டிப் பிரிட்டனை அடைந்தார். பிரிட்டனின் தெற்குப் பகுதியில் தெம்ஸ் நதிக் கரையில் தற்போது லண் டன் பட்டணம் இருக்கும் இடம் வரை சென்றார். வழியில்

இருந்த கிராமங்களை எல்லாம் கொளுத்தினர். இதன் மூலம் பிரிட்டானியர்களுக்குப் பாடம் கற்பித்துவிட்டதாகப் பெருமிதம் அடைந்தார்; பிரிட்டனை வென்று ஆட்சி செய்ய வேண்டும் என்பது அவருடைய எண்ணம் இல்லை. தாம் மேற்கொண்ட பணியை முற்றிலும் செய்து முடிக்க மறுபடியும் அவர் கால் தேசத்துக்கே திரும்ப வேண்டி இருந்தது. கால் தேசத்தில் அவர் மக்களை நீதியோடும் நியாயத்தோடும் ஆட்சி செய்தார்; இதனால் அங்கு வாழ்ந்த மக்கள் எல்லோரும் ரோமானியர் ஆட்சியில் தாம் இருப்பதற்காகப் பெருமைப் பட்டுக் கொண்டார்கள்; மிகுந்த சந்தோஷம் அடைந்தார்கள். கால் தேசம் முழுவதையும் வென்று அமைதியை உண்டாக்கிய பிறகு ஸீஸர் ரோமாபுரிக்குத் திரும்பிப் போக ஆயத்தம் ஆனர்.

ஆனல் ஸீஸர் ரோமாபுரிக்குத் திரும்பி வருவதை ரோமாபுரிப் பிரபுக்கள் விரும்பவில்லை. அவர்கள் எல்லாரும் ஸீஸரைக் கண்டு பயந்தார்கள்; அவருடைய வெற்றிகளைக் கண்டு பொருமை கொண்டார்கள். அந்தக் காலத்தில் ரோமாபுரிக்கு முக்கியத் தலைவனாக இருந்தவன் பாம்பே என்பவன். அவனும் ஒரு பெரிய சேனைத் தலைவன். ஸீஸருக்கு எதிரியாக மாறிவிட்டான்; ஸீஸரை ரோமுக்குள் வராதவாறு தடுத்து நிறுத்தும்படி ரோமாபுரித் தலைவர்களை அவன் தூண்டினன். ஸீஸர் ரோமாபுரியை நோக்கி வந்து கொண்டே இருந்தார். ரூபிகன் என்ற நதியை அடைந்தார். அந்த நதிதான் ரோமாபுரியின் எல்லை. ஸீஸர் அங்கேயே சிறிது காலம் சேனையுடன் தங்கி இருந்தார்; ரோமாபுரித் தலைவர்கள் மனம் மாறித் தமக்குத் தகுந்த முறையில் வரவேற்பு அளிப்பார்கள் என்று காத்துக் கொண்டு இருந்தார். ஆனல் அவர்களுடைய மனம் மாறுவதாகத் தெரியவில்லை. ஆகவே, என்ன செய்வது என்று ஸீஸர் யோசனை செய்தார். அவர் ரூபிகன் நதியைத் தாண்டி ரோமுக்குள் புகுந்தால், ரோமாபுரித் தலைவர்களுடைய கட்டளையை அவர் மீறிய மாதிரி ஆகும்; அப்படி என்றால் பாம்பேயைப் படையுடன் எதிர்த்துப் போராட வேண்டி இருக்கும். அப்படி இல்லாமல் ரோமாபுரிக்கு வெளியிலேயே அவர் தங்கி விட்டால், அவர்

எந்தக் காலத்திலும் ரோமாபுரிக்குத் தலைவர் ஆக முடியாது. நெடுநேரம் ஸீஸர் யோசித்தார். கடைசியில் ரூபிகன் நதியைக் கடந்து முன்னேறும்படி தம்முடைய சேனைகளுக்குக் கட்டளையிட்டார்.

ஸீஸர் ரோமாபுரித் தலைவர்களுடைய கட்டளையை மீறி நடப்பார் என்று பாம்ப்பே சிறிது கூட நினைக்க வில்லை. ஸீஸர் ரூபிகன் நதியைத் தாண்டிவிட்டார் என்று கேள்விப் பட்டதும் அவன் பயந்து கொண்டு ஓட்டம் பிடித்தான். ஸீஸர் விடாமல் துரத்தினர். பாம்ப்பே கடலைத் தாண்டி கிரீஸ் தேசத்துக்கு ஓடினன்; ஸீஸர் அங்கும் விடாமல் துரத்திக் கொண்டு போனர். பார்ஸேலியா என்ற இடத்தில் இருவருக்கும் ஒரு பெரிய சண்டை மூண்டது. அதில் ஸீஸரே வெற்றி பெற்ருர். பாம்ப்பே எகிப்து தேசத்துக்குத் தப்பி ஓடினன்; முடிவில் அங்கேயே அவன் கொலை செய்யப் பட்டான்.

ஸீஸர் ரோமாபுரிக்குத் திரும்பினர்; ரோமாபுரி மக்கள் எல்லோரும் உற்சாகத்துடன் கோலாகலமாக அவரை எதிர் கொண்டு வரவேற்ருர்கள். ஸீஸர் உயிரோடு இருந்தவரை அவரே ரோமாபுரியின் தலைவராக இருக்க ஒப்புக்கொண்டார்கள். ஸீஸர் தம்முடைய எதிரிகள் எல்லோரையும் மன்னித்து விட்டார். அவர்களைத் தண்டிக்கவில்லை; அதற்கு மாருக அவர்களிடம் அன்பு காட்டினர். ரோமாபுரியை இன்பம் நிறைந்த பட்டணமாக மாற்றுவதற்குத் தம்மால் ஆன எல்லாக் காரியங்களையும் செய்தார். சதுப்பு நிலங்களில் கொசுக்கள் நிறைய இருந்தன; அதனுல் அநேக மக்கள் காய்ச்சல் கண்டு மாண்டு போனர்கள். ஸீஸர் அந்தச் சதுப்பு நிலங்களை எல்லாம் வறண்ட இடங்களாக மாற்றினர். வரி வாங்கிய முறைகளில் பல விதமான சீர்திருத்தங்களைச் செய்தார். உழைத்து வேலை செய்யும்படியும் நிறைய தானியங்களை உற்பத்தி செய்யும்படியும் மக்களை உற்சாகப் படுத்தினர். இதனுல் ரோமாபுரியில் பட்டினியே தலைகாட்டவில்லை. மக்கள் எல்லோரும் ஸீஸரை "நாட்டின் தந்தை" என்று செல்லப் பெயர் வைத்து அழைத்தார்கள். ஸீஸர் பகட்டான உடைகளைத் தரித்துக் கொள்ள மக்கள் சம்மதித்தார்கள்.

அவர்கள் ஸீஸருக்குச் சிலை செய்து அதை ரோமாபுரியில் நாட்டினார்கள். நாணயங்களில் அவருடைய தலையைப் பொறிக்கச் செய்தார்கள்; தங்களுடைய மாதத்தில் ஒன்றின் பெயரைக் கூட அவரை மதிக்கும் முறையில் ஜூலை என்று மாற்றிக் கொண்டார்கள்.

ஸீஸர் மக்களுக்கு உயிராக விளங்கினார். அதனால் பலர் அவரை ரோமாபுரிக்குச் சக்கரவர்த்தியாகவே ஆக்கிவிட



நினைத்தார்கள். ஆனால் இது இரண்டுவிதக் கட்சிகளை உண்டாக்கிவிட்டது. டார்க்வின் மன்னனுடைய தீய செய்கைகளைச் சிலர் ஞாபகப் படுத்திக் கொண்டார்கள். இனிமேல் ரோமாபுரிக்கு அரசனுடைய ஆட்சி கூடாது என்று அப்போது ரோமாபுரி மக்கள் செய்துகொண்ட முடிவை நினைத்துப் பார்த்தார்கள். ஸீஸரை ரோமாபுரி மக்கள் அரசர் ஆகும்படி வேண்டினார்கள்; ஆனால் அவர் அதற்கு மறுத்து விட்டார்; ஆனால் எப்போதாவது ஒரு தடவை "அரசன் ஆகிறேன்," என்று ஸீஸர் சொல்லிவிட்டால் என்ன ஆவது என்று அவருடைய விரோதிகள் அச்சப்பட்டார்கள். ஆகையால் அவர்கள் ஸீஸருக்கு விரோதமாகச் சூழ்ச்சி செய்தார்கள். அந்தச் சூழ்ச்சிக்காரர்களில் புருட்டஸ் போன்ற சில நல்ல மனிதர்களும் இருந்தார்கள். அவர்கள் ஸீஸருடைய

ஆதிக்கம் ரோமாபுரிக் குடியாட்சிக்குத் தீமை உண்டாகும் என்று உண்மையிலேயே நம்பினர்கள். ஆனல் மற்ற விரோதிகள் அவ்வளவு நல்லவர்கள் இல்லை; ஸீஸர்மீது பொருமை கொண்டோ, அல்லது அவரிடம் தோல்வி அடைந்ததற்காகவோ ஸீஸரை வெறுத்தவர்கள்.

எதிரிகள் செய்த சூழ்ச்சி பற்றி ஸீஸருக்கு எச்சரிக்கை செய்யப்பட்டது. சூழ்ச்சிக்காரர்கள் அவரைக் கொல்ல நினைத்த நாள் அன்று, ஸீஸர் வீட்டைவிட்டு வெளியே போகாமல் இருக்க வேண்டும் என்று சிலர் கேட்டுக் கொண்டார்கள். ஆனல் மக்கள் தாம் ஒரு கோழை என்று நினைப்பதை ஸீஸர் சிறிதுகூட விரும்பவில்லை. ஆகையால் அவர் தைரியமாகச் செனெட் கட்டடத்துக்குப் போனர். அங்கேதான் ரோமாபுரியின் விவகாரங்கள் சர்ச்சை செய்யப்படும். செனெட் கட்டடத்தின் படிகளில் ஸீஸரின் விரோதிகள் ஒன்று சேர்ந்தார்கள். ஸீஸரிடம் ஒரு மனுவைக் கொடுப்பது போல் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். பிறகு தம்முடைய வாள்களை உருவி அவரைக் குத்திக் கொலை செய்தார்கள். இவ்விதமாக ஸீஸர் அநியாய மரணம் அடைந்தார். "ரோமாபுரியிலேயே சிறந்தவர்" என்று ஸீஸர் கருதப்பட்டார். அவர் ஒரு சிறந்த வீரர் மட்டும் அன்று, நேர்மையான தலைவரும் கூட; சிறந்த சட்ட திட்டங்களை அவர் ரோமாபுரியில் ஏற்படுத்தினர். அவர் ஒரு பெரிய எழுத்தாளரும் ஆவார். அவர் தாம் செய்த சண்டைகளைப் பற்றிப் பல புத்தகங்களை எழுதினர்; அந்தப் புத்தகங்களை இன்றைக்கும் மக்கள் படிக்கிறர்கள். அவர் கொல்லப்பட்டதைப் பற்றி முதலில் எல்லோரும் சந்தோஷப் பட்டார்கள்; ஆனல் பிறகு ரோமாபுரியில் குழப்பம் உண்டாயிற்று. ஸீஸர் கொலை செய்யப்பட்டது அறிவீனமான செயல் என்று அப்பொழுது எல்லோரும் உணர்ந்தார்கள். ஜூலியஸ் ஸீஸரை ரோமாபுரித் தலைவர்களிலேயே சிறந்த தலைவராக மக்கள் மதித்தார்கள்.

## 15. போடிசீயா (கி. பி. 61)

ஜூலியஸ் ஸீஸர் பிரிட்டனுக்குப் போய்த் திரும்பிய பின்னர் சுமார் நூறு ஆண்டுகள் வரை பிரிட்டனைப் பற்றி ரோமானியர் கவலைப் படவே இல்லை. ஆனால் தாங்கள் ஒரு முறை சுற்றிப் பார்த்த அந்தத் தீவை அவர்கள் மறந்து விடவும் இல்லை. பிரிட்டனுக்குப் போய்த் திரும்பிய வீரர்கள் அதைப் பற்றிக் கதை கதையாகச் சொன்னார்கள் ; பிரிட்டனில் கண்ட செழிப்பான சமவெளிகள், புல்தரைகள், காடுகள் முதலியவற்றைப் பற்றிப் புகழ்ந்தார்கள். விவசாயத்துக்கு அது மிகவும் நல்ல இடம் என்று கூறினார்கள். உடனே ஒரு சேனையை அனுப்பி அந்தத் தீவை வெல்வது என்றும், அதை ரோம் சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாக ஆக்கிக் கொள்வது என்றும் ரோமானியர்கள் நினைத்தார்கள். ஆனால் பல ஆண்டுகள் வரை ரோம் சாம்ராச்சியத்தில் குழப்பங்கள் ஏற்பட்டுக் கொண்டு இருந்தன. அடிக்கடிச் சண்டைகள் உண்டாயின ; ஆனால் கடைசியில் சண்டை எல்லாம் ஓய்ந்து அமைதி உண்டாயிற்று. ஒரு புதிய பலம் வாய்ந்த சக்கரவர்த்தி ரோமாபுரி அரியாசனத்தில் அமர்ந்தார் ; அவர் பிரிட்டனை வெல்ல வேண்டும் என்று முடிவு செய்தார்.

அவர் கால் தேசத்தில் இருந்து கடலைத் தாண்டிப் பிரிட்டனுக்குள் நுழைய ஒரு சேனையை அனுப்பினார். அப்படிச் சென்ற ரோமானிய சேனை பிரிட்டன் தீவை அடைந்தது ; விரைவில் அந்தத் தீவை அடக்கி ஆளத் தொடங்கியது. பிரிட்டன் மக்கள் தைரியசாலிகள். ஆகையால், அவர்கள் அந்நியர்களாகிய ரோமானியர்களை வீரத்தோடு எதிர்த்தார்கள். பிரிட்டன் வீரர்களில் கராட்கடஸ் என்பவர் சிறந்தவராக இருந்தார் ; அவர் ரோமானியர்களை எதிர்த்து வீரத்துடன் சண்டை செய்தார். ஆனால் ரோமானியரிடம் போர் முறை அறிந்த சிறந்த சேனை இருந்தது. ஆகையால், கடைசியில் ரோமானியர் கராட்கடஸைப் பிடித்து விட்டார்கள் ; அவரை விலங்கு பூட்டி ரோமாபுரிக்கு அனுப்பினார்கள். இவ்விதமாகப் பிரிட்டன் ரோமாபுரி சாம்ராச்சியத்தின் ஒரு மாகாணமாக ஆய்விட்டது.

ரோமானியர்கள் எங்கே போனாலும் பெரிய பெரிய சாலைகளைப் போடுவது வழக்கம். அந்தப் பெரிய சாலைகளின் வழியாக ரோமானிய சேனைகள் வரிசை வரிசையாகப் போகும்; அங்கங்கே நடக்கும் குழப்பங்களை அடக்கி மக்களைப் பணிய வைக்கும். இத்தகைய சாலைகள் ஓரிடத்தில் இருந்து மற்றோரிடத்துக்கு நேர் நேராகச் சென்றன. அவற்றிற்குக் கீழே பெரிய பெரிய கற்பாறைகள் அஸ்திவாரமாகப் போடப்பட்டன. இதனால் அந்தப் பாதைகள் மிகவும் பலம் வாய்ந்தவையாக இருந்தன. அவை வெகு நேர்த்தியாகக் கட்டப்பட்டவையாதலால், அவற்றுள் பல இன்றைக்கும் பயன் படுகின்றன. ரோமானியர்கள் சாலைகள் போடுவதோடு நின்று விடவில்லை; அந்தச் சாலைகளின் ஓரங்களில் இருந்த மரம், செடி, புதர் முதலியவைகளையும் சிறிது தொலைவு வரை அழித்து விட்டார்கள். இதன் மூலம் பாதை ஓரங்களில் பிரிட்டன்கள் மறைந்து இருந்து ரோமானிய வீரர்களைத் தாக்காதபடி செய்தனர். மேலும் சாலைகளை நில மட்டத்திலிருந்து சிறிது உயர்த்தியே அமைத்தார்கள். இதன் மூலம் ரோமானிய வீரர்கள் பாதைகளில் நடக்கும்போது, எங்காவது பிரிட்டன்கள் ஒளிந்து கொண்டு சதி செய்கிறார்களோ என்று நான்கு பக்கமும் நன்றாகப் பார்க்க முடிந்தது.

பிரிட்டனில் ரோமானியர்கள் வலுவான கோட்டைகளையும் கட்டினார்கள். அவைகளைச் சுற்றி உறுதியான மதில் சுவர்களை எழுப்பினார்கள். இதன் மூலம் பிரிட்டன் மக்களுடைய தாக்குதலுக்குச் சிக்காமல் ரோமானிய வீரர்கள் இன்பமாக வாழ முடிந்தது. அத்தகைய கோட்டைகளைத் தகுந்த இடங்களிலேயே கட்டினார்கள். சாலைகள் ஓர் ஆற்றைத் தாண்டிச் செல்லும் இடம், அல்லது பாலங்கள் உள்ள இடம் ஆகிய இடங்களிலேயே கோட்டைகளைக் கட்டிக் கொண்டார்கள். லண்டன் பட்டணம் இப்படி ரோமானியர்களால் கட்டப்பட்ட ஒரு கோட்டையே ஆகும். ரோமானியர்கள் முதலில் அதைக் கட்டியபோது, அது ஒரு சிறிய ஊராக இருந்தது; ஆனால், அது வளர்ந்து வளர்ந்து இப்போது இங்கிலாந்துக்கே தலை நகராக இருக்கிறது. இங்கிலாந்து தேசத்தில் செஸ்டர் என்று முடிகிற ஊர்கள், பட்டணங்கள் எல்லாம்

மிகவும் பழமையானவை; அவற்றை முதலில் கட்டியவர்கள் ரோமானியர்களே. மான்செஸ்டர், வின்செஸ்டர் முதலிய பட்டணங்களும் அப்படிப் பட்டவையே. ரோமானியர்கள் பேசிய இலத்தீன் மொழியில் செஸ்டர் என்றால் கோட்டை என்று பொருள். ஆகவே, செஸ்டர் என்று முடிகிற இடங்கள் எல்லாம் ஒரு காலத்தில் ரோமானியர்களுடைய கோட்டைகளாக இருந்த இடங்களே ஆகும்.

சில ரோமானிய வீரர்கள் கர்வமுடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் கொடிய முறையில் நடந்து கொண்டார்கள்; தாங்கள் வென்ற பிரிட்டன் மக்களை இரக்கமின்றி நடத்தினார்கள்; அவர்களுக்குப் பல துன்பங்களைக் கொடுத்தார்கள். இங்கிலாந்தின் தென் கிழக்குப் பகுதியில் ஐசீனி என்ற ஒரு சாதியார் வாழ்ந்து வந்தார்கள். அந்தச் சாதியாரின் தலைவன் இறக்கும்போது ரோமானியர்களிடம் ஓர் உறுதி மொழி வாங்கிக் கொண்டான். தனக்குப் பிறகு தன் மகளான போடிசீயா தன்னுடைய சாதியாருக்குத் தலைவியாக இருக்க அனுமதி கொடுக்க வேண்டும் என்பதே அந்த உறுதிமொழி. காரணம் அவனுக்கு போடிசீயா என்ற மகளைத் தவிர வேறு மகன் இல்லை. ரோமானியர் அதற்கு ஒப்புக்கொண்டார்கள். ஐசீனி சாதியாருக்குப் போடிசீயாவைத் தலைவியாக்கினார்கள். ஆனால் அவளிடம் வெகு இழிவாக நடந்து கொண்டார்கள். போடிசீயா ஒரு பெண் தானே, அவள் நம்மை என்ன செய்து விட முடியும் என்று ரோமானியர்கள் எண்ணினார்கள். ஒரு முறை ரோமானியர்கள் சொன்னபடி போடிசீயா நடக்கவில்லை. ஆகையால், அவள் ஓர் இராணி என்பதையும் கருதாமல் ரோமானியர்கள் அவளை இரும்புக் கம்பிகளால் அடித்தார்கள். அவளுடைய இரண்டு பெண்களையும் தூக்கிக் கொண்டு போய்விட்டார்கள்.

போடிசீயா ஒரு மானம் உள்ள மங்கை. ரோமானிய வீரர்கள் செய்ததை அவள் கடைசி வரை மறக்கவே இல்லை. எப்பொழுதாவது தகுந்த வேளைவரும், அப்போது ரோமானியர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும், அவர்களைச் சரியானபடி தண்டிக்க வேண்டும் என்று காத்துக் கொண்டு இருந்தாள். அந்தச் சமயம் பிரிட்டனில் ரோமாபுரி கவர்ன

ராக இருந்தவன் ஸ்வீடோனியஸ் என்பவன். அவன் மேற்கே இருந்த காட்டுப் பிரதேசங்களை எல்லாம் வெல்ல வேண்டும் என்று ஆசைப்பட்டான். அந்தப் பகுதிக்கு இக் காலத்தில் வேல்ஸ் என்று பெயர். ஸ்வீடோனியஸ் தன்னுடைய சேனை யோடு மேற்கு நோக்கிப் புறப்பட்டு விட்டான். தெற்கில் அமைதியைப் பார்த்துக் கொள்ள சில வீரர்களையே விட்டு விட்டுப் போனான். இதுதான் ஏற்ற சமயம் என்று போடிசீயா நினைத்தாள். அவள் ஐசீனி சாதியாரை எல்லாம் ஒன்ருகச் சேர்த்தாள். அவர்களைக் கொண்டு கலகத்தை ஆரம்பித் தாள் ; உடனே ரோமானியர்களை வெறுத்த மற்றச் சாதியார் களும் போடிசீயாவுடன் சேர்ந்து கொண்டார்கள்.

போடிசீயா வெகு விரைவிலேயே ஒரு சேனைக்குத் தலைவி ஆய்விட்டாள். என்ன நடக்கிறது என்று ரோமா னியருக்குத் தெரியுமுன், அவள் கால்செஸ்டர் என்ற இடத்தில் இருந்த ரோமானியர் மீது பாய்ந்தாள். அவர்களில் பல பேரைக் கொன்றுவிட்டு அவர்களுடைய பட்டணத்தையும் நெருப்பு வைத்துக் கொளுத்தினுள். ரோமானியர்களுடைய தொகை மிகவும் குறைவாக இருந்தது ; அதனுல் அவர்களால் அவளைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. போடிசீயா தன் னுடைய சேனைகளைத் தெற்கு இங்கிலாந்தின் மூலம் நடத்திக் கொண்டே போனுள் ; தன்னுடைய சேனைகளுக்கு முன்னுல் அவள் ஒரு பெரிய இரும்புத் தேரைச் செலுத்திக் கொண்டு போனுள். தேர்க் குதிரைகளை அவளே ஓட்டினுள். இப்படி அவள் லண்டன் பட்டணத்தை அடைந்தாள் ; அந்தப் பட்டணத்தையும் அவளுடைய சேனை நெருப்பிட்டுக் கொளுத்திவிட்டது. அங்கே இருந்த ரோமானிய வீரர்களை யெல்லாம் எமலோகத்துக்கு அனுப்பிவிட்டது.

இதற்குள் ரோமானியத் தூதர்கள் மேற்கு நோக்கிப் பறந்தார்கள். நடந்தவற்றையெல்லாம் ஸ்வீடோனியஸுக் குச் சொன்னுர்கள். உடனே அவன் வேல்ஸை விட்டுப் புறப்பட்டான் ; தன்னுடைய சேனையோடு வேகமாகத் திரும் பினுன் ; லண்டன் பட்டணத்தில் இருந்து வேல்ஸுக்குப் போகும் வாட்லிங் சாலை வழியாக அவனுடைய சேனை திரும்பி வந்தது. போடிசீயாவிடம் இருந்த சேனை அவ்வளவு

பெரியதன்று. தென் இங்கிலாந்தில் தங்கி இருந்த சிறிய ரோமானியச் சேனையை வெல்ல முடிந்தது. ஆனால் ஸ்வீடோனியஸின் பெரிய சேனையை வெல்லும் அளவுக்கு அந்தப்படை பெரியதாக இல்லை. ஸ்வீடோனியஸின் சேனை பெரியதாக இருந்ததோடு அனுபவமும் உடையது. அதனால் இரண்டு தரத்தாருக்கும் நடந்த சண்டையில், போடிசீயாவும் அவளுடைய ஆட்களும் தோல்வியடைந்தார்கள்.



போடிசீயா உயிர்தப்பி ஓடிவிட்டாள் ; ஆனால் அவளுடைய ஆட்கள் ரோமானியருடைய கையில் சிக்கி நரக வேதனை அனுபவித்தார்கள். தன்னுடைய ஆட்களுக்கு நேர்ந்த கதியைப்பற்றிப் போடிசீயா கேள்விப்பட்டாள் ; ரோமானியர் கையில் சிக்குவதைவிடச் சாவதே மேலானது என்று முடிவு செய்தாள் ; நஞ்சையுண்டு உயிரை விட்டாள்.

ஆனால், போடிசீயா ரோமானியர்களுக்கு ஒரு நல்ல பாடம் கற்பித்தாள். பிரிட்டானியர்களைக் கொடூரமாக நடத்தினால், பின்னால் தொல்லைதான் விளையும் என்பதை ரோமானியர்கள் உணர்ந்து கொண்டார்கள். ஆகவே, அதன் பிறகு அவர்கள் பிரிட்டானியர்களைக் கொடுமையாக நடத்துவதை விட்டுவிட்டார்கள். நீதியோடும் நேர்மையோடும் நடந்து கொண்டார்கள். அப்படி அவர்கள் நன்முக ஆண்டதால், பிரிட்டன் செல்வங் கொழித்த நாடாக மாறியது; பல பிரிட்டானியர்கள் ரோமானிய சேனையில் சேர்ந்து நல்ல பெயர் எடுத்தார்கள்.

ஆனால், ஆங்கில மக்கள் போடிசீயாவையும், அவள் நியாயத்துக்காக நடத்திய போராட்டத்தையும் மறந்துவிடவில்லை. லண்டனில் வெஸ்ட்மின்ஸ்டர் பாலத்தில், பார்லிமென்ட் கட்டடத்துக்கருகில் போடிசீயாவின் சிலை இன்றைக்கும் நின்றுகொண்டு இருக்கிறது. அதைப் பார்க்கும் போதெல்லாம் பிரிட்டிஷ் மக்கள் போடிசீயாவின் சரித்திரத்தையும் அவளுடைய வீரத்தையும் நினைக்கிறார்கள்.

## 16. ஸேயின்ட் பால் (இறப்பு கி. பி. 95)

ரோமானியப் பேரரசில் பல இனத்தவர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்களில் யூதர்கள் என்பவரும் ஓர் இனத்தவர். அவர்களுடைய சொந்த நாடு பாலஸ்தீனம். அங்குப் பிறந்த இயேசு கிறிஸ்துவும் யூத இனச் சிறுவரே. ஆனால், யூதர்கள் வியாபாரிகள்; அவர்களில் பல பேர் சொந்த நாட்டை விட்டு வேறு நாடுகளுக்குப் போய் வியாபாரம் செய்தார்கள். மத்தியதரைக் கடலைச் சுற்றிலும் உள்ள பட்டினங்களில் நிலையாகத் தங்கி வியாபாரம் நடத்திவந்தார்கள். ஜூடியாவில் பெத்லஹெம் என்ற இடத்தில் இயேசு கிறிஸ்து பிறந்த அதே சமயம், சிறிய ஆசியாவில் டார்ஸஸ் என்ற பட்டணத்தில் இன்னொரு யூதச் சிறுவர் பிறந்தார். அவருடைய பெயர் சால் என்பது. ஒரு யூதப் பையன் எக் கட்டுப்பாடுகளுடன் வளர்க்கப்பட வேண்டுமோ அவ்வாறே அவர் தம் பெற்றோர்க

ளால் வளர்க்கப் பட்டார். யூதர்கள் ஒவ்வொரு சனிக்கிழமை யிலும் பிரார்த்தனைக் கூட்டம் நடத்துவார்கள். அதற்குச் 'சினகாக்' என்று பெயர். சால் இந்தச் சினகாகுகளுக்குத் தவருமல் போவார். மற்ற நாட்களில் அவர் பள்ளிக்கூடத் துக்குப் போவார். யூத ஆசிரியருக்கு 'ராபி' என்று பெயர். அவர் யூத மதக் கொள்கைகளையும் சட்டதிட்டங்களையும் யூதச் சிறுவர்களுக்குப் போதிப்பார். மற்ற யூதப் பிள்ளை களைப் போலவே சாலுக்கும் ஒரு தொழிலைக் கற்றுக் கொடுத் தார்கள். அந்தத் தொழில் அவர் பெரியவர் ஆனபோது பயன் படுவதற்காகக் கற்றுக் கொடுக்கப் பட்டது. சாலின் தகப்பனுர் அவருக்குக் கூடாரம் கட்டும் தொழிலைக் கற்றுக் கொடுக்கச் செய்தார். பிற்காலத்தில் சால் அந்தத் தொழி லையே மேற்கொண்டு பொருளீட்டி வாழ்ந்து வந்தார்.

சால் நல்ல அறிவாளி. ஆகையால் அவர் பெரியவர் ஆனதும் மேலே படிப்பதற்காக ஜெருசலெமுக்கு அனுப்பப் பட்டார். அங்குதான் யூதர்களுடைய கோவில் இருந்தது. மேலும் அங்கு மிகத் தேர்ந்த ஆசிரியர்கள் இருந்தார்கள். சால் ஜெருசலெமில் ஒரு பெரிய நல்ல யூத ஆசிரியரிடம் படித் தார். அவர் பெயர் கமேலியல் என்பது. சால் நன்ருகப் படித்துக் கடைசியில் தாமே ஓர் ஆசிரியர் ஆனுர். யூத வாலிபர்களுக்குள்ளேயே மிகச் சிறந்த அறிவாளி என்று அவர் பெயர் எடுத்தார். அவர் யூத மதத்துக்குத் தூண் போல விளங்கினுர். கடவுள் நம்பிக்கை இல்லாதவரோடு அவர் எதிர்த்து வாது செய்து அவர்களைத் தோற்கடித் தார். அக்காலத்தில் இயேசு கிறிஸ்துவைப் பின்பற்றிய கிறிஸ்தவர்கள் யூத மதம் பயனற்றது என்று பறைசாற்றி னர். கடவுளைப் பற்றி இன்னும் அதிகமாகச் சொல்லவே இயேசு கிறிஸ்து அவதரித்தார் என்று அவர்கள் சொன்னுர் கள். இயேசு கிறிஸ்துவே கடவுள்; மக்களை ஒரு புதிய முழு மதத்திற்கு இட்டுச் செல்ல கடவுளே இவ்வுலகில் இயேசுவாக வந்துள்ளார் என்று கிறிஸ்தவர்கள் கூறினுர் கள். மற்ற யூதர்களைப் போலவே, சாலும் கிறிஸ்தவர்கள் சொன்னவற்றை உண்மை என்று நம்பவில்லை. கிறிஸ்தவர் களுக்கு யூதர்கள் தொல்லைகள் கொடுக்க ஆரம்பித்தார்கள்.

சாலின் இளமைப் பருவத்தில் ஒரு சம்பவம் நடந்தது. ஒரு நாள் யூதர்கள் ஸ்டீவென் என்ற ஒரு கிறிஸ்தவத் தலை வரைப் பிடித்து நீதித்தலத்துக்குக் கொண்டு போய் நிறுத்தி ஞர்கள். ஸ்டீவென் நீதிபதிகளுக்கு முன்னுல் தைரியமாக நிமிர்ந்து நின்ருர்; அவர்களால் கொல்லப்பட்ட இயேசு உண் மையில் கடவுளே என்றும், அவரைக் கொன்றதன் மூலம் அவர்கள் பெரிய பாவத்தை இழைத்து விட்டார்கள் என்றும் சொன்னுர். உடனே எல்லோரும் ஸ்டீவென் மீது சினந்து கொண்டனர். எல்லோரும் சேர்ந்து அவரைப் பிடித்து ஜெரு சலெமுக்கு வெளியே கொண்டு போனுர்கள். சாகும்வரை அவரைக் கல்லால் அடித்து நொறுக்கினுர்கள். சால் அப் போது பக்கத்திலேயே இருந்து அக்கோரக் காட்சியைக் கண்டார். அதை அவர் மறக்கவே இல்லை. ஸ்டீவென் கிறிதுகூட பயப்படவோ சினமடையவோ இல்லை. அவர் மீது கற்கள் வந்து விழுந்து கொண்டு இருந்தபோது அவர் அமைதியாக இருந்தார்; தம்மை அடித்த அத்தனை பேரையும் மன்னித்து விடுமாறு ஆண்டவனிடம் முறை யிட்டுக் கொண்டார்.

இதன் பிறகு, சால் டமாஸ்கஸ் பட்டணத்தில் ஒரு சிறு கிறிஸ்தவக் கும்பல் இருப்பதாகக் கேள்விப்பட்டார். சில வீரர்களோடு அந்தப் பட்டணத்துக்குப் போக யூதத் தலைவர் களிடமிருந்து சால் அனுமதி பெற்ருர். டமாஸ்கஸுக்குப் போய் கிறிஸ்தவக் கும்பலைச் சிறை செய்ய வேண்டும் என் பதே அவருடைய எண்ணம். அவர் தம்முடைய வீரர்க ளோடு டமாஸ்கஸ் பட்டணத்துக்கு அருகில் வந்தபொழுது திடீரென்று ஒரு பெரிய அனற்பிழம்பு ஆகாயத்தில் தோன்றி யது. அது சாலினுடைய கண்களைக் குருடாக்கிவிட்டது. சால் கீழே விழுந்து விட்டார். அப்பொழுது கடவுள் அவ ரோடு பேசியது அவருக்கு நன்ருகக் கேட்டது. "நான் உன்னை என்னுடைய தொண்டனுகத் தேர்ந்தெடுக்கிறேன்; நீ டமாஸ்கஸ் பட்டணத்துக்குப் போ; மறுபடியும் என்ன செய்ய வேண்டும் என்று நான் சொல்லும் வரை அங்கேயே காத்திரு," என்று கடவுள் அவருக்குக் கூறினுர். வானில் தோன்றிய ஒளி மங்கி மறைந்து விட்டது. சால் தம் கண்

பார்வை அப்போது திரும்பவில்லை என்பதை உணர்ந்தார். அவருடைய வீரர்கள் அவரை டமாஸ்கஸ் பட்டணத்துக்குக் கூட்டிச் சென்ருர்கள். அங்கு அனனியஸ் என்ற கிறிஸ்தவக் கிழவர் வந்து சாலைச் சந்தித்தார். அவர் சாலைச் சந்திக்கும் படி கடவுளால் அனுப்பப்பட்டவர். அவர் சாலின் முகத்தில் தம் கையை வைத்தார்; சால் கண் பார்வையைத் திரும்ப வும் பெற்ருர். கிறிஸ்தவர்கள் எல்லோரும் முதலில் சாலைக் கண்டு நடுங்கினுர்கள். தங்களைப் பிடித்துத் துன்புறுத்து வதற்காகவே சால் வந்திருக்கிருர் என்று நினைத்தார்கள். ஆனுல் கடைசியில் அவர் முழுதும் மாறிவிட்டதை உணர்ந்து கொண்டார்கள். சால் ஞானஸ்நானம் பெற்று, கிறிஸ்தவ சங்கத்தில் ஓர் அங்கத்தினர் ஆனுர்.

சால் கிறிஸ்தவர் ஆன பிறகு, அந்த மதத்தைத் தீவிர மாகப் பரப்பத் தொடங்கினுர். இது டமாஸ்கஸில் இருந்த யூதர்களுக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கியது. யூதர்கள் மதம் தப்பானது, கிறிஸ்தவ மதமே உண்மையானது என் றெல்லாம் சால் பிரசங்கம் செய்தார். ஆகையால் சாலைக் கொன்று தீர்த்து விடுவது என்று யூதர்கள் முடிவு செய்தார் கள். சால் டமாஸ்கஸை விட்டுத் தப்பி விடக்கூடாது என் பதற்காக, அந்தப் பட்டணத்தின் வாயில்களில் எல்லாம் யூதர் கள் காவல் ஆட்களை நிறுத்திவைத்தார்கள். ஆனுல் சாலி னுடைய கிறிஸ்தவ நண்பர்கள் அவரை ஒரு கூடையில் உட் காரவைத்து பட்டணத்து மதில் சுவரின் ஒரு சன்னலின் வழி யாக அந்தக் கூடையைக் கயிற்றின் மூலம் பட்டணத்துக்கு வெளியே அவரை இறக்கிவிட்டார்கள். சால் த்ப்பியவுடன் நேராக ஜெருசலெமுக்குப் போனுர். அங்கிருந்த கிறிஸ்தவர் களுடன் சேர்ந்து கொண்டார். பார்னபஸ் என்ற கிறிஸ்தவ மதத் தலைவரோடு நட்புப் பூண்டார்.

சிறிது காலம் வரை ஜெருசலெமிலேயே இருந்தார். இயேசு கிறிஸ்துவோடு வாழ்ந்து தொண்டு செய்தவர்களை யெல்லாம் சந்தித்தார். பிறகு தமது சொந்த ஊரான டார்ஸ ஸுக்குத் திரும்பினுர். அவர் அப்பொழுது தம்முடைய பெய ரையும் மாற்றிக் கொண்டார். சால் என்பது யூதப் பெயர். அதன் ரோமானியப் பெயர் பால் என்பது; அந்தப் பெயரை

அவர் வைத்துக் கொண்டார். இன்றைக்கு நாம் அவரைச் ஸெயின்ட் பால் என்று அழைக்கிறோம். அவர் போன இடங்களிலெல்லாம் இயேசுவைப் பற்றிக் கூறினர். கடவுள் தம்மோடு எப்படிப் பேசினர் என்பதையும் தம்மைக் கிறிஸ்தவராகும்படி கடவுள் பணித்தார் என்றும் எடுத்துச் சொன்னர். சிறிது காலத்தில் அவரை ஆன்டியாக் என்ற பெரிய கிரேக்கப் பட்டணத்துக்கு வரும்படி அழைத்தார்கள். அங்கே இருந்த கிறிஸ்தவர்களுக்குப் பாலினுடைய உதவி தேவையாக இருந்தது. சில கிரேக்கர்களைக் கிறிஸ்தவ மதத்துக்கு மாற்ற அங்கே இருந்த கிறிஸ்தவர்கள் முயற்சி செய்தார்கள். இப்பணிக்காக அங்கு அனுப்பட்ட பார்னபஸ் டார்ஸஸ் பட்டணத்துக்குப் போய்ப் பாலை அழைத்துக் கொண்டு வந்தார். ஓர் ஆண்டு முழுவதும் பால் ஆன்டியாக்கில் தங்கி இருந்தார். அங்குக் கிறிஸ்தவ மத உண்மைகளை மக்களுக்கு இடைவிடாமல் உபதேசம் செய்தார்.

பால் எங்கும் நிலையாகத் தங்கி யிருக்கும்படி விடப்படவில்லை. ஆன்டியாக்கிலிருந்து புறப்பட்டு பல இடங்களுக்கும் பிரயாணம் செய்து கிறிஸ்தவ மதத்தைப் பரப்பினர். ரோம இராச்சியம் முழுவதும் அவர் சுற்றித் திரிந்தார்; கடல்களைத் தாண்டினர்; மலைகளையும் பாலைவனங்களையும் கடந்து சென்றார். அவர் சென்ற ஒவ்வொரு பட்டணத்திலும் ஒரு கிறிஸ்தவக் கூட்டத்தை உண்டாக்கிவிட்டுப் போனர். அவர் ஐரோப்பாவுக்கும் சென்றார். ஆதென்ஸ், காரிந்த் முதலிய கிரேக்கப் பட்டணங்களிலெல்லாம் கிறிஸ்தவ மதப் பிரசாரம் நடத்தினர். ரோம இராச்சியத்தின் தலைநகரான ரோமாபுரிக்குப் போகவேண்டும் என்று அவருக்கு அவா இருந்தது. கடைசியில் அவர் தாம் விரும்பிய வகையில் போகாவிட்டாலும், வேறு ஒரு வகையாக அங்குப் போய்ச் சேர்ந்து விட்டார்.

அவர் எங்கே போனாலும், அமைதியாக வாழ முடியவில்லை. யூதர்கள் இன்னும் அவரை விஷம் போல வெறுத்தார்கள். அவர்கள் அவர் போகும் இடமெல்லாம் பின் தொடர்ந்து போய்த் தொல்லை கொடுத்தார்கள். ஒவ்வோர் இடத்திலிருந்தும் அவர் யூதர்களால் விரட்டப்பட்டார். சில

சமயம் அவர் சிறைச் சாலைக்கும் போக நேரிட்டது. ஒரு முறை அவர் கல் அடிக்கும் ஆளானர்; யூதர்கள் அவர் செத்துவிட்டார் என்று நினைத்து விட்டுவிட்டுப் போய் விட்டார்கள். ஆனல் பால் உயிர் பிழைத்துக் கொண்டார்; தம்முடைய கிறிஸ்தவ மதப் பிரசாரத்தைத் தொடர்ந்து நடத்தினர். பால் ஏழைக் கிறிஸ்தவர்களுக்கு உதவுவதற்காகச் சிறிது பணம் திரட்டினர்; அதை எடுத்துக் கொண்டு ஜெருசலெமுக்குப் போனர். அங்கு யூதர்கள் அவருக்கு எதிராக ஒரு பெரிய கலகத்தை உண்டாக்கினர்கள். அதோடு பால் தான் இந்தக் கலகத்துக் கெல்லாம் காரணம் என்று ஜெருசலெத்திலிருந்த ரோமானிய வீரர்களுக்கும் சொல்லி விட்டார்கள்; உடனே அவர்கள் பாலைப் பிடித்துச் சிறையில் தள்ளினர்கள். ரோமானிய கவர்னர் பாலைக் கொலை செய்யும்படி உத்தரவிட வேண்டும் என்று யூதர்கள் விரும்பினர்கள். அதற்காக எவ்வளவோ குழப்பங்களையும், கலகங்களையும், விளைவித்தார்கள். ஆனல் பால் ரோம் நாட்டினராகையால் ரோமாபுரி மன்னரே நேரில் தம்முடைய வழக்கை விசாரணை செய்யவேண்டும் என்று அவர் வேண்டிக் கொண்டார். அதற்கு அவருக்கு உரிமை உண்டு. ஆகையால் கவர்னர் அவரை ரோமாபுரிக்கு அனுப்ப ஒப்புக்கொண்டார்.

பால் கடல் வழியாக ரோமாபுரிக்குப் பயணம் ஆனர். அவர் ஏறிச் சென்ற கப்பல் ஒரு கடும் புயலில் சிக்கி உடைந்தது. பாலின் புத்திமதிப்படி கப்பல் தலைவன் நடந்து கொண்டதனல் கப்பலில் இருந்த யாவருடைய உயிரும் காப்பாற்றப்பட்டது. அவர்கள் எல்லோரும் மால்ட்டா என்ற தீவின் கரையில் ஒதுக்கப்பட்டார்கள். அவர்கள் அங்கேயே மாரிக்காலத்தைக் கழித்தார்கள். பிறகு கால நிலைமை மாறியதும், மீண்டும் தம்முடைய பயணத்தைத் தொடர்ந்தார்கள். கடைசியில் அவர்கள் ரோமாபுரியை அடைந்தார்கள். பால் கிறிஸ்தவ மத போதகராக ரோமாபுரியை அடையாவிட்டாலும், ரோமானிய வீரர்களுடைய பாதுகாப்பில் கடைசியில் அங்கே போய்ச் சேர்ந்து விட்டார்.

பைபிளின் புதிய டெஸ்டமெண்ட் என்னும் புதிய ஏற்பாட்டில் ஸெயின்ட் பாலின் வாழ்க்கைச் சரித்திரம் இதுவரைதான்

சொல்லப்பட்டிருக்கிறது. பால் தாம் பிரயாணம் செய்த பட்டணங்களில் வாழ்ந்த கிறிஸ்தவர்களுக் கெல்லாம் அருமையான கடிதங்கள் எழுதி இருக்கிருர்; அவற்றை நாம் புதிய டெஸ்டமென்டிலும், கிறிஸ்து சீடர்களின் சட்டங்களிலும் படிக்கலாம். பால் சில கடிதங்களைத் தம்முடைய நெருங்கிய



நண்பர்களுக்கு எழுதியிருக்கிருர். அவற்றுள் மிக மிகச் சிறிய கடிதம் பிலெமான் என்பவருக்கு எழுதப்பட்டது. பிலெமானுக்கு ஒனெஸிமெஸ் என்று ஓர் அடிமை இருந்தான்; அவன் ஒரு நாள் தன் எசமானனை விட்டு ஓடிப் போய் விட்டான். இந்தக் குற்றத்துக்காக ஒனெஸிமெஸைக் கொன்று விடக்கூட பிலெமானுக்கு உரிமையுண்டு. ஆனல் ஒனெஸிமெஸ் வழியில் பாலைச் சந்தித்துக் கிறிஸ்தவனுக மாறிவிட்டான்.

பால் மறுபடியும் அவனுடைய எசமானனிடமே அவன் போக வேண்டும் என்று கட்டளையிட்டார். போகும்போது, அவனிடம் பிலெமானுக்கு ஒரு கடிதம் கொடுத்தனுப்பினர். அதுவே அந்தச் சிறிய கடிதம். அதில் ஒனெஸிமஸை மன்னித்து ஏற்றுக் கொள்ளுமாறு பால் பிலெமானை வேண்டிக் கொண்டு எழுதி இருந்தார்.

பாலின் வாழ்க்கை எப்படி முடிவுற்றது என்று நிச்சயமாகத் தெரியவில்லை. ஆனல் இறுதியில் அவர் நீரோ என்ற ரோமானியச் சக்கரவர்த்தியால் கொடூரமாகக் கொல்லப்பட்டார் என்று நாம் நம்பலாம். நீரோவுக்குக் கிறிஸ்தவர்களின் மீது வெறுப்பு. ஒரு சமயம் ரோமாபுரியில் ஒரு பெரிய தீ விபத்து ஏற்பட்டது. அது கிறிஸ்தவர்களால் நிகழ்ந்தது என்று நீரோ குற்றம் சாட்டினன். அப்பொழுது ரோமாபுரியில் இருந்த கிறிஸ்தவர்களை எல்லாம் பிடித்துக் கொடூரமாகக் கொலை செய்துவிட்டான். இவ்விதமாகக் கடைசியில், பல ஆண்டுகளுக்கு முன்னல் ஸ்டீவென் இயேசுவுக்காக உயிர் நீத்தது போலவே, பாலும் இயேசுவுக்காக மரணம் அடைந்தார். இயேசுவுக்காகத் தாம் துன்பப்படுவதை அவர் உவகையுடன் வரவேற்ருர். அவர் ரோமாபுரிச் சிறையில் இருந்தபோதுதான் பிலிப்பியர்களுக்குக் கடைசிக் கடிதத்தை எழுதி இருக்கிருர். அதுவே அவருடைய கடிதங்கள் எல்லாவற்றிலும் சுவையானது.

## 17. ஸெயின்ட் பாட்ரிக் (கி. பி. 389-469)

பிரிட்டன் ரோம் சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாக இருந்த போது, இங்கிலாந்தின் மேற்கில் ஒரு பண்ணையில் ஒரு சிறுவர் பிறந்தார். அவருக்கு அவர் தாய் தகப்பன்மார் பாட்ரிக் என்று பெயர் இட்டார்கள். அவர் தகப்பனர் பெயர் கல்பர்னியஸ். அவர் ரோமாபுரிப் பிரஜை; அவர் ஸெயின்ட் பாலைப் போலவே தம்முடைய ரோமாபுரிப் பிரஜா உரிமையைப் பற்றிப் பெருமை பட்டுக் கொண்டார். அவர் ரோமானியர்களையும், அவர்களுடைய நியாயமான அரசாட்சியையும்

மிகவும் புகழ்ந்தார். ரோமானியர்களில் பல பேர் வேறு இடங்களில் பணிபுரிவதற்காக இங்கிலாந்தை விட்டுப் புறப்பட்ட போது அவர் மிகவும் வருத்தமடைந்தார். பிரிட்டனுக்குப் பக்கத்தில் அயர்லாந்து என்று ஒரு தீவு இருக்கிறது. அந்தத் தீவில் வசித்த இனத்தார்களுக்கு ஐரிஷ் இனத்தார் என்று பெயர். அவர்கள் முரட்டு மனிதர்கள். அவர்களால் பிரிட்டனுக்கு அடிக்கடித் தொல்லைகள் ஏற்பட்டன. இத் தொல்லைகளைக் கண்டு கல்பர்னியஸ் மிகவும் வேதனை அடைந்தார்.

பாட்ரிக்குக்கு வயது பதினாறு ஆனது. அப்பொழுது ஒரு நாள் சில ஐரிஷ் கடல் கொள்ளைக்காரர்கள் பிரிட்டனுக்கு வந்தார்கள்; கல்பர்னியஸின் பண்ணைக்குப் பக்கத்தில் வந்து கரை ஏறினார்கள். அவர்கள் கொள்ளையடிக்கவும், வீடுகள் முதலியவற்றைக் கொளுத்தவும், தங்களுக்கு வேலை செய்ய அடிமையாக ஆட்களைப் பிடிக்கவும் வந்தார்கள். அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டவர்களில் பாட்ரிக்கும் ஒருவர். கொள்ளைக்காரர்கள் அயர்லாந்துக்குத் திரும்பியதும், பாட்ரிக்கை அடிமைகளை விற்பனை செய்யும் சந்தைக்கு அனுப்பினார்கள். பாட்ரிக்கை விலைக்கு வாங்கியவன் அவரைப் பன்றி மேய்ப்பதற்கு அனுப்பினான். பாட்ரிக் பல மணி நேரம் தன்னந்தனியே பன்றிகளை மேய்த்து வந்தார். அடிக்கடி பிரிட்டனிலிருந்த தம் வீட்டைப் பற்றி நினைத்தார்; அவர் தந்தையார் கடவுளைப் பற்றிச் சொன்னவையெல்லாம் அவருடைய நினைவுக்கு வந்தன. பாட்ரிக் தம்முடைய மக்களை விட்டு வெகு தொலைவு வந்து விட்டாலும் கடவுள் அவரைக் காப்பாற்றிக் கொண்டுதான் வந்தார். அதைப் பற்றிப் பாட்ரிக் நன்றியுடன் சிந்தித்துக் கொண்டே இருந்தார்.

பாட்ரிக்கின் எசமானன் அவரிடம் கொடுமையாக நடந்து கொள்ளவில்லை. பாட்ரிக் ஐரிஷ் மொழியை நன்ருகப் பேசக் கற்றுக் கொண்டார். ஐரிஷ் மக்களோடும் சிறுவர்களோடும் நன்ருகப் பழகினர்; அவர்கள் பாட்ரிக்கிடம் அடிக்கடி வந்து பேசிக் கொண்டிருப்பார்கள். ஆனல் எப்படியாவது தப்பித்துக்கொண்டு, மறுபடியும் தம்முடைய வீட்டுக்குப் போகவேண்டும் என்று பாட்ரிக் ஆசைப்பட்டார். இப்படியே பாட்ரிக் அயர்லாந்தில் ஆறு ஆண்டுகளைக் கழித்தார்.

ஒரு நாள் இரவு அவர் ஒரு கனவு கண்டார். கனவில் ஏதோ ஒரு குரல் பாட்ரிக்கோடு பேசியது : "நீ உடனே கடல்கரைக்குப் போ ; அங்கே ஒரு கப்பல் இருக்கும் ; அதில் ஏறிக்கொள். அது உன்னைப் பிரிட்டனுக்குக் கொண்டுபோய் விடும்" என்று சொன்னது. ஆகையால் மற்ற அடிமைகள் எழுவதற்கு முன்னமேயே வெகுகாலையில் பாட்ரிக் எழுந்தார் ; தம்முடைய குடிசையில் இருந்து சத்தம் செய்யாமல் பூனை போல் வெளியேறினர். பிறகு ஒரே மூச்சாக ஓடினர் ; கடல் கரையை அடைய அவர் வெகு தொலைவு பயணம் செய்ய வேண்டி இருந்தது. கனவில் குரல் சொன்னது போலவே ஒரு கப்பல் அங்கே இருந்தது. அது பிரிட்டனுக்குப் புறப்படத் தயாராக இருந்தது. பாட்ரிக்கை அழைத்துக்கொண்டு போகக் கப்பல் மாலுமிகள் ஒப்புக் கொண்டார்கள். பாட்ரிக் இன்னல்கள் பல அனுபவித்தார். பிறகு கடைசியில் தம்முடைய நாட்டை அடைந்தார்.

பாட்ரிக்கைக் கண்ட அவருடைய தாய் தகப்பன்மாருடைய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பாட்ரிக் அவர்களை விட்டுப் போன சமயம் சிறுவனாக இருந்தார் ; இப்போதோ வளர்ந்த மனிதராகத் திரும்பினர். அவர் தம்முடனேயே நிலையாகத் தங்கிவிட வேண்டும் என்று அவருடைய பெற்றோர் ஆசைப்பட்டனர். ஆனால் அவரால் நிலையாகத் தங்கி வாழமுடியவில்லை. அவரால் ஐரிஷ் மக்களை மறக்க முடியவில்லை ; அவர்கள்பால் அவருக்கு ஒரு பாசம் உண்டானது. ஒருநாள் இரவு அவர் மற்றொரு கனவு கண்டார். அந்தக் கனவில் அயர்லாந்தில் இருந்து ஓர் ஆள் அவருக்கு ஒரு கடிதத்தைக் கொண்டு வந்தான். கடிதத்துக்கு மேலே "ஐரிஷ் மக்களின் குரல்" என்று எழுதப்பட்டிருந்தது. பாட்ரிக் ஏதோ ஒரு குரலின் ஒலியைக் கேட்டார். "அருமை வாலிபனே, நீ மீண்டும் எங்களிடம் வரவேண்டும்," என்று அந்தக் குரல் கூறியது. பாட்ரிக் உடனே ஒரு முடிவுக்கு வந்தார் ; தாம் கிறிஸ்தவப் பாதிரியாக அயர்லாந்துக்குத் திரும்பிப்போக வேண்டும் ; போய், ஐரிஷ் மக்களிடையே கிறிஸ்தவ மதத்தைப் பரப்ப வேண்டும் என்று உறுதி கொண்டார்.

முதலில், தாம் செய்யப் போகும் வேலைக்குப் பயிற்சி பெறுவதற்காகச் சில ஆண்டு கழித்தார். கடைசியில் அயர்லாந்துக்குப் புறப்படத் தயார் ஆனார். அப்போது அவருக்கு வயது நாற்பத்தைந்து. இந்த முறை அவர் அடிமை என்ற நிலையில் அயர்லாந்துக்குப் போகவில்லை; உரிமை உள்ள மனிதராகவே போனார்; தாம் நேசித்த மக்களைக் கண்டு அளவளாவுவதற்காகவே போனார். அவருக்கு ஏற்கெனவே ஐரிஷ் மொழியை நன்றாகப் பேசத் தெரியும். ஆகையால், இயேசு கிறிஸ்துவைப்பற்றி அவர்களிடம் எளிய சொற்கள் மூலம் எடுத்துக் கூறினார். பலர் அவருடைய போதனைகளைக் கேட்டார்கள். பாட்ரிக்கினுடைய பிரசங்கங்களை யெல்லாம் கேட்ட பிறகு தம்மையும் கிறிஸ்தவ மதத்தில் சேர்த்துக் கொள்ளும்படி அவரிடம் கேட்டுக் கொண்டார்கள். பாட்ரிக்கும் அவர்களுக்கு ஞானஸ்நானம் செய்தார்.

கீழ்வருவதுபோல ஒரு கதை சொல்லப்படுகிறது. ஒரு நாள் ஓர் ஐரிஷ் தலைவன் பாட்ரிக்கிடம் ஞானஸ்நானம் பெறுவதற்காக வந்தான். அவன் பாட்ரிக்குக்கு முன்னால் வந்து சிறிது நேரம் காத்துக் கொண்டிருந்தான். அப்பொழுது பாட்ரிக் தம் கையில் இருந்த கழியைத் தரையில் ஊன்றினார். எதிர்பாராத விதமாக அந்தக் கழியின் கூர்மையான முனை ஐரிஷ் தலைவனுடைய ஒரு பாதத்தை ஊடுருவிச் சென்றது. ஐரிஷ் தலைவன் கூச்சல் போடாமல், பேசாமல் நின்றான்; பாட்ரிக் பிறகு அவனுக்கு ஞானஸ்நானம் செய்தார். அதன் பின் தம்முடைய கழியை எடுத்துக்கொள்ளப் போனார். அப்பொழுதுதான் தாம் செய்த தவற்றைக் கண்டார். உடனே அவர் மிகவும் வருத்தப்பட்டார்; அந்தத் தலைவன் தன் பாதத்தைக் குத்தியதும் ஏன் சத்தம் போடவில்லை என்று பாட்ரிக் கேட்டார். அதற்கு அவன், "ஞானஸ்நானத்துக்கு உரிய சடங்குகளில் இதுவும் ஒன்று என்று நினைத்தேன். நம்முடைய தந்தை இயேசு கிறிஸ்துவுக்காக இந்த வலியைத் தாங்கிக்கொள்ள வேண்டும் என்று கூச்சல் போடவில்லை," என்று சொன்னான்.

பாட்ரிக் கடவுளைப் பரமபிதா என்றும், திருக்குமாரர் என்றும் புனித ஆத்மா என்றும் பலவகையாகச் சொன்னார்;

அதே சமயம் கிறிஸ்தவர்களுக்கு ஒரே ஒரு கடவுள் தான் உண்டு என்று சொன்னார். இது பல ஐரிஷ் மக்களுக்குக் குழப்பத்தை உண்டாக்கியது. பாட்ரிக் கீழே குனிந்து தரையில் கிடந்த ஓர் இலையை எடுத்தார். அது ஷம்ராக் என்னும் ஐரிஷ் செடியினுடைய இலை. அது உருவத்தில் கிளாவரைப்போல இருக்கும். பாட்ரிக் அந்த இலையை ஐரிஷ் மக்களிடம் காட்டினார்; "இது ஒரே இலைதான். ஆனால் மூன்று பாகங்கள் இதில் இருக்கின்றன. கடவுளும் இப்படியே ஒன்றில் மூன்றாக இருக்கிறார்," என்று சொன்னார்.



பாட்ரிக் மலைகளின் மீதும் காடுகளின் வழியாகவும் அயர்லாந்தில் பயணம் செய்தார். கடைசியில் டாரா என்ற இடத்துக்குப் பக்கத்தில் வந்தார். அங்கே தான் அயர்லாந்தின்

பேரரசன் இருந்தான். அவனுடைய பெயர் லோயிகேர் என்பது. லோயிகேர் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவன் இல்லை; அவன் தம் மீது கோபம் கொண்டுள்ளான் என்பதும், தம்மைக் கொல்ல ஆட்களை ஏவி இருக்கிறன் என்பதும் பாட்ரிக்குக்குத் தெரியும். இருந்தாலும் அவர் அஞ்சவில்லை. "என்னோடு கிறிஸ்து இருப்பரேல், நான் யாரைக் கண்டு அஞ்சவேண்டும்," என்று நினைத்தார். ஆகையால் எவ்வித அச்சமுமின்றி அவர் நேராக லோயிகேரின் அரண்மனைக்குப் போனர். அவர் அரண்மனைக்கு வரும் வழியில் அவரைக் கொல்வதற்காக லோயிகேரின் ஆட்கள் ஒளிந்து கொண்டு காத்திருந்தார்கள். அவர்கள் கடைசிவரை பாட்ரிக்கைக் காணவில்லை என்றும், காட்டுமான் ஒன்று அவர் களைத் தாண்டிப் போனதைத்தான் பார்த்தார்கள் என்றும் ஒரு கதை வழங்குகிறது. இவ்விதமாகப் பாட்ரிக் எவ்விதத் துன்பமும் இல்லாமல் லோயிகேரின் அரண்மனையை அடைந்தார்.

பாட்ரிக்கைக் கண்டதும் லோயிகேர் அவரை வரவேற்றான். அவன் கிறிஸ்தவனுக மாறுவதற்குக் கடைசிவரை மறுத்துவிட்டான்; என்றுலும் தன் நாட்டு மக்களிடையே கிறிஸ்தவ மதத்தைப் பரவச்செய்யப் பாட்ரிக்குக்கு அனுமதி கொடுத்தான்.

பாட்ரிக்கை "அருட்பெருஞ் சோதி" என்று எல்லோரும் வருணித்தார்கள். அவர் சென்ற இடங்களிலெல்லாம் கோவில்களும் துறவி மடங்களும் கட்டப்பட்டன. விரைவில் அயர்லாந்து ஒரு கிறிஸ்தவ நாடாக மாறிவிட்டது. பாட்ரிக் அந்த நாட்டின் முதல் பிஷப்பு ஆனர். அவருக்குப் பிறகு அவருடன் அவர் துவக்கிய பணி முடிந்து விடவில்லை. கிறிஸ்தவர்கள் பலர் அவர் பணியைத் தொடர்ந்து செய்தார்கள். அவர்கள் ஸ்காத்லாந்துக்கும் மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் போய்க் கிறிஸ்தவ மதத்தைப் பரவச் செய்தார்கள்.

## 18. கிரிகரிப் பெரியார் (கி.பி. 540-602)

ஸெயின்ட் பாலின் மரணத்திற்குப் பின்னர் கழிந்த நூற்ருண்டு களில் கிறிஸ்தவ மதம் உலகமெங்கும் பரவியது. பாதிரிமார் கள், போர்வீரர்கள், வியாபாரிகள் எல்லோரும் நாடு நாடாக அந்த மதத்தைப் பரவச் செய்தார்கள். முதலில் கிறிஸ்தவர் கள் பலவகையான துன்பங்களுக்கு ஆளானுர்கள்; வேறு தெய்வங்களை வணங்க மறுத்ததற்காக அவர்கள் பல இன் னல்களை அனுபவிக்க நேர்ந்தது. ஆனுல், அவர்களோ கிறிஸ் தவ மதத்தைத் துறப்பதற்குப் பதிலாக உயிரைக் கொடுக்கவும் தயாராக இருந்தார்கள். எரியும் தீயில் போட்டு வதக்கிய போது கூட அவர்கள் மனம் மாறவில்லை; சிங்கம், புலி முத லிய கொடிய விலங்குகளுக்கு இரையாகக் கொடுத்த போது கூட அவர்கள் துணிவு இழக்கவில்லை. கிறிஸ்தவர்களுடைய துணிச்சலையும் வீரத்தையும் நாளாவட்டத்தில் மக்கள் போற் றத் தொடங்கினுர்கள். ஸெயின்ட் பால் கொல்லப் பட்டுச் சுமார் முந்நூறு ஆண்டுகள் கழிந்து விட்டன. பிறகு கான்ஸ் டன்டைன் என்ற ரோமானியச் சக்கரவர்த்தி ஒரு புகழ்பெற்ற சட்டத்தை இயற்றினுர்; அதற்கு மிலான் சட்டம் என்று பெயர். அதுமுதல் கிறிஸ்தவர்கள் யாதொரு தடையுமின்றித் தம்முடைய தெய்வத்தை வணங்கலாம் என்றும், யாரும் அவர்களுக்கு எத்தகைய துன்பமும் இழைக்கக் கூடாது என்றும் அந்தச் சட்டம் கூறியது.

அதன் பிறகு கிறிஸ்து மார்க்கம் எவ்விதத் தடங்கலும் இல்லாமல் வளர்ந்து கொண்டே போனது. ரோமாபுரி பிஷப்புதான் அதற்குத் தலைவர். அவர் மிக முக்கியத்து வம் வாய்ந்த தலைவர் ஆய் விட்டார். அவருக்குப் 'போப்' என்ற பெயர் ஏற்பட்டது. அந்த வார்த்தைக்குத் தந்தை அல்லது அப்பா என்பது பொருள். எல்லா பிஷப்புக்களும் போப்பைத் தம்முடைய தலைவராக ஒப்புக்கொண்டார்கள்.

இதற்குச் சிறிது காலத்திற்குப் பிறகு ரோமப் பேரரசுக்கு ஒரு பெரிய கெட்ட காலம் உண்டானது. அந்தப் பேரரசின் எல்லைகளில் பல கொடிய இனத்தார்கள் வாழ்ந்து வந்தார்கள்.

அவர்கள் அந்தப் பேரரசைக் குலைக்க முயற்சி செய்தார்கள் ; அதன் பட்டணங்களையும், செழிப்பான நிலங்களையும் பிடித்துக் கொள்ள ஆசைப்பட்டார்கள். சிறிது சிறிதாக அவர்கள் ரோமப் பேரரசில் முன்னேறிக் கொண்டு வந்தார் கள். கடைசியில் ரோமாபுரி இருந்த இத்தாலி தேசத்துக்குள் ளேயே கால் வைத்து விட்டார்கள். அப்போது ரோமாபுரியை ஆண்டு கொண்டிருந்தவன் பலமற்றவன்; ஆகையால் வேற்று இனத்தார் ரோமாபுரியை நெருங்கி வந்தவுடன் அவன் நாட்டை விட்டு விட்டு ஓடி விட்டான். ஆனல் அந்தச் சம யத்தில் இருந்த போப் மிகுந்த தைரியசாலி. அவருடைய பெயர் லியோ என்பது. லியோ என்ருல் சிங்கம் என்று பொருள். அவர் ஒரு சிங்கத்தைப் போலவே பலசாலியாக இருந்தார். அவர் ரோமாபுரியை நோக்கி வந்த கொள்ளைக் கூட் டத் தலைவனிடம் நேராகப் போனர். ரோமாபுரியையும், ரோமாபுரி மக்களையும் அவன் ஒன்றும் செய்யக் கூடாது என்று அவனிடம் சொன்ஞர். அவருடைய தைரியத்தைக் கண்டு அந்தத் தலைவன் ஆச்சரியப் பட்டான். ரோமாபுரியை அழிக்காமல் திரும்பிச் செல்ல ஒப்புக்கொண்டான். அது முதல் போப் லியோவை மக்கள் வெகுவாகப் போற்றினர்கள்; அவர் தம்மைக் காப்பாற்றியதற்காக அவரை மிகவும் கொண் டாடினர்கள். ரோமாபுரிச் சக்கரவர்த்தியை விடப் போப்புக்கே மக்கள் அதிகமாக மதிப்புக் கொடுத்தார்கள்.

இதற்குப் பின் சுமார் நூறு ஆண்டுகள் கழித்து ரோமில் ஒரு குழந்தை பிறந்தது. அதற்குக் கிரிகரி என்று பெயர். அவருடைய தகப்பனர் ஒரு ரோமானியப் பிரபு. அவர் தாயார் பெயர் சில்வியா என்பது. அவள் நன்ருகப் படித்த அறிவாளி. தாயும் தந்தையும் கிரிகரியை மிகவும் நேசித்தார்கள். அவரைப் பெரிய மனிதர் ஆக்கவேண்டும் என்பது அவர்களுடைய எண்ணம். ஆகையால் அவர்கள் அவரை ஒரு பள்ளிக் கூடத் துக்கு அனுப்பிப் படிக்கவைத்தார்கள்; கிரிகரி சட்ட நிபுணர் ஆக வேண்டும் என்பது பெற்ருேர்களுடைய ஆசை. கிரிகரி மிகமிக நன்ருகப் படித்து முன்னுக்கு வந்தார்; முப்பதாவது வயதிலேயே அவர் ரோமாபுரிப் பட்டணத்தில் நீதிபதியாக நியமிக்கப் பட்டார். அவர் தம்முடைய வேலையை நன்ருகவும்

நாணயமாகவும் செய்து வந்தார். அதனால் மக்கள் எல்லாரும் அவரைப் பாராட்டிப் புகழ்ந்தார்கள். அவருக்கு முப்பத்து நான்கு வயது ஆன போது, அவருடைய தகப்பனார் கால மானார். கிரிகரி தம்முடைய தகப்பனார் மேல் உயிரையே வைத்திருந்தார். அவர் இறந்தது கிரிகரிக்கு மிகுந்த துயரத்தைக் கொடுத்தது. அவர் தம்முடைய சொந்த வாழ்க்கையை அலசி ஆராய்ந்தார். அதுவரை தாம் சுயநலத்துக்காகவே வாழ்ந்து விட்டதாக அவர் உணர்ந்தார். இனிமேல் கடவுளுக்குத் தொண்டு செய்தே தம்முடைய எஞ்சிய வாழ்வைக் கழிக்க வேண்டும் என்று முடிவு செய்துகொண்டார். அவருடைய நண்பர்கள் அவருடைய தீர்மானத்தை மாற்ற எவ்வளவோ முயற்சி செய்தார்கள். அவர் பணக்காரராகவும் முக்கிய மனிதராகவும் இருந்ததே அதற்குக் காரணம். ஆனால் அவர்கள் யோசனைகளைக் கிரிகரி கொஞ்சமும் கேட்கவில்லை. அவர் தம்முடைய நீதிபதி பதவியை உதறித் தள்ளிவிட்டார்; தம்முடைய சொத்துக்களையும் விட்டுவிட்டார்; தம் நிலங்களையும் வீடுகளையும் விற்றுவிட்டு ஒரு துறவி ஆகிவிட்டார்.

அந்தக் காலத்தில் பல மதப்பற்றுள்ள கிறிஸ்தவர்கள் துறவிகளாகவே இருந்தார்கள். அவர்கள் பெரிய மடங்களில் ஒன்றாகக் கூடி வசிப்பது வழக்கம். அந்த மடங்களில் சேரும் ஒவ்வொருவரும் மூன்று சபதங்களைச் செய்து கொடுக்கவேண்டும். முதலாவது, அவர்கள் எல்லோரும் தங்கள் உடைமைகளைத் துறந்து விடவேண்டும். சொந்தமாகத் துணிகள் புத்தகங்கள் கூட வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்களிடம் உள்ள எல்லாப் பொருள்களும் மடத்துக்கே உரியவை. இரண்டாவது, தாங்கள் திருமணம் செய்து கொள்வதில்லை என்று அவர்கள் சத்தியம் செய்ய வேண்டும். ஆண்டவனை வணங்குவதிலும், மதப்பிரச்சாரம் செய்வதிலும், ஏழைகளுக்கு உதவி செய்வதிலுமே அவர்கள் தங்கள் வாழ்க்கை முழுவதையும் செலவிட வேண்டும். மூன்றாவதாக மடத்துக்குத் தலைவராக உள்ள மடாதிபதிக்கு எப்பொழுதும் அடங்கி நடப்பதாக உறுதி கூற வேண்டும். துறவிகள் இந்த மூன்று சத்தியங்களையும் செய்து கொடுத்தார்கள். கிரிகரி தம்மிடம் கிடந்த

பொருளைச் செலவிட்டு மூன்று துறவி மடங்களைக் கட்டினர்; அவைகளில் ஒரு மடத்தில் தாமே துறவியாகவே வாழ்ந்தார்.

ஒரு நாள் அவர் ரோமாபுரி வீதிகளின் வழியே நடந்து போய்க் கொண்டிருந்தார். அப்போது அடிமைச் சந்தையைக் கடக்கும்படி நேரிட்டது. அங்கு விற்பனைக்காக நிற்க வைக்கப் பட்டிருந்த சிறுவர்களைக் கண்டார். அவர்கள் ரோமானியச் சிறுவர்களிலிருந்தும் முழுதும் மாறுபட்டு இருந்தார்கள். ரோமானியக் குழந்தைகளுக்குக் கருத்த தலைமுடி



யும் பழுப்பான கண்களும் இருக்கும். ஆனல் அங்கே இருந்த சிறுவர்களுக்கோ மஞ்சளான தலைமயிரும், நீலக் கண்களும் இருந்தன. கிரிகரி அந்தச் சிறுவர்கள் எங்கிருந்து வந்தவர்கள் என்று கேட்டார். அவர்கள் "ஆங்கிள்கள்" என்ற இனத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், இங்கிலாந்து என்ற தொலைவில் இருந்த தீவில் இருந்து வந்தவர்கள் என்றும் பதில் கிடைத்தது. அந்தச் சிறுவர்கள் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தார்கள். ஆகையால் கிரிகரி, "அவர்கள் ஆங்கிள்கள் இல்லை; ஏஞ்சல்கள்", அதாவது ஆங்கிலக் குழந்தைகள் இல்லை,தேவர்கள் என்று கூறினர். பிறகு அவர்களுடைய

நாடான இங்கிலாந்தைப் பற்றித் தெரிந்து கொள்ள அவர் ஆசைப்பட்டார். இங்கிலாந்து என்பது வடக்குத் திசையில் மிகத் தொலேவிலிருந்த ஒரு தீவு என்றும், அங்கே வாழ்ந்த மக்கள் பல கடவுள்களே வணங்குபவர்கள் என்றும் கிரிகரி தெரிந்து கொண்டார். இது அவருக்குத் துயரத்தைக் கொடுத்தது. அந்தக் கணம் முதல் தாம் இங்கிலாந்துக்குப் போய்க் கிறிஸ்தவ மதத்தை அங்கிருந்த மக்களிடம் பரவச் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனல் அவர் இங்கிலாந்துக்குப் போக அவருடைய மடாதிபதி அனுமதிக்க வில்லே. கிரிகரி தம்முடைய மடத்துக்கு அவ்வளவு இன்றி யமையாதவராக ஆகிவிட்டார். கிரிகரி இத்தாலி தேசத்தி லேயே தங்க வேண்டியவர் ஆனர். ஆனல், என்றைக் காவது ஒருநாள் இங்கிலாந்துக்குப் போய்க் கிறிஸ்தவ மதப் பிரசாரம் செய்யவேண்டும் என்று உறுதி கொண்டார்.

கிரிகரி தங்கி இருந்த மடத்தின் மடாதிபதி இறந்ததும், கிரிகரி மடாதிபதியாக நியமிக்கப்பட்டார். சில ஆண்டுகள் கழித்து ரோமாபுரி போப் மரணம் அடைந்தார். உடனே எல்லா மடாதிபதிகளும் பிஷப்புகளுமாகச் சேர்ந்து கிரிகரி அடுத்த போப்பாக வேண்டும் என்று சொன்னர்கள். ஆனல் தம்முடைய மடத்தை விட்டுப்போக அவர் விரும்ப வில்லே. போப் ஆவதற்குத் தனக்குத் தகுதியே இல்லே என்று தாழ்மையுடன் அவர் சொன்னர்; மற்றவர்கள் வற்புறுத்தலி லிருந்து தப்புவதற்காக அவர் யாரிடமும் கூருமல் ஓடிப் போய்ச் சிறிது காலம் மறைந்தும் வாழ்ந்தார். ஆனல் கடைசியில் கிரிகரியை அவர்கள் கண்டுபிடித்துவிட்டார்கள்; உடனே அவரை விடாப்பிடியாகப் பிடித்துத் தூக்கிக் கொண்டு ரோமாபுரிக்குப் போனர்கள்; அங்கு அவரைப் போப்பாக்கி விட்டார்கள்.

இவ்விதம் கிரிகரி முதலாம் போப் கிரிகரியாக ஆகிவிட் டார். அப்பதவியில் அவர் பதினன்கு ஆண்டுகள் இருந்தார். அவர் கிறிஸ்தவச் சங்கத்தை நல்லமுறையில் நடத்தினர். ஆகையால் மக்கள் எல்லோரும் அவரைக் கிரிகரிப் பெரியார் என்று கொண்டாடினர்கள். கிறிஸ்தவ மக்கட்கெல்லாம் அவர் உண்மையில் தந்தையாக இருந்தார். சில சமயம்

கண்டிப்புள்ள தந்தையாகவும் இருந்தார். அவரே சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு வாழ்ந்தார்; மற்றவர்களும் அப்படியே வாழவேண்டும் என்று வற்புறுத்தினர். எந்தச் துறவியும், மதத்தலைவரும் சோம்பேறியாகவோ, கீழ்ப்படி யாதவராகவோ இருக்க அவர் விடவில்லை. அவர்கள் ஒழுங் காக நடந்துகொண்டு மக்களுக்கு வழிகாட்டிகளாக விளங்க வில்லை என்ருல், அவர்கள் தண்டிக்கப்பட வேண்டியவர்களே என்று அவர் சொன்னர். ஆலயங்களில் நடக்கும் பிரார்த் தனைகள், வழிபாடுகள் எல்லாம் அழகாகவும் ஒழுங்காகவும் இருக்கவேண்டும் என்று கிரிகரி கூறினர். ஆகவே, சில தோத்திரப் பாட்டுக்களுக்கு இசை அமைத்துக் கொடுத்தார். அவர் அமைத்த சில இசைகள் இன்றைக்கும் கிறிஸ்தவ ஆலயங்களில் பாடப் படுகின்றன. அவைகளுக்குக் "கிரிகரி யின் கீதங்கள்" என்று பெயர்.

கிரிகரி அடிக்கடி நோய்வாய்ப்பட்டார். நோயால் வருந் தும் போதும் அவர் தம்முடைய பணியை மறக்கவில்லை. உலகம் முழுவதிலும் மிகுந்த பிஷப்புகளுக்கும், கிறிஸ்தவத் துறவிகளுக்கும் கடிதங்கள் எழுதினர்; புத்திமதிகள் சொன் னர்; வேண்டிய உதவிகளைச் செய்தார். அவர் எழுதிய கடிதங்களில் பலவற்றை இன்றைக்கும் நாம் படிக்கமுடியும். சிலசமயம் மிகுந்த அல்லல்படும்போது, தம்முடைய காரிய தரிசிகளுக்குக் கடிதங்களை வாயால் சொல்லி எழுதி அனுப்புமாறு செய்வார். உலகத்தில் இருந்த கிறிஸ்தவ மத குருமார்கள் எல்லோரும் அவரைத் தகப்பனராகவே எண்ணி னர்கள்; தமக்குக் குழப்பம் உண்டானபோதும், தாம் துன் பத்தில் சிக்கிக் கொண்டபோதும் அவருடைய உதவியைக் கோரினர்கள். கிரிகரி அவர்களுக்குத் தேவையான உதவி களைச் செய்யத் தவறவே இல்லை.

கிறிஸ்தவ மதம் பரவாத இடங்களில் அதைப் பரவச் செய்வதில் கிரிகரி மிகுந்த அக்கரை காட்டினர். அவருடைய விருப்பத்தின்படிதான் கிறிஸ்தவக் குருமார் ரோமாபுரியில் இருந்து இங்கிலாந்துக்குப் போய்க் கிறிஸ்தவ மதத்தைப் பரவச் செய்தார்கள். கிரிகரி தாம் வாலிபராக இருந்த பொழுது கொண்ட ஆசையை இவ்வாறு முடிவுறச் செய்து

கொள்ள முடிந்தது. அவர் பல புத்தகங்களையும் எழுதியுள்ளார்; அவைகளில் கிறிஸ்தவர்கள் எந்தெந்த வழிகளில் எல்லாம் ஆண்டவனுக்குத் தொண்டு செய்ய முடியும் என்பதை விளக்கியுள்ளார்; கிறிஸ்தவர்களுக்கு அவை வழி காட்டும் புத்தகங்களாக விளங்குகின்றன. கிரிகரிக்குப் பின்னுல் பல போப்புகள் பதவி வகித்து விட்டார்கள். என்ருலும் அவரைப்போலப் பணி செய்தவர் வேறு எவருமே இல்லை என்று சொல்லுவது மிகையாகாது.

கிரிகரி அளவுக்கு மீறி உழைத்ததால் அவர் உடம்பு தளர்ந்துவிட்டது. அறுபத்து நான்கு வயதிலேயே அவர் மரணம் அடைந்து விட்டார். உலகம் முழுவதிலும் இருந்த கிறிஸ்தவர்கள் எல்லோரும் அவருடைய மரணத்துக்காகக் கண்ணீர்விட்டு வருந்தினர்கள். தந்தையினும் மிக்க நேசம் பாராட்டிய ஒருவரை இழந்துவிட்டதாகத் துயரெய்தினர்.

## 19. கான்டர்பரி ஆகஸ்டின் (மரணம் கி. பி. 604)

ஆகஸ்டின் என்பவர் போப் கிரிகரியால் கிறிஸ்தவ மதத்தைப் பரப்ப இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்ட பாதிரியார். அந்தக் காலத்தில் இங்கிலாந்து ஒரே அரசாக இல்லை; அது ஏழு சிறிய அரசுகளாகப் பிரிந்து இருந்தது; ஏழையும் ஏழு அரசர்கள் ஆண்டு வந்தார்கள். அவைகளில் ஒரு சில அரசுகளுக்கு ஏற்கெனவே கிறிஸ்தவ மதகுருமார்கள் சென்று மதப் பிரசாரம் செய்திருந்தார்கள். அவர்கள் எல்லாரும் அயர்லாந்தில் ஸெயின்ட் பாட்ரிக்கால் உண்டாக்கப்பட்ட ஐரிஷ் சங்கத்தைச் சேர்ந்தவர்கள். ஐரிஷ் சங்கம் மேற்கு ஸ்காட்லாந்து நாட்டுக்கு ஒரு கிறிஸ்தவக் குழுவை அனுப்பியது. அந்தக் குருவினர் ஐயோனு என்ற சிறிய தீவுக்கு வந்து சேர்ந்தார்கள்; அந்தத் தீவில் அவர்கள் ஒரு மடத்தைக் கட்டினுர்கள். அந்த மடத்திலிருந்து கிறிஸ்தவத் துறவிகள் ஸ்காட்லாந்து முழுவதும் சென்று மத போதனை செய்தார்கள். இங்கிலாந்தின் வட பகுதியிலும் அவர்கள் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பினுர்கள்.

ஆனால் இங்கிலாந்தின் தென் பகுதியில் கிறிஸ்தவ மதம் பரவ வில்லை. இங்கிலாந்தின் தென் பகுதிக்கு ஆகஸ்டின் பயணம் ஆனார்.

ஆகஸ்டின் ரோமாபுரிப் பட்டணத்தில் ஸெயின்ட் ஆண்ட்ரு என்ற துறவி மடத்திற்குத் தலைவராக இருந்தார். ஸெயின்ட் ஆண்ட்ரு மடம் போப் கிரிகரியால் நிறுவப்பட்டது. ஆகஸ்டினைப்பற்றிக் கிரிகரிக்கு நன்றாகத் தெரியும். ஆகையினாலேயே தெற்கு இங்கிலாந்தில் கிறிஸ்தவ மதத்தைப் பரப்புவதற்குச் சென்ற துறவிக் கூட்டத்திற்குக் கிரிகரி அவரைத் தலைவர் ஆக்கினார். ஆகஸ்டினும் அவரைச் சேர்ந்தவர்களும் நீண்டகாலம் பயணம் செய்தார்கள். ரோமாபுரியிலிருந்து கால் நடையாகவே நடந்து சென்றார்கள். ஐரோப்பாவிலேயே மிக உயரமான மலைகளான ஆல்ப்ஸ் மலைகளைத் தாண்டினார்கள். பிறகு பிரான்ஸ் நாட்டின் குறுக்காகப் பிரயாணம் செய்தார்கள். அப்பொழுது அவர்கள் சில செய்திகளைக் கேள்விப்பட்டார்கள். இங்கிலாந்தில் வாழ்ந்த இனத்தார்கள் கொடிய குணம் படைத்தவர்கள் என்றும், காட்டுமிராண்டிகள் என்றும் அவர்களுடைய செவிக்கு எட்டியது. இதைக் கேட்டு ஆகஸ்டினும், மற்றவர்களும் ஆச்சரியங்கொண்டார்கள். கடைசியில் அவர்கள் எல்லோரும் ரோமாபுரிக்கே திரும்பி வந்து இங்கிலாந்துக்குக் கிறிஸ்தவ மத குருமார்களை அனுப்புவது ஆபத்தானது என்றும் அந்த எண்ணத்தைக் கைவிட வேண்டும் என்றும் போப் கிரிகரியைக் கேட்டுக்கொண்டார்கள். ஆனால் கிரிகரி அவர்களுக்குத் தைரிய மூட்டினார். ஆண்டவன் அவர்களைக் காப்பாற்றுவார் என்று சொன்னார். அவர்கள் வீணாகப் பயப்படுகிறார்கள் என்று கூறி மறுபடியும் இங்கிலாந்துக்குப் போகும்படி அனுப்பினார். ஆகஸ்டினும் மற்றவர்களும் மறுபடியும் இங்கிலாந்தை நோக்கிப்பயணம் ஆனார்கள்.

அவர்கள் முதலில் தென் கிழக்கு இங்கிலாந்தில் கென்ட் என்ற இராச்சியத்துக்குப் போவது என்று தீர்மானித்துக் கொண்டார்கள். அதை ஆண்ட அரசனைப் பற்றித்தான் அவர்களுக்குச் சிறிது தெரிந்திருந்தது. கென்ட் இராச்சியத்தின் அரசனுடைய பெயர் எதல்பர்ட் என்பது. அவன் புறச்சமயத்தான். ஆனால் அவன் ஒரு கிறிஸ்தவப் பெண்ணை மணம் செய்து

கொண்டிருந்தான். அவளுடைய பெயர் பர்த்தா என்பது. அவள் பிரான்ஸ் நாட்டு அரச குமாரி. அவள் கணவன் வீட்டுக்கு வந்தபோது, ஒரு கிறிஸ்தவ மத குருவையும் அழைத்துக்கொண்டு வந்தாள். எதல்பர்ட் அதற்கு அவளை அனுமதித்தான். கென்ட் இராச்சியத்திற்குக் கான்டர்பரி என்பது தலை நகரம். அந்தப் பட்டணத்திற்குப் பக்கத்தில் பர்த்தா ஒரு சிறிய கிறிஸ்தவாலயத்தைக் கட்டினுள். அவளும், அவளோடு வந்த கிறிஸ்தவப் பெண்களும் அங்குச் சென்று ஆண்டவனை வணங்கிவந்தார்கள்.

கென்ட் இராச்சியத்தின் கடல்கரையிலிருந்து சிறிது தொலைவில் தானெட் என்ற ஒரு தீவு உள்ளது. ஆகஸ்டினும் அவருடைய நண்பர்களும் அந்தத் தீவில் இறங்கினுர்கள்.



அங்கிருந்துகொண்டே தங்களை வந்து பார்க்குமாறு எதல் பர்ட் அரசனுக்கு ஆள் அனுப்பினுர்கள். ஆகஸ்டினைப் போய் வரவேற்குமாறு எதல்பர்ட்டை அவளுடைய மனைவி வேண்டினுள். ஆனல் அவனுடைய குருமார்கள் அவனை ஆகஸ்டினிடம் போகவேண்டாம் என்று சொன்னுர்கள். “ரோமாபுரியிலிருந்து வந்திருக்கிறவர்கள் மந்திர தந்திரங்களில் வல்லவர்

கள். உங்களுக்கு எதிராக அவர்கள் தங்களுடைய மந்திரங்களைப் பிரயோகிப்பார்கள். ஆகையால் நீங்கள் அவர்களை அழைக்கப்போவது விரும்பத்தக்கதல்ல. அப்படி அழைக்கப் போனாலும், அவர்களுக்கு ஒரு விட்டுக்குள் வரவேற்பு கொடுக்கக் கூடாது,'' என்று அந்தக் குருமார்கள் எதல்பர்ட்டுக்குச் சொன்னார்கள். எதல்பர்ட்டும், பர்த்தாவும் ஆகஸ்டினைச் சந்திக்கத் தானெட் தீவுக்கு வந்தார்கள். ஒரு பெரிய மரத்தின் நிழலில் இரண்டு அரியாசனங்களைப் போட்டுக்கொண்டு அவற்றின் மேல் அமர்ந்திருந்தார்கள். அரசனும் மற்றவர்களும் சமாதானத்தைக் குறிக்கும் ஆடைகளை அணிந்திருந்தார்கள்.

ஆகஸ்டினும், அவருடைய துறவிகளும் அரசனைக் காணக் காலால் நடந்தே வந்தார்கள். அவர்கள் வெள்ளியால் ஆன ஒரு சிலுவையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு வந்தார்கள். நடந்து வந்தபோது, ஒரு கிறிஸ்தவத் தோத்திரப் பாடலைப் பாடிக்கொண்டு வந்தார்கள். ஆகஸ்டின் எதல்பர்ட் அரசனுக்கு வணக்கம் தெரிவித்தார். அரசனும் அவரை வரவேற்றான். பிறகு ஆகஸ்டின் தாம் வந்த காரணத்தை அவனுக்குத் தெரிவித்தார். கென்ட் இராச்சியத்தில் கிறிஸ்தவ மதத்தைப் பரவச் செய்ய வந்ததாக அவர் கூறினார். ஆகஸ்டின் சொன்னவைகளை யெல்லாம் எதல்பர்ட் காது கொடுத்துக் கேட்டான். பிறகு அவன் அவரைப் பார்த்து, ''உங்களுடைய வார்த்தைகள் நியாயமானவை; இருந்தாலும் நீங்கள் சொல்லுவது புதிதாக இருக்கிறது. உடனடியாக நான் என்னுடைய பழைய மதத்திலிருந்து விலக முடியாது,'' என்று சொன்னான். என்றாலும் அவன் கிறிஸ்தவத் துறவிகளிடம் அன்பாக நடந்து கொண்டான். அவர்கள் தன்னுடைய இராச்சியத்தில் தங்கியிருக்கவும், தன்னுடைய மக்களிடத்தில் கிறிஸ்தவ மத போதனை செய்யவும் அனுமதித்தான். தன்னுடைய மக்களில் கிறிஸ்தவ மதத்துக்கு மாற விரும்புகின்றவர்களை மாற்றிக் கொள்ளும்படியும் கூறினான்.

ஆகஸ்டினும் அவருடைய நண்பர்களும், கான்டர்பரிக்கு வந்து தங்கினார்கள். அவர்கள் தூய வாழ்க்கை நடத்தினார்கள். அவர்களிடம் சிறிதும் சுய நலம் தென்படவில்லை.

அதனுல் கென்ட் மக்கள் எல்லோரும் அவர்களை நேசித்தார்கள். அவர்கள் சொன்னவற்றைக் கவனித்துக் கேட்டார்கள். விரைவில் கென்ட் இராச்சியத்தில் ஒரு கிறிஸ்தவக் கூட்டம் உருவானது. எதல்பர்ட் அரசன் ஆகஸ்டினையும், மற்றக் குருமார்களையும் கூர்ந்து கவனித்துக்கொண்டு வந்தான். அவர்களுடைய வாழ்க்கையிலிருந்து கிறிஸ்தவ மதத்தின் மேன்மையை எடை போட்டான். ஓர் ஆண்டிற்குப் பிறகு அவனே ஆகஸ்டினிடம் வந்து தனக்கு ஞானஸ்நானம் செய்யும்படி கேட்டுக்கொண்டான். இதன் பின் வெகு விரைவிலேயே கென்ட் இராச்சியம் முழுவதும் கிறிஸ்தவ நாடாகிவிட்டது.

ஆகஸ்டினுடைய செயல்களையெல்லாம் போப் கிரிகரி கேள்விப்பட்டார். மிகுந்த உவகை அடைந்தார். ஆகஸ்டினை ஒரு பிஷப் ஆக்கினுர். சிறிது காலம் சென்ற பின் ஆகஸ்டின் கான்டர்பரியின் முதல் ஆர்ச்பிஷப்பாகவும் ஆனுர். கிரிகரி ஆகஸ்டினுக்குத் துணையாக இருக்க இன்னும் பல துறவிகளையும் அனுப்பினுர். கிறிஸ்தவக் குருமார்கள் கென்ட் இராச்சியத்திலிருந்து புறப்பட்டு இங்கிலாந்தின் மற்ற இராச்சியங்களுக்கும் போனுர்கள். அங்கெல்லாம் கிறிஸ்தவ மதத்தை மக்களுக்குப் போதித்தார்கள்.

அயர்லாந்தில் இருந்துவந்த கிறிஸ்தவக் குருமார்களின் போதனைக்கும் ஆகஸ்டினும் அவருடைய நண்பர்களும் போதித்த போதனைகளுக்கும் இடையே சில வேறுபாடுகள் இருந்தன. இந்த இரண்டு குழுக்களையும் எதல்பர்ட் ஒன்ருக இணைக்கவேண்டும் என்று விரும்பினுன். ஆகையால் ஆகஸ்டினை வந்து சந்திக்குமாறு ஐரிஷ் பிஷப்புக்களை அவன் கேட்டுக்கொண்டான். இப்படிச் சந்தித்துப் பேசினுல் ஒரு தீர்வு காண முடியும் என்பது அவனுடைய எண்ணம். ஆனுல் ஐரிஷ் பிஷப்புக்கள் தற்பெருமை உடையவர்களாக இருந்தார்கள்; அவர்கள் தங்களுடைய பழைய வழியை விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. அவர்கள் ஒரு புனிதரிடம் சென்று யோசனை கேட்டார்கள்; அந்தப் புனிதர் அவர்களைப் பார்த்து ஒரு நல்ல புத்திமதியைச் சொன்னுர்; அவர் அவர்களை நோக்கி, "'நான் மெலிந்தவனுகவும் எளிய நோக்குடையவனுகவும் இருக்கிறேன்' என்று இயேசு சொன்னுர். ரோமாபுரியி

லிருந்து வந்த இந்த மனிதர் தற்பெருமை உடையவராகவும், மரியாதை தெரியாதவராகவும் இருந்தால், அவர் கடவுள் கொள்கைக்கு வேருனவர்,'' என்று சொன்னுர். ஆகவே, ஆகஸ்டினும் அவருடைய குழுவினரும் சந்திப்பிற்கான இடத்துக்கு முதலில் வந்து சேரவேண்டும் என்று ஐரிஷ் பிஷப்புக்கள் கூறினுர்கள்; பிறகு, தாங்கள் செல்லும்பொழுது, ஆகஸ்டின் எழுந்திருந்து வரவேற்ருல், அவர் இயேசு கிறிஸ்துவின் தொண்டர் என்று நினைத்து அவர் சொல்வதைக் கேட்பது என்று முடிவு செய்து கொண்டார்கள். ஆகஸ்டின் தங்களை எழுந்து வரவேற்கவில்லை என்ருல், அவரைத் தற்பெருமை உடையவராக எண்ணித் தங்கள் கொள்கைகளை விட்டுக் கொடுக்கக்கூடாது என்றும் தீர்மானித்தார்கள். பிறகு ஆகஸ்டினைச் சந்திக்க ஐரிஷ் பிஷப்புக்கள் வந்தார்கள்; துரதிருஷ்டவசமாக அவர்களை ஆகஸ்டின் எழுந்து நின்று வரவேற்கவில்லை. ஆகையால், இருதரத்தார் பேச்சும் வெற்றி பெருமல் தோல்வியில் முடிந்தது. அதன் விளைவாக ஆங்கிலக் கிறிஸ்தவர்கள் நெடுங்காலமாக இரண்டு பிரிவாகப் பிரிந்து வாழ்ந்தார்கள்.

ஆகஸ்டின் இங்கிலாந்தில் ஏழாண்டுகள் பணிபுரிந்தார். அவர் இறப்பதற்கு முன்னுல், தென் இங்கிலாந்தின் பெரும் பகுதி கிறிஸ்தவ நாடாகிவிட்டது. அவருக்குக் கீழே இரண்டு பிஷப்புக்கள் வேலை செய்தார்கள். அவர்கள் லண்டன் பிஷப்பும், ராசெஸ்டர் பிஷப்பும் ஆவர். ஆகஸ்டின் கான்டர்பரியில் அவருடைய சொந்த ஆலயத்திலேயே அடக்கம் செய்யப்பட்டார். அவருடைய கல்லறையின் மேல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது. "இங்கே கான்டர்பரியின் முதல் ஆர்ச்பிஷப்பான ஆகஸ்டின் பிரபு உறங்குகிருர்; அவர் ரோமாபுரி போப்பான கிரிகரியால் இங்கு அனுப்பப்பட்டவர்; கடவுள் அருளால் அவர் எதல்பர்ட் அரசனையும் அவன் மக்களையும் விக்கிரக வழிபாட்டிலிருந்து கிறிஸ்தவ மதத்துக்கு மாற்றினுர்."

## 20. சார்லஸ் (கி. பி. 792-814)

முன் அத்தியாயத்தில் கென்ட் அரசன், எதல்பர்ட்டை மணந்த பர்த்தா என்ற அரசகுமாரியைப்பற்றிப் படித்தோம். அவள் பிராங்குகள் என்ற இனத்தாரைச் சேர்ந்தவள்.

ஐரோப்பாக் கண்டத்தில் பிரான்ஸ் என்ற ஒரு நாடு இருக்கிறது. அங்குப் பழைய காலத்தில் பிராங்குகள் என்ற இனத்தார் வாழ்ந்து வந்தனர். அதனாலேயே அந்த நாட்டிற்குப் பிரான்ஸ் என்ற பெயர் வந்தது. பிராங்குகள் முதலில் பல விக்கிரகங்களை வணங்கி வந்தார்கள். அவர்கள் வேறு சில இனத்தார்களுடன் சேர்ந்துகொண்டு ரோமாபுரி இராச்சியத்தைத் தாக்கினார்கள். அந்த இராச்சியத்தின் செழிப்பான பகுதிகளைப் பிடித்துக் கொள்ள முயற்சி செய்தார்கள். பிராங்குகள் சிறந்த போர் வீரர்கள். ஒரு சமயம் குளோவிஸ் என்ற புகழ் பெற்ற ஓர் அரசர் அவர்களை ஆண்டு வந்தார். அவருடைய தலைமையின் கீழ் பிராங்குகள் ரோமாபுரி சாம்ராச்சியத்தின் பல பகுதிகளைக் கைப்பற்றினார்கள். குளோவிஸ் அரசராக இருந்தபோதுதான் பிராங்குகள் கிறிஸ்தவர்களாக மாறினார்கள். குளோவிஸ் தம் நாட்டு எல்லைகளில் வாழ்ந்து வந்த சில புற மதத்தாரை வெல்ல விரும்பினார்; அவர்களை எல்லாம் கிறிஸ்தவ மதத்துக்கு மாற்ற வேண்டும் என்பதே அவருடைய அவா.

குளோவிஸின் மரணத்திற்குப்பின் ஆண்ட அரசர்கள் அவ்வளவு திறமை வாய்ந்தவர்கள் அல்லர். அவர்கள் திண்மையற்றவர்களாகவும் சோம்பேறிகளாகவும் இருந்தனர். அவர்கள் தம் நாட்டின் ஆட்சிப்பொறுப்பைச் சிறிது சிறிதாகத் தம் தலைவர்களிடம் ஒப்படைத்து விட்டார்கள். இறுதியில் அவர்கள் அரண்மனையில் அடைந்து கிடந்தனரேயன்றி அர்களால் மக்களுக்கு யாதொரு பயனுமில்லாமல் போய் விட்டது. ஆகவே, அவர்களை மக்கள் வெறுக்க ஆரம்பித்தனர். தங்களுடைய தலைவர்களுக்குள்ளே திறமையும் திண்மையுமுள்ள ஒருவரை அரசர் ஆக்கிக்கொள்ள முடிவு செய்தார்கள். அதன்படி சார்லஸ் என்ற தலைவரை அரசர்

9

ஆக்கினார்கள். அவர் மிகச் சிறந்த அரசராக விளங்கினார்; பகைவர்களிடமிருந்து தம்முடைய மக்களைத் திறமையுடன் பாதுகாத்தார். அவருடைய மகன் பெயரும் சார்லஸ் என்பதே. இவர் தம்முடைய தகப்பனாரைவிடப் பலவிதத்தில் மேலாக விளங்கினார். ஆகையால் அவர் 'பேரரசர் சார்லஸ்' என்று அழைக்கப்பட்டார்.

பேரரசர் சார்லஸ் ஒரு சிறந்த மனிதர்; அவருடைய மக்கள் அவர் தங்களுக்கு அரசராக இருப்பதைப் பற்றிப் பெருமிதம் அடைந்தார்கள். அவர் அளவுக்கு அதிகமான உயரமாகவும், பலம் பொருந்தியவராகவும் இருந்தார். ஒரு பலசாலியான மனிதனை அவர் ஒரே அறையில் கீழே வீழ்த்தி விடுவாராம். அவர் சினமடையும் பொழுது அவருடைய கண்கள் கோவைப் பழம்போலச் சிவந்துவிடும். தீயைக் கக்கும். ஆகையால் தவறு செய்தவர்கள் அவர் முன்னால் வருவதற்கே நடுங்குவார்கள்.

சார்லஸ் ஒரு பெரிய வீரர்; அவருடைய ஆட்சியில் பல போர்கள் நடைபெற்றன. அவருடைய நாட்டின் எல்லையில், இப்பொழுது ஜெர்மனி என்று வழங்கப்படும் பகுதியில் சாக்ஸன்கள் என்ற கொடிய இனத்தார் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் பிராங்குகளின் நாட்டை அடிக்கடி தாக்கி வந்தார்கள்; பிடிபட்ட பிராங்குகளைத் தூக்கிக் கொண்டுபோய் அடிமை ஆக்கிவந்தனர். சாக்ஸன்களை வென்று தம்முடைய ஆட்சியின் கீழ் அவர்களைக் கொண்டுவர வேண்டும் என்று சார்லஸ் முடிவுசெய்து கொண்டார். சாக்ஸன்களைக் கிறிஸ்தவர்கள் ஆக்கிவிடவேண்டும் என்றும் அவர் அவாவுற்றார். இக்கனவுகளையெல்லாம் நனவாக்க அவருக்குப் பல ஆண்டுகள் பிடித்தன. சாக்ஸன்கள் அவரை எதிர்த்து மிகுந்த வீரத்தோடு சண்டை செய்தார்கள். ஆனால் கடைசியில் தோற்றுப் பணிந்துவிட்டார்கள். சார்லஸ் அவர்களுடைய நாட்டைத் தம்முடைய இராச்சியத்துடன் சேர்த்துக் கொண்டார். சாக்ஸன்களுக்குப் பட்டணங்களோ, ஆலயங்களோ கிடையா. காடுகளில் விலங்குகளை வேட்டையாடி வாழ்க்கை நடத்தினார்கள்; அடிக்கடி பக்கத்தில் வாழ்ந்த இனத்தார்களைத் தாக்கி அவர்களுடைய ஆடுமாடுகளையும் தானியங்களையும் கொள்ளை

யடித்தார்கள். சார்லஸ் அவர்களை யெல்லாம் ஓரிடத்தில் நிலையாக வாழும்படி செய்தார். அவர்களுக்குத் தேவையான சட்ட திட்டங்களை ஏற்படுத்தினர். முதலில் சாக்ஸன்கள் சார்லஸைக் கொடுமையானவர் என்று நினைத்த போதிலும் நாளடைவில் தாங்கள் சந்தோஷமாகவும், நல்ல வசதிகளுடனும் வாழ்வதை நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டார்கள். சார்லஸ் தங்களுக்கு அரசராக வந்தது தங்களுடைய நற்பேறு என்று நினைத்தார்கள். கிறிஸ்தவ மதத்தைப் போதனை செய்ய அவர் குருமார்களைச் சாக்ஸன்களிடம் அனுப்பினர். சாக்ஸனி தேசத்தில் பல அழகான ஆலயங்களையும் கட்டினர். கடைசியில் சாக்ஸனி கிறிஸ்தவ நாடாக ஆனது. சாக்ஸன் சாதியார் தங்களுடைய கொடிய பழக்க வழக்கங்களை எல்லாம் விட்டு விட்டார்கள்.

சார்லஸ் தம்முடைய சேனைகளை ஆல்ப்ஸ் மலைகளின்மேல் நடத்திக்கொண்டு போனர். வடக்கு இத்தாலி தேசத்தை அடைந்து அதைக் கைப்பற்றினர். அந்தப் பகுதியில் வசித்த மக்களை ஹூணர் என்ற கொடிய சாதியார் ஈவு இரக்கம் இன்றித் துன்புறுத்தி வந்தனர். ஹூணர்கள் கீழ் திசையிலிருந்து வந்தவர்கள். அவர்கள் குதிரையின்மேல் காற்றுப் பொலப் பறந்து செல்வார்கள்; கிராமங்களைக் கொளுத்தியும், மக்களைக் கொன்றும் கொள்ளையடிப்பார்கள்; மக்கள் எல்லாம் ஹூணர்களைக் கண்டு நடுங்கினர்கள். சார்லஸ் இத்தகைய கொடிய ஹூணர்களையும் தோற்று ஓடச்செய்தார். இதனல் அவரது அரசு வலுத்துப் பெருகியது.

அந்தக் காலத்தில் ரோம சாம்ராச்சியத்துக்குச் சக்கரவர்த்தியே இல்லை. ஆகையால் ஐரோப்பாவுக்குத் தலைவர் இல்லாமல் போய்விட்டது. போப் இன்னும் ரோமாபுரியிலேயே வசித்து வந்தார். சக்கரவர்த்தி இல்லாமல் இருப்பது நல்லதன்று என்று அவர் எண்ணினர். சார்லஸ் ஒரு பெரிய அரசர் என்பதும், கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்தவர் என்பதும் போப்புக்குத் தெரியும். சார்லஸ் பலசாலியாக இருந்ததோடு அறிவாளியாகவும் இருந்தார் என்பதையும் போப் அறிவார். மேலும் சார்லஸ் போப்புக்கு நெருங்கிய நண்பருங்கூட; போப்புக்கு வேண்டிய உதவிகளை எல்லாம் செய்துவந்தார்.

ஆகையால் சார்லஸையே சக்கரவர்த்தி ஆக்குவது என்று போப் முடிவு செய்தார். கி.பி. 800 இல் கிறிஸ்துமஸ் தினத் தன்று சார்லஸ் ரோமாபுரியில் இருந்தார். போப்பினுடைய பெரிய ஆலயமான செயின்ட் பீட்டர்ஸ் ஆலயத்தில் ஆண்ட வனைப் பிரார்த்திக்க மற்றவர்களுடன் சார்லஸும் போனார். சார்லஸைப்பற்றி ரோமாபுரி மக்கள் ஏற்கெனவே கேள்விப் பட்டிருந்தார்கள். ஆகையால் அவரைப் பார்ப்பதற்காக ஆலயத்தில் திரள் திரளாக வந்து கூடி இருந்தார்கள். பிரார்த் தனை எல்லாம் முடிந்தவுடன் மக்கள் நினைத்ததுபோல அவர் வெளியே போகவில்லை. தம்முடைய இடத்திலேயே முழங் கால் மண்டியிட்டு ஆண்டவனைப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது சார்லஸ் இருந்த இடத்துக் குப் போப் வந்தார்; வந்து சார்லஸின் தலையில் ரோமாபுரிச் சக்கரவர்த்திக்கு உரிய கிரீடத்தைச் சூட்டினார். உடனே



மக்கள் எல்லோரும் எழுந்து நின்றார்கள். "வாழ்க சார்லஸ் சக்கரவர்த்தி!" என்று வாழ்த்தினார்கள். எல்லாருடைய முகத்திலும் பூரிப்புத் தாண்டவமாடியது.

சார்லஸ் சிறந்த வீரர் மட்டுமல்லர்; அறிவுள்ள அரசராக வும் விளங்கினார். தம்முடைய மக்களின் வாழ்க்கை அமைதி

யுடனிருந்தால்தான் அவர்கள் உவகையுடனும் வசதியாக வும் வாழமுடியும் என்று அவர் எண்ணினர். ஆகையால் அவர் தம்முடைய இராச்சியத்தைப் பல மாவட்டங்களாகப் பிரித்தார். ஒவ்வொரு மாவட்டத்தையும் ஆள்வதற்கு நம்பிக்கையான ஒருவரை நியமித்தார். அப்படி நியமிக்கப்பட்ட வர்களுக்குக் கௌன்ட்டுகள் என்று பெயர். வரி வசூல் செய்வதும் மக்களின் நன்மைகளைக் கண்காணிப்பதும் கௌன்ட்டுகளுடைய அலுவல்கள். சில கௌன்ட்டுகள் தலைநகரத்திலிருந்து வெகு தொலைவில் இருந்தார்கள். ஆகையால் அவர்களுடைய நடவடிக்கைகளைப் பற்றியும் ஆட்சியைப் பற்றியும் அறிந்து தெரிவிக்க சார்லஸ் சிலரை அனுப்பினர். இவர்கள் இரண்டு இரண்டு பேராகச் சேர்ந்து இராச்சியம் முழுவதும் பயணம் செய்வார்கள் ; மக்கள் இவர்களிடம் தங்கள் குறைகளைத் தெரிவித்துக் கொண்டால், சார்லஸ் அவர்களின் மூலம் கேட்டு, வேண்டியவற்றைச் செய்து குறைகளைப் போக்குவார். கிறிஸ்தவ மத குருமார்களும் தங்களுடைய கடமைகளைச் சரிவரச் செய்கிறார்களா என்றும், ஒழுங்கான வாழ்க்கையை நடத்துகிறார்களா என்றும் சார்லஸ் தம் ஆட்கள் மூலம் கண்காணித்து வந்தார். யாராவது தவறான வாழ்க்கை நடத்துகிறார் என்று தெரிந்தால் சார்லஸ் அவரை உடனே வேலையிலிருந்து நீக்கிவிடுவார் ; வேறு நல்ல குருவை அந்தப் பதவிக்கு நியமிப்பார்.

தம்முடைய இராச்சியத்தில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள சார்லஸ் இராச்சியம் முழுவதும் பிரயாணம் செய்தார். அப்படிப் போகும்போது ஒரு பேரரசருக்கு உரிய படாடோபங்களோடு அவர் போகமாட்டார். அதற்கு மாறாகச் சில வீரர்களை மட்டும் அழைத்துக்கொண்டு குதிரைமேல் சவாரி செய்வார். உடையிலும் பகட்டு இருக்காது ; இடுப்பில் ஒரு தோல் உடை ; மேலே நீல நிறச் சட்டை ; அவ்வளவுதான் அவர் உடுப்பு. யாராவது அவரைக் காண விரும்பினால் அவர்கள் தடையில்லாமல் அவரிடம் வந்து பேசவேண்டியதைப் பேசலாம்.

சார்லஸ் படித்தவர் இல்லை. சரியாக எழுதக்கூட அவருக்குத் தெரியாது. ஒவ்வொரு நாளும் படுக்கைக்குப் போகும்

போது அவர் பலகையையும் எழுதுகோலையும் எடுத்துக் கொண்டு போவார்; இரவில் விழித்துக் கொள்ளும்போது எழுத்துக்களை எழுதிப் பழகுவார்; ஆனாலும் கடைசிவரை அவருடைய முரட்டுக் கைகளுக்குச் சரியாகவே எழுத வரவில்லை. இருந்தாலும் அவர் கல்வியை வெகுவாகப் போற்றினார். தம்முடைய மக்கள் எல்லாம் படித்தவர்களாக இருக்க வேண்டும் என்று பல பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினார். அவர் தம்மைச் சுற்றிப் பல படிப்பாளிகளை வைத்துக் கொண்டார். அவர்களில் ஒரு படிப்பாளி ஆல்க்வின் என்ற ஆங்கிலேயர். சார்லஸின் அழைப்பின் பேரில் அவர் இங்கிலாந்தில் யார்க் என்ற பட்டணத்திலிருந்து வந்து சேர்ந்தார். சார்லஸின் மைந்தர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்ததுடன், அவர் பள்ளிக்கூடம் நடத்தும் விதத்தைப் பற்றியும் சார்லஸுக்கு வழிகாட்டினார். சார்லஸ் தம்முடைய பயணங்களின் போது பள்ளிக்கூடங்களுக்கும் விஜயம் செய்வது வழக்கம். ஒருமுறை அவர் பல தலைவர்களுடைய மைந்தர்கள் படிக்கின்ற ஒரு பள்ளிக்கூடத்திற்கு போனார். அந்தச் சிறுவர்கள் தாம் செல்வக் குடும்பத்தில் பிறந்தவர்கள் என்ற நினைப்பில் சரியாகப் படிக்காமல் சோம்பேறிகளாக வாழ்ந்தார்கள். இதைக் கண்டவுடன் சார்லஸுக்கு மிகுத்த கோபம் உண்டானது. சோம்பேறியாக உள்ளவர்களைக் கண்டால் அவர்கள் யாருக்குப் பிறந்தவர்களாக இருந்தாலும் தமக்குச் சிறிது கூடப் பிடிக்காது என்று அவர் கோபத்தோடு கூறினார்.

சார்லஸ் நீண்ட காலம் உயிர் வாழ்ந்தார். அவருடைய பெயரும் புகழும் உலகெங்கும் பரவின. அவரைப் பார்க்க உலகின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் வந்தார்கள்; வேறு பலர் அவருக்குப் பல அன்புக் காணிக்கைகளை அனுப்பினார்கள். தொலை தூரத்திலிருந்த அரேபியா முதலிய நாடுகளிலிருந்தும் அவரைக் காண மக்கள் வந்தனர். அவர்கள் பளபளப்பான பட்டுக்களையும், இலேசான மஸ்லின் துணிகளையும் சார்லஸுக்குக் காணிக்கையாகக் கொடுத்தார்கள். அவர்கள் வெள்ளைக் காகிதச் சுருள்களையும் அவருக்குக் கொடுத்தார்கள். அந்தக் காலத்தில் ஐரோப்பாவில்

காகிதத்தைப் பற்றியே தெரியாது. சார்லஸுக்கு ஒரு யானையையும் அரேபியர்கள் கொடுத்தார்கள். அவருக்கு வந்த அன்புக் காணிக்கைகள் யாவற்றிலும் சிறந்தது ஓர் அழகான கடிகாரம்தான். ஐரோப்பாவுக்கு வந்த முதல் கடிகாரம் அதுவே ஆகும். சார்லஸ் அதைத் தம்முடைய அரண்மனையில் வைத்துக் கொண்டார்; அதுமுதல் சூரியனைப் பார்த்து நேரத்தைக் கணக்கிடும் தொல்லை ஒழிந்தது.

சார்லஸ் இருபத்திரண்டு ஆண்டுக் காலம் அரசராக இருந்தார். அவர் மரணம் அடைந்தபோது மக்களெல்லோரும் மிகுந்த துயரத்தை அடைந்தார்கள். சார்லஸ் இறந்த பிறகு, மக்கள் அவரைப்பற்றிப் பல கதைகள் சொல்லத் தொடங்கினர். மறுபடியும் சார்லஸ் உயிரோடு திரும்பி வருவார் என்றும் நம்பினார்கள். அவர் இறக்கவே இல்லை என்று ஒரு கதை கூறுகிறது. அவர் தம்முடைய அரண்மனையில் பூமிக்கு அடியில், அரியாசனத்தில் அமர்ந்து தூங்கிக் கொண்டு இருக்கிறாரென்றது. அவருடைய தாடி மட்டும் நீளமாக வளர்ந்துகொண்டே வருகிறதென்றும் அவருக்கு முன்னால் இருந்த கல் மேஜையை மூன்று முறை சுற்றும் அளவுக்கு அவருடைய தாடி வளர்ந்து விட்டால் அவர் மறுபடியும் விழித்து எழுந்து விடுவாரென்றும், அப்போது உலகம் இறுதி ஆகிவிடும் என்றும் அக்கதை கூறுகிறது.

## 21. ரோலண்ட்

பேரரசர் சார்லஸைப் பற்றியும், அவருடைய போர் வீரர்களைப் பற்றியும் பல கதைகள் உண்டு. அந்தக் கதைகள் எல்லாவற்றிலும் அவருடைய மருமகன் ரோலண்டின் கதை இனிமையானது.

பேரரசர் சார்லஸுக்கு ஒரு சகோதரி இருந்தாள். அவளை ஒரு போர்வீரன் இரகசியமாகக் கலியாணம் செய்து கொண்டான். அவர்கள் இருவருக்கும் பிறந்தவரே ரோலண்ட். தம்

மகளுடைய இரகசியத் திருமணத்தைப் பற்றிப் பேரரசர் சார்லஸின் தகப்பனுர் கேள்விப்பட்டார். அவருக்குப் பொல்லாத கோபம் உண்டாயிற்று. தம்பதிகள் இரண்டு பேரையும் பிராங்கு இராச்சியத்திலிருந்து விரட்டி விட்டார். அந்தத் தம்பதிகளுக்குச் சொந்தமாக இருந்த சொத்துக்களை எல்லாம் பறிமுதல் செய்துவிட்டார். தம்பதிகள் இரண்டு பேரும் பிச்சை எடுத்து வாழ்ந்து வந்தார்கள். குடியிருப்பதற்கு ஒரு வீடு கட்டிக்கொள்ளவும் அவர்களால் முடியவில்லை. ஆகையால் அவர்கள் இத்தாலி தேசத்தில் ஸூட்ரி என்ற இடத்தில் ஒரு குகையைக் கண்டார்கள். அதையே தங்களுடைய வீடாக எண்ணி வாழ்ந்து வந்தார்கள். அங்குதான் ரோலண்ட் அவர்களுக்குப் பிறந்தார். ரோலண்ட் பலசாலியாகவும் புத்திசாலியாகவும் வளர்ந்தார். அவருடைய பெற்றோர்கள் மிகவும் ஏழையாக இருந்ததால் ரோலண்ட் கந்தைகளைக் கட்டிக் கொண்டு திரிந்தார். உண்பதற்கு உணவும் இல்லாமல் அவரும் அவருடைய பெற்றோரும் பட்டினியாகவும் இருந்தார்கள்.

ரோலண்டுக்குத் தம்முடைய தாய் தகப்பனுரிடம் மிகுந்த ஆசை உண்டு. அவர்கள் படும் துன்பங்களைக் கண்டு அவர் மனமுருகுவார். எப்படியாவது தாம் அவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று ரோலண்ட் நினைத்தார். ஒருநாள் அவர் ஒரு செய்தி கேள்விப்பட்டார். அவருடைய தாய் மாமனுன பேரரசர் சார்லஸ் இத்தாலியில் இருப்பதாகவும், அவர் ஸூட்ரி வழியாகப் பிரயாணம் செய்யப் போவதாகவும் அறிந்தார். பேரரசர் சார்லஸுக்கு ஸூட்ரி மக்கள் ஒரு பெரிய விருந்து ஏற்பாடு செய்தார்கள். தம்முடைய தாய் மாமனை எப்படியாவது சந்தித்துத் தம்முடைய பெற்றோருக்கு உதவி செய்யும்படி கேட்டுவிடுவது என்று ரோலண்ட் தீர்மானம் செய்துகொண்டார். அவர் விருந்து நடக்க இருந்த இடத்துக்குப் போனுர். அங்கு விருந்துக்காக வகை வகையான பணியாரங்கள் செய்யப்படுவதைக் கண்டார். அம்மாதிரியான பணியார வகைகளை அவர் இதற்குமுன் அவருடைய வாழ்க்கையில் பார்த்ததே இல்லை. அவர் நாக்கில் தண்ணீர் ஊறியது. தாம் வந்த வேலையை முழுவ

தும் மறந்துவிட்டார். காவல்காரர்கள் கொஞ்சம் அசந்த சமயம் பார்த்து அவர் உள்ளே நுழைந்துவிட்டார். தம்மால் தூக்கிக்கொண்டு போகும் அளவுக்குப் பணியாரங்களைத் திருடி மூட்டை கட்டிக்கொண்டார். அதை எடுத்துக் கொண்டு தம்முடைய தாய் தகப்பன் வசித்து வந்த குகையை நோக்கி ஓட்டம் பிடித்தார். ரோலண்ட் பணியாரங்களைத் திருடிக்கொண்டு ஓடுவதைக் காவல்காரர்கள் பார்த்து விட்டார்கள். உடனே மூன்று வீரர்கள் அவரைத் துரத்திக் கொண்டே குகைக்கு வந்து சேர்த்தார்கள். ரோலண்டின் தாயார் அந்த மூன்று வீரர்களையும் பார்த்து மிகவும் பயந்து விட்டார். வெளியில் வந்து அந்த வீரர்களைச் சந்தித்தார். தைரியத்தோடு தாம் யார் என்பதையும், ரோலண்ட் பணியா ரங்களைத் திருடிய காரணத்தையும் அவர்களுக்கு எடுத்துச் சொன்னார். அவர் பேரரசர் சார்லஸின் சகோதரி என்று அறிந்ததும் வந்த வீரர்கள் மிகவும் வருத்தப்பட்டார்கள். அவர்கள் சார்லஸிடம் எல்லாவற்றையும் சொல்லி ரோலண்டை மன்னிக்க வேண்டுமெனக் கூறினார்கள்.

தம்முடைய சகோதரியைக் கண்டுபிடித்து விட்டோம் என்று சார்லஸ் பேரரசர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். ரோலண்டை அவர் மன்னித்துவிட்டார். ரோலண்டையும் அவருடைய பெற்றோர்களையும் சார்லஸ் தம்முடைய அரண் மனைக்குக் கூட்டிக்கொண்டு போனார். அதுமுதல் சார்லஸின் அரண்மனையில் ரோலண்டும் அவர் பெற்றோர்களும் இன்ப மாக வாழ்ந்து வந்தார்கள். சிறிது காலத்தில் ரோலண்டின் தகப்பனார் மாண்டுபோனார். ரோலண்டின் தாய் வேறு ஒருவனைக் கலியாணம் செய்துகொண்டார். பெரியவராக வளர்ந்ததும், ரோலண்டு சார்லஸின் நம்பிக்கை உள்ள வீரராக ஆனார். சார்லஸ் பேரரசர் எங்கே போனாலும் ரோலண்டு அவருக்குப் பக்கத்தில் நிழலைப்போலச் சென்றார். ரோலண்டுக்கு உண்மை நண்பன் ஒருவன் உண்டு. அவ னுடைய பெயர் ஆலிவர் என்பது. அவர்கள் இரண்டு பேரும் எங்கே போனாலும் ஒன்றாகவே போவார்கள்; எதைச் செய் தாலும் ஒன்றாகவே செய்வார்கள்.

சார்லஸ் ஒரு தடவை ஸ்பெயினுக்குச் சேனைகளுடன்

போனர். அங்கு இருந்த முஸ்லிம் அரசர்களை அடக்குவதற்காகவே படை எடுத்துச் சென்றார். ஸ்பெயினைத் தம் இராச்சியத்தோடு இணைத்துக் கொள்ளவேண்டும்; அங்கு வசிக்கும் ஜனங்களை எல்லாம் முஸ்லிம் மதத்திலிருந்து கிறிஸ்தவ மதத்துக்கு மாற்றவேண்டும் என்று அவர் விரும்பினார். ஸ்பெயின் தேசத்தில் நடந்த சண்டைகளில் ரோலண்டும் ஆலிவரும் மிகுந்த துணிச்சலோடு போரிட்டார்கள். இதனால் அவர்களுக்கு மிக நல்ல பெயரும் மதிப்பும் உண்டாயின. கடைசியில் சார்லஸ் ஸாரகோஸா என்ற பட்டணம் நீங்கலாக ஸ்பெயின் தேசம் முழுவதையும் வென்றுவிட்டார். ஸாரகோஸா பட்டணத்து அரசன் சார்லஸுக்கு ஒரு தூதனை அனுப்பினான். தூதனிடம் பின்வருமாறு சொல்லி அனுப்பினான்: "நீங்கள் ஸ்பெயினை விட்டுச் சேனையுடன் புறப்பட்டுப் போய்விட்டால், நான் உங்களுக்குப் பணிந்துவிடுகிறேன். கூடிய விரைவில் நான் உங்களுடைய தலைநகரத்துக்கு வந்து அங்கேயே ஞானஸ்நானம் செய்துகொள்ளுகிறேன்."

ஸாரகோஸா அரசன் ஒரு சூழ்ச்சிக்காரன். தான் சொல்லி அனுப்பியதுபோலவே நடக்கவேண்டும் என்ற எண்ணம் அவனுக்குச் சிறிதும் கிடையாது. சார்லஸை ஸ்பெயின் தேசத்தைவிட்டு வெளியே போகச் செய்யவே அவன் அப்படிச் சொல்லியனுப்பினான். சார்லஸ் ஸ்பெயினை விட்டு நீங்கியவுடன் கலகம் செய்யவேண்டும் என்பதே அவனுடைய எண்ணம்.

ஸாரகோஸா மன்னன் அனுப்பிய தூதன் சார்லஸிடம் வந்தான். சார்லஸ் அவன் சொன்னவற்றை யெல்லாம் அமைதியாகக் கேட்டார். பிறகு அவர் தூதனைப் பார்த்து, "நீ உன்னுடைய அரசனிடம் திரும்பிப்போ. நான் தீர ஆராய்ந்து கூடிய விரைவில் என்னுடைய முடிவை உன் அரசனுக்குத் தெரியப்படுத்துகிறேன்" என்று சொன்னார். பிறகு சார்லஸ் தம்முடைய தலைவர்கள் எல்லோரையும் ஒன்று கூட்டி ஆலோசனை செய்தார். அவர்களுக்கு ஸாரகோஸா மன்னன் சொல்லி அனுப்பிய செய்தியைக் கூறினார். அவர்களுடைய கருத்துக்களைக் கேட்டார். ரோலண்ட் முதலில் பேசினார். ஸாரகோஸா மன்னன் சூழ்ச்சிக்காரன் என்றும்,

அவன் சொன்னதில் நம்பிக்கை வைக்கக்கூடாது என்றும் கூறினர். பிறகு கானிலன் என்பவன் பேசினன். அவன் ரோலண்டின் தந்தை இறந்த பிறகு அவருடைய தாயை மணந்துகொண்டவன். ரோலண்டிடம் அவனுக்கு மிகுந்த பொருமை உண்டு. அவன் ரோலண்டுக்கு விரோதமாகப் பேசினன். ஸ்பெயின் தேசத்தைவிட்டுப் படையுடன் புறப் படச் சார்லஸைச் சம்மதிக்கும்படி தூண்டினன். ரோலண்டை விட கானிலன் மூத்தவன் ஆகையால், அவனுடைய யோசனையையே சார்லஸ் எடுத்துக்கொண்டார். தாம் படை யுடன் ஸ்பெயினைவிட்டு வெளியேறப் போவதாக ஸாரகோஸா மன்னனுக்குச் சொல்லி அனுப்ப முடிவு செய்தார். ஸாரகோஸா மன்னனிடம் தாமே தூது போவதாக ரோலண்ட் சொன்னர். ஆனல் சார்ஸஸ் அவரை அனுமதிக்கவில்லை. ஸாரகோஸா ஆபத்து நிறைந்த இடம் என்றும், அங்கே தம்முடைய மைத்துனரை அனுப்ப விரும்பவில்லை என்றும் சார்லஸ் சொல்லிவிட்டார். பிறகு, ரோலண்ட் தம்முடைய மாற்ருந் தகப்பனே அந்தச் செய்தியைக் கொண்டுபோகட் டும் என்று சொன்னர். சார்லஸ் அதற்கு ஒப்புக்கொண்டார். கானிலன் ஸாரகோஸா மன்னனிடம் சென்று விஷயத்தைத் தெரியப்படுத்தினன். அவன் திரும்பி வந்ததும், ஸாரகோஸா மன்னன் தன் வார்த்தையின்படி நடக்க ஒப்புக்கொண்டு இருக்கிருன் என்று சொன்னன். ஆகவே பிராங்குப் படை கள் ஸ்பெயின் தேசத்தை விட்டுப் புறப்பட்டன. திரும்பு கின்ற சேனையில் மிகவும் ஆபத்தான பகுதி சேனையின் பின் புறம் தான். ஸாரகோஸா மன்னன் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டுத் தாக்கினல் பின் படைதான் சமாளிக்க வேண்டும். ஆகையால் ரோலண்ட் அந்தப் பின்படைக்குத் தலைவன் ஆக்கப்பட்டான். அவனுடைய நண்பன் அவனுட னேயே குதிரைமேல் சவாரி செய்துகொண்டு வந்தான். அவர்கள் இரண்டு பேருக்கும் என்ன ஆபத்து நேருமோ என்று சார்லஸ் அடிக்கடி பயந்தார். ஆனல் ரோலண்ட் வசம் ஆலிபான்ட் என்ற ஒரு பெரிய ஊது கொம்பு இருந்தது. தமக்கு ஆபத்து ஏற்படும்போது அதை ஊதுவதாகவும், அந்தச் சத்தத்தைக் கேட்டு சார்லஸ் திரும்பி வந்து உதவி

செய்யலாம் என்றும் ரோலண்டு சார்லஸுக்குக் கூறினர்.

பிராங்குப் படைகள் மலைப்பிரதேசத்தில் வளைந்து வளைந்து பிரயாணம் செய்தன. ரோலண்டும் ஆலிவரும் எல்லோருக்கும் பின்னுல் பின்படைக்குத் தலைவர்களாகப் போனுர்கள். பின்படையில் சுமார் இருபதாயிரம் வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் தங்கள் ஊருக்குத் திரும்பிப் போய்க் கொண்டே இருந்தபோது பின்னுல் திடீரென்று ஒரு சத்தம் கேட்டது. ரோலண்ட் பக்கத்தில் இருந்த ஒரு சிறிய குன்றின் மேல் ஏறிப் பார்த்தார். தமக்குப் பின்னுல் ஒரு ஸ்பானியப் படை தாக்குவதற்காகத் தொடர்ந்து வருவதைக் கவனித்தார். ஸாரகோஸா மன்னன் தாம் நினைத்தது போலவே துரோகம் செய்துவிட்டான் என்று உணர்ந்தார். ரோலண்டின் சேனையைவிட ஸ்பானியப் படை பெரிதாக இருந்தது.



கொம்பை ஊதுமாறு ரோலண்டை ஆலிவர் வேண்டிக்கொண்டான். ஆனுல் ரோலண்டோ அதற்கு மறுத்துவிட்டார். தாமே ஸ்பானியப் படையை முறியடித்துவிட முடியும் என்று எண்ணினர்.

ரோலண்ட் தம்முடைய உடைவாளை உருவித் தலைக்கு

மேல் சுழற்றினர். ஸ்பானியச் சேனையைத் தாக்குமாறு தம் படைகளுக்குக் கட்டளையிட்டார். இரண்டு பக்கத்துச் சேனைகளுக்கும் ஒரு கொடிய போர் மூண்டது. பிணங்கள் மலை மலையாகக் குவிந்தன. நீண்ட நேரச் சண்டைக்குப் பிறகு ஸ்பானியர்கள் தோல்வி அடைந்தார்கள். பிராங்குகள் சிங்கம் போலப் பாய்ந்து போர்புரிந்ததே அதற்குக் காரணம். ரோலண்டும் ஆலிவரும் தாம் வென்றுவிட்டதாக நினைத்தார்கள். ஆனல் ஸாரகோஸா மன்னன் ஒரு புதிய சேனையுடன் வந்து சேர்ந்தான். புதிதாக வந்த சேனை புது உற்சாகத்துடன் சண்டை செய்தது. ரோலண்டின் சேனையோ ஏற்கெனவே சண்டை செய்து களைத்துப்போய் இருந்தது. தம்மால் இந்த இரண்டாவது சேனையை வெல்ல முடியாது என்பதை ரோலண்ட் உணர்ந்தார். உடனே தம்முடைய ஊது கொம்பை எடுத்துப் பலம் கொண்டமட்டும் மூன்று முறை ஊதினர்.

தொலை தூரத்தில் தம்முடைய சேனையுடன் பிரயாணம் செய்துகொண்டிருந்த சார்லஸின் காதில் ஊது கொம்பின் சத்தம் கேட்டது. உடனே அவர் நின்றார். பக்கத்தில் இருந்தவர்களை நோக்கி, "இது என்ன சத்தம்?" என்று கேட்டார். அவரோடு இருந்தவர்கள், "இது யாரோ ஓர் இடையன் ஊதும் கொம்புச் சத்தம்" என்றார்கள். ஆகையால் சார்லஸ் தொடர்ந்து சவாரி செய்தார். இரண்டாவது முறையும் ஊது கொம்பின் சத்தம் அவர் காதில் விழுந்தது. மறுபடியும் நின்று அந்தச் சத்தத்தைப் பற்றிக் கேட்டார்; அதற்கும் அவர்கள் ஒன்றும் இல்லை என்றார்கள். மூன்றாவது தடவையாக சார்லஸ் ஊது கொம்பின் சத்தத்தைக் கேட்டார். உடனே ரோலண்டுக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டுவிட்டது என்பதை உணர்ந்தார்; திரும்பிப்போய் ரோலண்டுக்கு உதவும்படித் தம்முடைய சேனைகளுக்குக் கட்டளையிட்டார்.

இதற்குள் ரோலண்டும் அவர் ஆட்களும் உயிர் பிழைக்கத் தீவிரமாகச் சண்டை செய்தார்கள். பகைவருடைய ஈட்டி பாய்ந்து ஆலிவர் மாண்டுபோனன். விரைவிலேயே ரோலண்டு ஒருவரைத் தவிர மற்றப் பிராங்குகள் எல்லோரும் கொல்லப்பட்டனர். சார்லஸும் அவருடைய ஆட்களும்

வந்து பார்த்தபோது செத்துக் கிடந்த சேனைகளைத்தான் கண்டார்கள். பெரிய இராக்கதர்கள் கூடிச் சண்டை செய்த இடம்போல அந்த இடம் தோற்றமளித்தது. ஸ்பானியர்கள் மலைகளின்மேல் நின்றுகொண்டு பிராங்குச் சேனையின்மேல் உருட்டிவிட்ட பெரிய பெரிய பாறுங்கற்கள் அங்கங்கே விழுந்து கிடந்தன. ஓர் ஓடைக்குப் பக்கத்தில் ஒரு கையில் வாளுடனும் இன்னொரு கையில் ஊது கொம்புடனும் ரோலண்டின் சவம் விழுந்து கிடந்தது.

சார்லஸ் தம்முடைய மருமகன் பக்கத்தில் ஆடாமல் அசையாமல் மௌனமாக உட்கார்ந்தார். தம்முடைய உயிருக்கு உயிரான ரோலண்ட் மாண்டுவிட்டது அவருக்கு மிகுந்த துயரத்தைக் கொடுத்தது. பிறகு அவர் வீராவேசத்துடன் எழுந்தார்; தம்முடைய ஆட்களைக் கொன்ற துரோகிகளுக்குத் தகுந்த பாடம் கற்பிக்க முடிவு செய்துகொண்டார். ஸ்பானிய சேனையைத் துரத்திச் சென்று தாக்குமாறு தம்முடைய படைக்குக் கட்டளையிட்டார். விரைவிலேயே பிராங்குகள் ஸ்பானியப் படையை வழி மறித்துச் சண்டை செய்தனர். சண்டை வெகு மும்முரமாக நடைபெற்றது. கடைசியில் ஸாரகோஸா மன்னன் தோல்வியடைந்தான். அவனுடைய நாடு சார்லஸுக்குச் சொந்தமானது. ரோலண்டைக் கொன்றதற்காக ஸாரகோஸா மன்னனைச் சார்லஸ் மிகவும் கொடுமைப் படுத்தினர். அந்த நாளிலிருந்து ரோலண்டின் வீரக்கதை உலகம் முழுவதிலும் சொல்லப்படுகிறது. அவரை உலக வீரர்களில் ஒருவராக உலக மக்கள் நினைக்கிறார்கள்.

## 22. பேரரசர் ஆல்பிரட் (கி. பி. 848-910)

பேரரசர் சார்லஸ் மரணம் அடைந்த முப்பது ஆண்டுகட்குப் பிறகு இங்கிலாந்தில் ஒரு குழந்தை பிறந்தது. அது சார்லஸைப் போலவே பிற்காலத்தில் பேரரசர் என்று புகழடைந்தது. அக்குழந்தையின் பெயர் ஆல்பிரட் என்பது.

ஆல்பிரடின் தகப்பனுர் தெற்கு இங்கிலாந்தில் வெஸ்ஸெக்ஸ் என்ற இராச்சியத்தின் அரசர், ஆல்பிரடுக்கு இரண்டு அண்ணன்மாரும் ஒரு சகோதரியும் இருந்தார்கள். அவர்கள் குடும்பம் எப்பொழுதும் சந்தோஷமாக இருக்கும். குழந்தைகள் எல்லோரும் ஒருவர் மீது ஒருவர் உயிரையே வைத்திருந்தார்கள்.

ஆல்பிரட் பிறந்து வளர்ந்த காலத்தில், இங்கிலாந்து மிக மோசமான நிலைமையில் இருந்தது. ஆங்கிலேயர்கள் அதற்குள் கிறிஸ்தவர்களாக மாறி இருந்தார்கள்; அவர்கள் பல அழகான கோவில்களைக் கட்டி இருந்தார்கள். அவற்றுள் கடவுளுக்குக் காணிக்கையாக அநேக அழகான பொருள்களைச் சேர்த்து வைத்திருந்தார்கள். ஆனுல் அவர்கள் அமைதியாக வாழக் கொடுத்து வைக்கவில்லை. டேன்கள் என்ற கொடிய ஜாதியார் ஐரோப்பாவின் வடக்கே இருந்து கடல் வழியாக இங்கிலாந்துக்கு வந்து தொல்லை கொடுத்தார்கள். அவர்கள் ஈவு இரக்கம் இல்லாதவர்கள்; கொள்ளை அடிப்பதும் தீ வைத்துச் சாம்பலாக்குவதுமே அவர்களுடைய செயல்; டேன்களின் கப்பல்களை ஆற்றில் பார்த்துவிட்டால் ஆங்கிலேயர்கள் நடுநடுங்குவார்கள்; வீட்டையும் சொத்துக்களையும் விட்டுவிட்டுக் காடுகளுக்கு ஓடி மறைந்துகொள்வார்கள்; டேன்கள் போனபிறகே ஊர்களுக்குத் திரும்பி வருவார்கள். சில சமயம் டேன்கள் திடீரென்று ஊர்களுக்குள் புகுந்து விடுவார்கள்; ஓடி ஒளிந்துகொள்வதற்கு மக்களுக்கு நேரம் இருக்காது. டேன்கள் ஆண், பெண், குழந்தை, குட்டி அவ்வளவு பேரையும் கொன்று தீர்த்து விடுவார்கள். அவர்கள் தப்பிப் போய்விட்டாலும், திரும்பி வந்து பார்க்கும் போது ஊரெல்லாம் சுடுகாடு போல்தான் காட்சிதரும். டேன்கள் அப்படி நாசம் செய்திருப்பார்கள். ஆடுகள், மாடுகள், கோழிகள் எல்லாம் களவு போயிருக்கும்; தானியங்கள் தரையில் சிதறிக் கிடக்கும். வீடுகளும் கோவில்களும் குட்டிச் சுவர்களாக நிற்கும். டேன்கள் விக்கிரக ஆராதனை செய்பவர்கள்; ஆகையால் கோவில்களில் இருந்த புனிதப் பொருள்களைக் கண்டு அவர்கள் பயந்தார்கள்; எனவே, அவர்கள் மதக் கிரந்தங்களையும், சிலுவைகளையும், கோவில்களிலிருந்த

மெழுகு வர்த்திகளையும் தீயில் எரித்தார்கள் ; இல்லையேல் தூள் தூளாக உடைத்துப் பாழாக்கினர்கள்.

ஆல்பிரட் பிறந்த காலத்தில் வட இங்கிலாந்து முழுவதையும் டேன்கள் கைப்பற்றி இருந்தார்கள். ஆகையால் அவர்கள் எப்பொழுது தம்மைத் தாக்குவார்களோ என்ற பயத்திலேயே வெஸ்ஸெக்ஸ் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். எனவே, ஆல்பிரடின் தகப்பனர் டேன்களை எதிர்த்துச் சண்டை செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார். இதனல் அமைதியாகத் தம் மக்களுக்கு வேண்டிய வசதிகளைக்கூட அவரால் செய்ய முடியவில்லை. ஆல்பிரடையும் அவர் சகோதரர்களையும் அவர்கள் தகப்பனர் படிக்க வைக்கக்கூட இல்லை. ஒருநாள் ஆல்பிரடின் தாயார் தம் பிள்ளைகளுக்கு ஓர் அழகான புத்தகத்தைக் காட்டினள். அதில் எழுத்துக்கள் எல்லாம் வர்ணங்களால் எழுதப்பட்டிருந்தன. தம் பிள்ளைகள் படிப்பு வாசனை இல்லாதவர்களாக வளர்வது சிறிதுகூட அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் அவள் அவர்களைப் பார்த்து, "இந்தப் புத்தகத்தை உங்களிடம் கொடுக்கிறேன் ; உங்களில் யார் இதை மனப்பாடம் செய்து முதலில் ஒப்பிக்கின்ருரோ அவருக்கு இந்தப் புத்தகத்தை வெகுமதியாகக் கொடுத்துவிடுவேன்" என்று சொன்னள். ஆல்பிரடின் அண்ணன்மார்களுக்குப் படிப்பது என்ருலோ புத்தகம் என்ருலோ பிடிக்காது. ஆனல் ஆல்பிரட் அந்தப் புத்தகத்தைத் தாம் பெற விரும்பினர். ஆகையால் அவர் அந்தப் புத்தகத்தை ஒரு மதகுருவிடம் கொண்டு போனர் ; அவரைப் படிக்கச் சொன்னர் ; அவர் படிக்கும்போதே ஆல்பிரட் மனப்பாடம் செய்துகொண்டார் ; பிறகு தம்முடைய தாயாரிடம் மனப்பாடம் செய்ததைத் தவருமல் ஒப்பித்துப் புத்தகத்தை வெகுமதியாக வாங்கிக் கொண்டார்.

ஆல்பிரடின் இளவயதிலே அவருடைய தகப்பனர் இறந்துபோனர். அதன் பிறகு ஆல்பிரடின் அண்ணன்மாரும் ஒருவருக்குப்பின் ஒருவராக வெஸ்ஸெக்ஸை அரசாண்டார்கள். அவர்கள் இரண்டு பேரும் டேன்களை எதிர்த்துப் போரிட்டுத் தம் உயிரை விட்டார்கள். டேன்கள் அடிக்கடி வெஸ்ஸெக்ஸ் மீது படை எடுக்கத் தொடங்கினர்கள்.

அண்ணன்மார்கள் இருவரும் செத்துவிட்டதால், ஆல்பிரட் இருபத்து மூன்று வயதிலேயே அரசர் ஆனர். அவர் அரச



ரான வேளை தீய வேளை. டேன்களுக்குக் குத்ரும் என்று ஒரு புதிய தலைவர் ஏற்பட்டார். அவர் நல்லவராக இருந்ததோடு வீரம் செறிந்தவராகவும் இருந்தார். டேன்கள் ஆயிரக்

கணக்கில் வெஸ்ஸெக்ஸில் நுழைய ஆரம்பித்தார்கள். ஆல்பிரடும் அவருடைய சேனைகளும் படிப்படியாகப் பின்வாங்க நேரிட்டது. கடைசியில் அவர் தம் இராச்சியத்தின் மேற்குக் கோடியில் இருந்த சதுப்பு நிலக் காடுகளுக்குச் சென்று மறைந்து கொண்டார். அந்தச் சதுப்பு நிலக் காடுகளில் ஆல்பிரடைப் பின்பற்றி டேன்களால் போகமுடியவில்லை. சதுப்பு நிலங்களில் வழி தெரியாமல் தாங்கள் மூழ்கிவிடுவோமோ என்று அவர்கள் பயந்தனர். அந்தச் சமயத்தில் ஆல்பிரட் வீரத்துடன் செய்த பல சாகசச் செயல்களைப்பற்றி அநேக கதைகள் வழங்குகின்றன. பின்வருமாறு ஒரு கதை சொல்லப்படுகிறது. ஒரு சமயம் குத்ருமின் திட்டம் என்ன என்பதை ஆல்பிரட் தெரிந்து கொள்ள விரும்பினார்; ஆகையால் அவர் ஹார்ப் வாத்தியம் வாசிக்கும் இசைவாணர்போல வேஷம் போட்டுக்கொண்டார்; ஹார்ப் வாத்தியத்துடன் தைரியமாகக் குத்ருமின் கூடாரத்துக்குள் புகுந்தார். அங்கிருந்த டேன் வீரர்களுக்கு முன்னால் ஹார்ப் வாத்தியத்தை வாசித்துக் கொண்டு பல பாட்டுகள் பாடினார். அவரை அடையாளம் கண்டுகொள்ள டேன்களால் முடியவேயில்லை. ஆல்பிரடை ஒரு டேன் என்றே அவர்கள் நினைத்து விட்டார்கள். ஆகையால் அவரைத் தம்முடைய கூடாரத்துக்குள்ளேயே வைத்துக்கொண்டார்கள். ஆல்பிரட் அவர்கள் கூடாரத்துக்குள் பேசிக்கொண்டதை எல்லாம் உன்னிப்பாகக் கவனித்தார். குத்ருமின் திட்டங்களை எல்லாம் தெரிந்துகொண்டார். கடைசியில் டேன்களை மிகச் சாமர்த்தியமாக ஏமாற்றிவிட்டுக் கூடாரத்திலிருந்து வெளியேறினார். மிகவும் ஜாக்கிரதையுடன் தம்முடைய கூடாரத்திற்கு வந்து சேர்ந்தார்.

ஆல்பிரடைப் பற்றி இன்னொரு கதையும் சொல்லப்படுகிறது. அதாவது, ஒரு சமயம் ஒரு வழிப்போக்கன் ஆல்பிரடிடம் வந்து உணவு வேண்டுமென்று கேட்டான். அப்பொழுது ஆல்பிரடிடம் ஒரே ஒரு ரொட்டியும், சிறிது ஒயினுமே இருந்தன. இருந்தாலும் அந்த வழிப்போக்கனுக்கு அரை ரொட்டியைக் கொடுத்துவிடுமாறு ஆல்பிரடு தம்முடைய வேலையாளுக்குக் கட்டளையிட்டார். இரவில் ஆல்பிரடு படுக்

கையில் இருந்து திடீரென்று விழித்துக்கொண்டார். அப்போது வழிப்போக்கன் தமக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு இருந்ததைப் பார்த்தார். வழிப்போக்கன் ஆல்பிரடைப் பார்த்து, “என்னுடைய பெயர் ஸெயின்ட் கத்பர்ட் என்பது. கடவுள் என்னை உங்களிடம் அனுப்பி இருக்கிறார். நாளைக்கு நீங்கள் இந்தச் சதுப்பு நிலக் காட்டை விட்டு உங்களுடைய நாட்டுக்குத் திரும்பவேண்டும். உங்கள் நாட்டில் எதாண்டூன் என்ற இடத்துக்குச் செல்லுங்கள். அந்த இடத்தில் உங்களுக்கும் டேன்களுக்கும் ஒரு பெரிய சண்டை நடக்கும். அந்தச் சண்டையில் நீங்கள் வெற்றி பெறுவீர்கள்” என்று சொன்னான். வழிப்போக்கன் சொன்னபடியே ஆல்பிரட் செய்தார். எதாண்டூனில் நடந்த சண்டையில் குத்ருமும் அவருடைய வீரர்களும் படுதோல்வி அடைந்தார்கள். குத்ரும் தம்முடைய முப்பது வீரர்களோடு ஆல்பிரடிடம் சமாதானம் செய்துகொள்ள வந்தார். இரண்டு அரசர்களும் சண்டை போடுவதை நிறுத்திக்கொண்டு, இங்கிலாந்தை இரண்டு பாகமாகப் பிரித்து ஆளுவது என்று முடிவு செய்தார்கள். தென்பாகத்துக்கு ஆல்பிரட் அரசர் ஆனார். வடபாகத்துக்குக் குத்ரும் அரசர் ஆனார். இப்படியாக இங்கிலாந்தில் சண்டை எல்லாம் ஓய்ந்து அமைதி உண்டானது.

இதன் பிறகு ஆல்பிரடின் ஆட்சி அமைதியாக நடந்தது. ஆல்பிரட் பல பணிகள் புரிந்தார். முதலில் தம்முடைய நாட்டின் பாதுகாப்புக்கு வேண்டிய வேலைகளைச் செய்ய முற்பட்டார். டேன்கள் படையெடுத்தபோது கடல்வழியாகத்தான் வந்தார்கள். இதை உணர்ந்த ஆல்பிரட் அந்நியர் படை எடுப்பைத் தடுக்க நிறைய சண்டைக் கப்பல்களைக் கட்டினார். இதனால்தான் சில சமயம் ஆல்பிரடை “பிரிட்டிஷ் கடல் படையின் தந்தை” என்று கூறுகிறார்கள். ஆல்பிரட் தம்முடைய வீரர்களுக்குச் சிறந்த பயிற்சி கொடுத்தார். சண்டைக் காலத்தில் தம்முடைய இராச்சியத்திலிருந்த ஆண்களில் பாதிப்பேர் போர்புரிவதற்கு வந்துவிடவேண்டும் என்று சட்டமியற்றினார். இன்னொரு பாதிப்பேர் வீடுகளில் தங்கி விவசாயப் பண்ணைகளையும், ஆடு மாடுகளையும் பார்த்துக்கொள்ளவேண்டும் என்றும் சட்டம் செய்தார். சிறிது காலத்துக்குப் பிறகு

சண்டை செய்தவர்கள் வீட்டிற்குத் திரும்பி வந்துவிடவேண்டும்; வீட்டில் இருந்தவர்கள் சண்டைக்குப் போகவேண்டும்.

டேன்கள் படை எடுத்தபோது பல கோவில்களைக் கொளுத்தி நாசமாக்கி இருந்தார்கள். அவற்றையெல்லாம் ஆல்பிரட் புதியவையாகக் கட்டினர். அவைகளில் அழகான பொருள்களை எல்லாம் கொண்டுவந்து வைத்தார். வெளிநாடுகளிலிருந்து சில அறிவாளிகளை அவர் வரவழைத்தார். அவர்களைத் தம்முடைய நாட்டில் பிஷப்புக்கள் ஆக்கினர். அந்த பிஷப்புக்கள் கோவில்களை நன்குகக் கவனித்துக் கொண்டதோடு, மக்களுக்கு ஒழுங்கான வழியைக் காட்டினர்கள். டேன்கள் அழித்துவிட்ட பல துறவி மடங்களையும் ஆல்பிரட் புதியவையாகக் கட்டினர். அவைகளில் ஒன்று ஆதெல்னி என்ற இடத்தில் இருந்தது. அந்த இடத்தில்தான் டேன்களுக்குப் பயந்து ஒளிந்து கொண்டபோது ஆல்பிரட் வசித்து வந்தார். ஆல்பிரட் சந்நியாசினிகளுக்காக ஒரு கன்னிகா மடத்தையும் கட்டினர். அதில் அவருடைய ஒரே மகள் முதல் மடாதிபதியாக இருந்தாள்.

ஆல்பிரட் தம்முடைய மக்கள் எல்லோரும் படித்திருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆகையால் சார்லஸ் பேரரசரைப் போலவே ஆல்பிரடும் வெளிநாடுகளிலிருந்து பல தேர்ந்த ஆசிரியர்களை வரவழைத்தார். அஸர் என்ற ஆசிரியர் வேல்ஸ் தேசத்திலிருந்து வந்தார். அவர் ஆல்பிரடின் சரித்திரத்தை எழுதிவைத்தார். அவர் எழுதிய சரித்திரத்திலிருந்துதான் நாம் ஆல்பிரடைப்பற்றித் தெரிந்துகொள்ளுகிறோம். அந்தக் காலத்தில் புத்தகங்கள் கிடைப்பது எளிதன்று. அச்சு இயந்திரங்கள் அப்போது இல்லை. ஆகையால் எல்லாப் புத்தகங்களையும் கையினலேயே எழுதவேண்டும். பல புத்தகங்கள் இலத்தீன் மொழியில் எழுதப்பட்டிருந்தன. அவைகளை மக்கள் படித்துப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகையால் ஆல்பிரட் தாமே சில இலத்தீன் புத்தகங்களை ஆங்கில மொழியில் மொழிபெயர்த்தார். தம்முடைய மக்களுக்கு நாட்டுச் சரித்திரம் தெரிந்திருக்க வேண்டும் என்று அவர் நினைத்தார். ஆகையால் சில படித்த துறவிகளை அழைத்துத் தம்முடைய நாட்டுச் சரித்திரத்தை எழுதும்படி கட்டளை

இட்டார். அந்தச் சரித்திரப் புத்தகத்திற்கு "ஆங்கிலோ சாக்ஸன் கிரானிக்கல்" என்று பெயர்.

ஆல்பிரட் தம்முடைய நாட்டிலிருந்த அறிவாளிகளை எல் லாம் ஒன்ருகக் கூட்டினுர். அவர்களின் உதவியைக்கொண்டு பழங்காலச் சட்டங்களை எல்லாம் வரிசையாக எழுதினுர். காலத்துக்கு ஏற்றபடி அவைகளில் சில மாறுதல்களைச் செய் தார். நல்ல சட்டங்களை எல்லாம் அப்படியே வைத்துக் கொண்டார். மக்களைத் தாம் எழுதிய சட்டங்களுக்கு அடங்கி வாழும்படி செய்தார். அவைகளை மீறி நடப்பவர் களுக்குத் தண்டனை கிடைத்தது.

ஆல்பிரட் திறமை மிகுந்த தொழிலாளியாகவும் இருந்தார். சில புதிய பொருள்களையும் அவர் கண்டு பிடித்தார். அவர் இறந்து பல ஆண்டுகளுக்குப் பிறகு ஆதெல்னிக்குப் பக்கத்தில் ஓர் அழகான அணிகலன் கண்டெடுக்கப்பட்டது. அதன் மேல் "என்னைச் செய்தவர் ஆல்பிரட்" என்று இலத்தீன் மொழியில் எழுதப்பட்டிருந்தது. ஆல்பிரட் ஒரு கடியாரத்தையும் கண்டுபிடித்தார். சார்லஸிடம் இருந்த கடியாரத்தைவிட ஆல்பிரடின் கடியாரம் மிக எளிதானதாக இருந்தது. அவர் ஆறு மெழுகுவத்திகளைச் செய்துகொண் டார். ஒவ்வொரு மெழுகு வத்தியையும் பன்னிரண்டு பாகங்களாகப் பிரித்துக் கொண்டார். ஒரு மெழுகுவத்திக் குப்பின் இன்ெனுரு மெழுகு வத்தியாக எரியவிட்டுக் கொண்டே இருந்தால் ஆறு வத்திகளும் எரிந்து முடிய சரியாக இருபத்து நான்கு மணி நேரம் ஆனது. மெழுகு வத்திகள் காற்றின் அசைவால் விரைவாகவோ, மெதுவா கவோ, எரிவதைக் கண்டார். ஆகையால் அந்த மெழுகு வத்திகள் காற்றில் அலையாமல் ஒரே சீராக எரியச் சில புது வகை விளக்குகளையும் கண்டுபிடித்தார்.

ஆல்பிரட் தம்முடைய ஐம்பத்து மூன்ருவது வயதில் மரணமடைந்தார். அவர் இடைவிடாமல் உழைத்துக் கொண்டு இருந்ததால் மிகவும் உடல் தளர்ந்து இறந்து போனுர். அவர் இறப்பு அவருடைய மக்களுக்கு மிகுந்த துயரத்தைக் கொடுத்தது. அவர் இறந்தாலும் அவருடைய பெயர் நிலைத்து நிற்கிறது.

## 23. அடலேறு ரிச்சர்டும் ஸாலடினும் (கி. பி. 1187-1192)

யூதர்களின் நாடான பாலஸ்தீனத்தில் ஜெருசலெம் என்ற ஒரு புகழ்பெற்ற பட்டணம் உளது. இயேசு கிறிஸ்து பாலஸ்தீன நாட்டில்தான் அவதாரம் செய்தார். அங்குத் தான் வளர்ந்தார். ஜெருசலெம் பட்டணத்தில்தான் அவர் யூதத் தலைவர்களால் விசாரணை செய்யப்பட்டார். ரோமானிய கவர்னரால் அவர் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டதும் அந்தப் பட்டணத்தில்தான்.

ஆகையால், உலகத்தில் உள்ள கிறிஸ்தவர்கள் எல்லோராலும் ஜெருசலெம் புனிதத் தலமாகக் கருதப்படுகிறது. முஸ்லிம்களுக்கு மெக்கா நகரம் புனிதத்தலமாக இருப்பதுபோல ஜெருசலெம் கிறிஸ்தவர்களுடைய புனிதத்தலம் ஆகும். இயேசு கிறிஸ்து நடந்த தெருவில் நாமும் நடந்தோம்; அவர் வாழ்ந்த பட்டணத்தில் நாமும் வாழ்ந்தோம்; அவர் ஆண்டவனைத் தொழுத இடத்தில் நாமும் தொழுதோம் என்று சொல்லிக் கொள்ளக் கிறிஸ்தவர்கள் பலர் விரும்பினார்கள்; இப்போதும் சொல்லிக் கொள்ள விரும்புகிறார்கள். அவர்கள் எல்லோரும் ஜெருசலெம் என்ற புண்ணியத் தலத்திற்கு யாத்திரை செய்வது வழக்கம்.

ஜெருசலெம் யூத இனத்தாருக்கும் புண்ணியத்தலம் ஆகும். அவர்களுடைய சிறந்த அரசரான டேவிட் அந்த நகரத்தைத்தான் தம்முடைய இராச்சியத்துக்குத் தலைநகரம் ஆக்கினார். டேவிடின் மகன் சாலமன் என்பவரும் அந்தப் பட்டணத்தில்தான் ஆண்டவனுக்குக் கோவில் கட்டினார்.

ஒரு காலத்தில் மகமதிய மதத்தைச் சேர்ந்த அரேபியர்கள் ஜெருசலெம் பட்டணத்தைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்கள் மத்திய தரைக் கடலைச் சுற்றிலும் இருந்த நாடுகளை எல்லாம் பிடித்துக்கொண்டு வந்தார்கள். தாங்கள் பிடித்த நாடுகளில் எல்லாம் தங்களுடைய மகமதிய மதத்தைப் பரப்புவதற்கு அவர்கள் முயற்சி செய்தார்கள்.

இதனுல் கிறிஸ்தவர்கள் மிகவும் வருத்தம் அடைந்தார்கள். அவர்களுடைய புண்ணியத்தலம் இப்போது முஸ்லீம்கள் கைக்கு மாறிவிட்டது. முஸ்லீம்களோ இயேசு கிறிஸ்துவைக் கடவுள் என்று ஒப்புக்கொள்ளாதவர்கள். ஆனுல், முஸ்லீம்கள் கிறிஸ்தவர்களை நல்லபடியாகவே நடத்திஞர்கள். கிறிஸ்தவ வழிப்போக்கர்கள் ஜெருசலெமுக்கு வந்து போக அனுமதி கொடுத்தார்கள். ஆகையால் துவக்கத்தில் கிறிஸ்தவர்களுக்கு எந்தவிதமான துன்பமும் ஏற்படவில்லை.

இப்படியே நானூறு ஆண்டுகள் கழிந்துவிட்டன. பிறகு துருக்கியர்கள் என்ற கொடியவர்கள் ஜெருசலெமை அராபியர்களிடமிருந்து பிடித்துக் கொண்டார்கள்; அதைத் தங்களுடைய இராச்சியத்துடன் சேர்த்துக்கொண்டார்கள். துருக்கியர்களும் முஸ்லீம்களே. ஆனுல் அராபிய முஸ்லீம்களை விட அவர்கள் கொடிய குணம் படைத்தவர்கள். கிறிஸ்தவ வழிப்போக்கர்கள் ஜெருசலெமிற்கு வருவதற்குத் தொல்லை ஏற்பட்டது. அந்தப் புண்ணியத்தலத்துக்கு யாத்திரை வந்த கிறிஸ்தவர்களைத் துருக்கியர்கள் பிடித்துச் சிறையில் அடைத்தார்கள். சில சமயம் அவர்களைக் கொலைகூடச் செய்தார்கள். இதனுல் ஐரோப்பாவில் வாழ்ந்துவந்த கிறிஸ்தவர்கள் மிகவும் துன்பப்பட்டார்கள்.

ஒரு சமயம் பீட்டர் என்ற துறவி ஜெருசலெமுக்கு யாத்திரை போனுர். அவர் எப்படியோ துருக்கியர் கையில் அகப்படாமல் தப்பித்துக்கொண்டார். அவர் ஐரோப்பாவுக்குத் திரும்பிவந்தார். வந்தவுடன் அவர் ஒரு முடிவு செய்து கொண்டார். துருக்கியர் இழைக்கும் கொடுமைகளை யெல்லாம் கிறிஸ்தவர்களிடம் எடுத்துச் சொல்லவேண்டும்; ஒரு சேனையைப் புனித நாட்டுக்கு அனுப்பும்படிக் கிறிஸ்தவர்களைத் தூண்டவேண்டும். பிறகு அந்தச் சேனையைக் கொண்டு பாலஸ்தீனத்திலிருந்து எல்லாத் துருக்கியர்களையும் துரத்திவிட வேண்டும். இதுவே பீட்டர் செய்துகொண்ட முடிவு. அவர் ஐரோப்பா முழுவதும் யாத்திரை செய்தார். தலையிலும் காலிலும் எதுவும் அணிந்து கொள்ளாமல் அலைந்தார். போகிற இடங்களுக்கெல்லாம் கையில் ஒரு பெரிய சிலுவையைத் தூக்கிக்கொண்டு போனுர். அங்கங்கே மக்

களைக் கூட்டிப்பிரசங்கம் செய்தார். இயேசு கிறிஸ்து அவதரித்து வாழ்ந்த பாலஸ்தீனத்தைத் துருக்கியர்களிடமிருந்து காப்பாற்ற மக்கள் சண்டை செய்யவேண்டும் என்று பிரசாரம் பண்ணினர்.

பலபேர் அவருடைய பிரசங்கத்தைக் கேட்டுத் துடித்தார்கள். சேனையில் சேர்ந்து கிறிஸ்துவுக்காகப் போராட முன் வந்தார்கள். அவர்கள் துணியினால் பெரிய பெரிய சிலுவைகளைச் செய்தார்கள். அந்தச் சிலுவைகளை மார்பின்மேல் கட்டிக்கொண்டார்கள். இதன் மூலம் தாங்கள் சிலுவைக்காகச் சண்டை செய்யும் போர் வீரர்கள் என்று காட்டிக் கொண்டார்கள். அவர்களுக்குப் புனிதப் போர் வீரர்கள் என்று பெயர்; சிலுவைப் போர் வீரர்கள் என்றும் அவர்களை அழைப்பர். அவர்கள் செய்த சண்டைகளுக்குப் புனிதப் போர்கள் என்று பெயர். அப்போர் வீரர்களுக்கும் துருக்கியருக்கும் அச்சந்தரும்படியான சண்டைகள் ஏற்பட்டன. அவற்றில் சிலுவைச் சேனையே ஜெயித்தது. அது ஜெருசலேமைக் கைப்பற்றிக் கொண்டது. ஜெருசலெம் இராச்சியத்துக்கு ஒரு கிறிஸ்தவ வீரர் அரசர் ஆனர். ஆனல் ஜெருசலெத்திலிருந்த கிறிஸ்தவர்கள் நீண்ட காலம் அமைதியாக இருக்கவில்லை. எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு பெரிய முஸ்லீம் படை திரண்டு வந்தது. அது ஜெருசலெமைப் பிடித்துக்கொண்டது. அந்த முஸ்லீம் படை கிழக்குப் பாகத்திலிருந்து வந்தது. அந்தச் சேனைக்குத் தலைவராக இருந்தவர் ஒரு முஸ்லீம் அரசர். அவர் பெயர் ஸாலடின் என்பது. அவர் மிகுந்த தைரியசாலி. நற்பண்புடையவர். தம்முடைய மதத்தில் சொல்லப்பட்ட சட்ட திட்டங்களை அப்படியே கடைப்பிடிப்பவர். தம்முடைய மக்களை அவர் நீதியோடு அரசாண்டார். அவர்களை வலிமை மிக்கவர்களாக்கினர். ஆகையால் மக்கள் எல்லோரும் அவரை மிகவும் விரும்பினர்கள்.

ஸாலடின் கிறிஸ்தவர்களைக் கொடுமையாக நடத்தவில்லை. கிறிஸ்தவர்கள் எல்லோரும் ஜெருசலெமை விட்டு வெளியேறுவதற்கு அனுமதி கொடுத்தார். அவர்களுடைய சொத்துக்கோ உயிருக்கோ எந்த விதமான ஆபத்தையும் உண்டாக்கவில்லை. ஆனல் அவர் மகமதிய மதத்தில் மிகுந்த

பற்றுள்ளவர். ஜெருசலெம் பட்டணத்தை ஒரு முஸ்லீம் பட்டணமாக மாற்றிவிட வேண்டும் என்பது அவருடைய ஆசை. அதனால் எல்லாக் கிறிஸ்தவக் கோயில்களுக்கும் போய் அங்கே இருந்த சிலுவைகளை எடுத்துவிட்டார். அந்தக் கோயில் கதவுகளை எல்லாம் மூடிவிட்டார். இனிமேல் ஜெருசலெமுக்கு எந்தக் கிறிஸ்தவனும் யாத்திரை வரக்கூடாது என்று கட்டளையிட்டார்.

பாலஸ்தீனத்தில் நடந்தவை எல்லாம் ஐரோப்பாவில் வசித்த கிறிஸ்தவர்களுக்குத் தெரிந்தது. அவர்கள் ஒரு பெரிய சேனையை அனுப்பி ஜெருசலெமை மறுபடியும் பிடித்துக் கொள்ள முடிவுசெய்தார்கள். கிறிஸ்தவ நாட்டு அரசர்கள் எல்லாரும் சேனைகளைத் திரட்டினார்கள். ரோமாபுரி சாம்ராச்சியத்தை ஆண்டுவந்த பேரரசர் பிரடரிக், பிரான்ஸை ஆண்டுவந்த பிலிப் அரசர், இங்கிலாந்தை ஆண்டுவந்த ரிச்சர்டு மன்னர் ஆகியோர் சேனைகளைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டார்கள். பேரரசர் பிரடரிக் வழியிலேயே மாண்டு போனார். அதனால் ரோமாபுரிச் சேனைக்கு ஆஸ்திரியா தேசத்தைச் சேர்ந்த லியோபால்டு பிரபு என்பவர் தலைவர் ஆனார். ரிச்சர்டும் பிலிப்பும் மத்தியதரைக் கடலில் உள்ள சிசிலி என்ற தீவில் சந்திப்பது என்றும், பிறகு அங்கிருந்து ஒன்றாகச் சேர்ந்து பாலஸ்தீனத்துக்குப் போவது என்றும் முடிவு செய்துகொண்டார்கள். ஆனால் அந்த இரண்டு அரசர்களுக்குள் போட்டியும் பொறாமையும் உண்டாயின. அவர்களுடைய பொறாமை சண்டையையே பாழாக்கி விட்டது. ரிச்சர்டு பெரிய தைரியசாலி. அதனால்தான் அவருக்கு அடலேறு ரிச்சர்டு என்ற பெயர் ஏற்பட்டது. அவருக்குத் தைரியத்தோடு தற்பெருமையும் வீராப்பும் அதிகமாக இருந்தன. எப்பொழுதும் பிலிப்பைவிடத் தாமே மேலானவர் என்று காட்டிக்கொள்ள அவர் ஆசைப்பட்டார். எல்லா வகையிலும் அவர் தம்முடைய பெருமையைக் காட்டிக் கொள்ள முயற்சிசெய்தார். உதாரணமாக, அவர் ஆடம்பரமான விருந்துகளை ஏற்பாடு செய்வார். அந்த விருந்துகளுக்கு அவர் பிலிப்பைக் கூப்பிடுவார். விருந்தில், அசல் தங்கத்தால் செய்யப்பட்ட தட்டுக்களில் சாப்பாடு போடுவார். இதன்

மூலம் தம்மிடம் செல்வம் நிறைய இருக்கிறது என்று காட்டிக் கொள்ள ரிச்சர்டு விரும்பினர். இது முட்டாள்தனமானது. இந்த விருந்துகளுக்காக நிறைய பணம் செலவானது. அந்தப் பணத்தையெல்லாம் சண்டைக்காகச் செலவிட்டிருக் கலாம்.

பிலிப்புக்கு ஒரு சகோதரி இருந்தாள். அவளைக் கலியா ணம் செய்துகொள்வதாக ரிச்சர்டு வாக்குக் கொடுத்திருந்தார். ஆனல் பிறகு அந்த வாக்கை மீறிவிட்டார். நவார் தேசத்து அரசருடைய மகளான பெரங்கேரியா என்பவளைக் கலியா ணம் செய்துகொள்ள ரிச்சர்டு எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். பெரங்கேரியா மிகவும் அழகானவள். ரிச்சர்டு அந்தப் பெண்ணை உயிருக்கு உயிராகக் காதலித்தார். ரிச்சர்டு பாலஸ்தீனத்துக்குப் போகிற வழியில், அவளை ஸைப்ரஸ் தீவில் பார்த்தார். அங்கேயே மிகுந்த ஆடம்பரத் தோடு அவளைக் கலியாணம் செய்துகொண்டார். அந்தக் காரியம் பிலிப்புக்கு மிகுந்த சினத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது. இதன் மூலம் தம்முடைய சகோதரியின் மானம் பறிபோய்விட்டது என்று பிலிப் நினைத்தார். ஆகை யால் ரிச்சர்டுக்காகக் காத்துக்கொண்டு இருக்காமல் பிலிப் தாம்மட்டும் தனியாகவே பாலஸ்தீனத்துக்குப் போனர். ரிச்சர்டும் லியோபால்டும் அக்ரே என்ற கப்பல் துறை முகத்தைத் தாக்கினர்கள். அது பாலஸ்தீனத்தில் ஸாலடி னுக்குச் சொந்தமான முக்கியப் பட்டணங்களில் ஒன்று.

தம்முடைய கலியாணக் கேளிக்கையில் ரிச்சர்டு நீண்ட காலத்தை வீணுக்கிவிட்டார். ஆனல் கடைசியில் அவரும் பாலஸ்தீனத்துக்கு வந்து சேர்ந்தார். பிலிப் லியோபால்டு ஆகியோரின் வீரர்களில் அநேகர் நோயால் வருந்து வதைக் கண்டார். ஆகர் பட்டணத்தை அவர்களால் கைப் பற்ற முடியாது என்பதையும் அவர் தெரிந்து கொண்டார். ரிச்சர்டின் வீரர்கள் எல்லோரும் புதியவர்கள் ; பலசாலிகள் ; ரிச்சர்டே சிறந்த வீரர் ; அவர் தம்முடைய கையில் நீண்ட உடைவாளை ஏந்திக்கொண்டு எல்லா வீரர்களுக்கும் உற்சா கம் ஊட்டினர். அதனல் புனிதப் போர்வீரர்கள் மிகவும் துணிச்சலுடன் சண்டை செய்து ஆகர் பட்டணத்தைக்

கைப்பற்றினார்கள். ஆனால் அப்பொழுதும் மூன்று அரசர்களுக்குமிடையே கலகம் உண்டாயிற்று. மற்ற இரண்டு



அரசர்களைக் காட்டிலும் ரிச்சர்டு திறமைசாலி என்பதில் எந்த விதச் சந்தேகமும் இல்லை. ஆனால் அதற்காக அளவுக்குமீறி அவர் பெருமை பாராட்டிக் கொள்வதை மற்ற இரண்டு

பேரும் விரும்பவில்லை. ஆகையால் சிறிது காலம் சென்றதும், லியோபால்டும் பிலிப்பும் ரிச்சர்டைத் தனியாக விட்டுவிட்டுத் தத்தம் நாட்டுக்குத் திரும்பினார்கள்.

ஆகையால் ரிச்சர்டுக்கு ஆள்பலம் குறைந்துவிட்டது. ஜெருசலெம் பட்டணத்தைக் கைப்பற்றுவதற்கு உரிய ஆட்கள் ரிச்சர்டு வசம் இல்லை. அவர் தம்முடைய சிறிய சேனையுடன் கடல்கரையிலிருந்து உள்நாட்டை நோக்கி முன்னேறிச் சென்றார். கடைசியில் ஒரு நாள் ஒரு குன்றின் அடிவாரத்தை அடைந்தார். அந்தக் குன்றின் உச்சி மீது ரிச்சர்டின் ஆட்கள் ஏறி நின்று பார்த்தார்கள். தொலை தூரத்தில் ஜெருசலெத்தின் கோபுரங்கள் பளபள என்று மின்னிக்கொண்டிருந்தன. ரிச்சர்டையும் ஏறிவந்து பார்க்கும்படி அவருடைய வீரர்கள் வேண்டிக்கொண்டார்கள். ஆனால் ரிச்சர்டு மறுத்துவிட்டார். அவர் குன்றின் அடிவாரத்திலேயே தரையில் மண்டியிட்டு அமர்ந்தார்; தம்முடைய முகத்தை ஒரு திரையால் மூடிக்கொண்டு ஆண்டவனை வணங்கினார்; பிறகு பின்வருமாறு கூறினார்: "ஓ! ஆண்டவனே, உங்கள் பகைவர்களிடம் இருந்து உங்கள் புண்ணியத் தலத்தை விடுவிக்க என்னை நீங்கள் அனுமதிக்கவில்லை; ஆகையால் அந்தப் புண்ணியத்தலத்தைப் பார்க்கவும் என் கண்களை அனுமதிக்காதீர்கள்", என்று வேண்டினார். வருத்தத்தோடு மறுபடியும் கடல்கரைக்கே தம் வீரர்களோடு திரும்பிவிட்டார்.

ஸாலடினும் ரிச்சர்டும் ஒருவரை ஒருவர் விரும்பினார்கள்; மரியாதை கொடுத்துக் கொண்டார்கள்; இரண்டு பேரும் சிறந்த சேனைத் தலைவர்கள்; அதனால் ஒருவரை ஒருவர் புகழ்ந்து கொண்டார்கள். பின் வருவதுபோல ஒரு கதையும் சொல்லப்படுகிறது. ஒரு தடவை ரிச்சர்டு காய்ச்சலால் படுத்துக்கொண்டாராம்; அவருடைய மருத்துவர்களால் அவருடைய காய்ச்சலைப் போக்கமுடியவில்லை. இதைக் கேட்ட ஸாலடின் உடனே தன்னுடைய சொந்த மருத்துவரையே ஆங்கிலேயர் கூடாரத்துக்கு அனுப்பினாராம். அந்த மருத்துவர் வந்து மருந்து கொடுத்த பிறகு ரிச்சர்டு குணம் அடைந்தாராம்.

ஜெருசலெம் பட்டணத்தைத் தம்மால் பிடிக்க முடியாது என்று ரிச்சர்டு உணர்ந்து கொண்டார். ஆகவே தம்மோடு சமாதானம் செய்துகொள்ளுமாறு ஸாலடினுக்கு அவர் தூதர்களை அனுப்பினார். ஸாலடின் சண்டையில் தோல்வியடையவில்லை. என்றாலும், மூன்று ஆண்டுகளுக்கு ஓர் உடன்படிக்கை செய்துகொள்வதாகத் தெரிவித்தார். அதன்படி கிறிஸ்தவ யாத்திரிகர்களைப் புனித நாட்டுக்குள் அனுமதிக்க ஸாலடின் ஒப்புக்கொண்டார்.

கிறிஸ்தவர்களுக்காகப் பாலஸ்தீனத்தில் ரிச்சர்டால் அவ்வளவுதான் செய்ய முடிந்தது; ஆகையால் தாம் வந்த வேலை ஒருவகையாக முடிவடைந்ததாக ரிச்சர்டு எண்ணினார். எனவே, அவர் தம்முடைய சேனையோடு பாலஸ்தீனத்தை விட்டு இங்கிலாந்து தேசத்துக்குப் புறப்பட்டார். ஆனால், திரும்பும்போது பெரிய புயல் காற்று ஏற்பட்டு, அவருடைய கப்பல்களையெல்லாம் வழிதவறிச் சிதறி ஓடச் செய்துவிட்டது. அதனால் ரிச்சர்டு வேறுவழி இல்லாமல் ஆஸ்திரியாவின் கடற்கரையை அடைந்தார். அங்கே லியோபால்டு அவரைப் பிடித்துச் சிறையில் அடைத்துவிட்டான். தன்னுடைய மாளிகைகளில் ஒன்றில் ரிச்சர்டை மாதக்கணக்காக அடைத்து வைத்து விட்டான். பிறகு இங்கிலாந்து மக்கள் ஒன்று சேர்ந்து ஒரு பெரிய தொகையைத் திரட்டினார்கள்; அதை லியோபால்டுக்குக் கொடுத்துத் தம் அரசனைச் சிறையில் இருந்து விடுவித்தார்கள்.

கடைசியில் ரிச்சர்டு இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தார். அவர் பாலஸ்தீனத்துக்குப் புறப்பட்டபோது இங்கிலாந்து நாட்டு அரசாட்சியைத் தம்முடைய சகோதரர் ஜான் என்பவரிடம் விட்டுவிட்டுப் போனார்; ஜான் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டார்; ரிச்சர்டு அதனால் மிகவும் கஷ்டப்பட்டு இங்கிலாந்தில் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தினார். பிறகு பிரான்ஸ் தேசத்து அரசர் பிலிப் படை எடுத்தார். அவர் இன்னும் ரிச்சர்டு மீது பொறாமை கொண்டிருந்தார்; பிரான்சிஸ் ரிச்சர்டின் ஆட்சிக்குக்கீழ் இருந்த சில பகுதிகளைப் பிடித்துக் கொண்டார். ஆகையால் பிலிப்புடன் சண்டை செய்ய ரிச்சர்டு படையைத் திரட்டிக்கொண்டு பிரான்சுக்குப்

போக நேரிட்டது. பிரான்சில் ஒரு கோட்டையை ரிச்சர்டு தாக்கிக்கொண்டிருந்தார். அப்போது ஒரு பிரெஞ்சுப் படை வீரன் அவரைச் சுட்டுவிட்டான். ரிச்சர்டு தாம் தாக்கிய கோட்டையைக் கைப்பற்றிவிட்டார்; என்றாலும் காயத்தால் மிகவும் துன்பப்பட்டார். இறக்கும் நிலைமைக்கு வந்துவிட்டார். அவர் தம்முடைய படுக்கைக்குப் பக்கத்தில் தம்மைச் சுட்டுக் காயப்படுத்திய பிரெஞ்சு வீரனை வரவழைத்தார்; தம்மை ஏன் அவன் சுட்டான் என்று கேட்டார்; அதற்கு அவன், "என்னுடைய தந்தையையும், இரண்டு சகோதரர்களையும் ஆங்கிலேயர்கள் கொன்றுவிட்டார்கள்," என்று பதில் சொன்னான். அவனைக் கொன்றுவிடும்படி ரிச்சர்டு கட்டளை இடுவார் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் ரிச்சர்டோ அந்தப் பிரெஞ்சு வீரனை மன்னித்து விட்டார். அவனை விடுதலை செய்யும்படி தம்முடைய வீரர்களுக்குக் கட்டளை இட்டார். சிறிது காலத்திற்குப் பிறகு ரிச்சர்டு மரணமடைந்தார்.

ரிச்சர்டுக்குப் பிறகு இஃனும் சில புனிதப் போர்வீரர்களும் புனித நாட்டில் போர் செய்வதற்காகப் புறப்பட்டுச் சென்றனர். ஆனால் தீவினைப்பயனாகப் படை எடுத்துப்போன தலைவர்களுக்குள்ளேயே ஒற்றுமை இல்லை; பொறாமையும் போட்டியும் உண்டாகி அவர்களுக்கிடையே வெறுப்பை வளர்த்தன. இதனால் அவர்கள் கடைசிவரை ஜெருசலெமைக் கைப்பற்ற முடியாமல் போய்விட்டது. ஆனால் புனிதப் போர்களின் மூலமாக ஐரோப்பிய மக்களுக்குச் சில நன்மைகள் உண்டாயின. அப்போர்வீரர்கள் தம்முடைய நாட்டுக்குத் திரும்பி வந்தபோது, கிழக்கத்திய படிப்பை எல்லாம் கொண்டு வந்தார்கள்: அந்தக் காலத்தில் அரேபியர்களே மருத்துவத்தில் மேம்பட்டு விளங்கினர்கள். புனிதப் போர்வீரர்கள் அவர்களிடமிருந்து மருத்துவத்தைக் கற்றுக்கொண்டு ஐரோப்பாவுக்குத் திரும்பினர்கள். அதன் மூலம் மருத்துவத் தொழில் ஐரோப்பாக்கண்டம் முழுவதும் மேன்மை அடையலாயிற்று.

## 24. அஸ்ஸிஸி நகரத்துப் பிரான்சிஸ்
## (1182-1224)

பிரான்சிஸ் இத்தாலி தேசத்தில் அஸ்ஸிஸி என்ற பட்டணத்தில் பிறந்தவர். அஸ்ஸிஸி என்ற பட்டணத்தில் பிறந்ததால் அவருக்கு அஸ்ஸிஸி நகரத்துப் பிரான்சிஸ் என்ற பெயர் ஏற்பட்டது. அவருடைய தகப்பனுர் ஒரு துணி வியாபாரி; பெரிய பணக்காரர். தங்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது என்பதில் பிரான்சிஸின் தகப்பனுரும் தாயாரும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். பிரான்சிஸ் அழகாக இருந்தார். அதோடு எப்பொழுதும் சிரித்துக் கொண்டு சந்தோஷமாக இருந்தார். எல்லாச் சிறுவர்களுக்கும் பிரான்சிஸ் என்ருலே உயிர். அவர்கள் எல்லோருக்கும் பிரான்சிஸ் தான் தலைவராகவும் வழிகாட்டியாகவும் இருந்தார்.

ஒரு நாள் பிரான்சிஸ் நோயால் படுத்தார். நீண்ட நாள் வரை நோய் குறையவே இல்லை. பிரான்சிஸ் விரைவில் செத்துப் சோய்விடுவாரோ என்று அவருடைய தாயாரும் தகப்பனுரும் பயந்தார்கள். கடைசியில் அவர் பிழைத்துக் கொண்டார். நோய் சிறிது சிறிதாகக் குணம் அடையத் தொடங்கியது. அவர் அப்போது கூட மெலிந்தவராகவே இருந்தார். அதனுல் நீண்ட காலம் படுக்கையிலேயே கிடந்தார். கடைசியில் உடம்புக்குப் பலம் வந்தது. நோயாகப் படுக்கையில் கிடந்தபோது அவர் தம்முடைய கடந்தகால வாழ்க்கையைப் பற்றி எல்லாம் எண்ணிப் பார்த்தார். கேளிக்கையிலேயே தம்முடைய காலத்தை எல்லாம் கழித்துவிட்டதாக அவர் உணர்ந்தார். கடவுளைப் பற்றித் தாம் நினைக்காததற்காகக் கடவுள் பச்சாதாபப் பட்டுக் கொண்டிருப்பார் என்று அவர் எண்ணினுர்.

உடம்பு நன்ருகத் தேறியதும் அவர் தம் வழக்கமான வாழ்க்கையை மேற்கொண்டார். அப்போது அவரிடம் முன்பு இல்லாத மாறுதல் ஏற்பட்டிருப்பதை அவருடைய நண்பர்கள் கண்டார்கள். முன்பு போல அவர் விளையாடவில்லை.

எதையும் தீர யோசித்துப் பார்த்தார். அனுவசிய விளையாட்டுக்களில் அவர் மனம் செல்லவே இல்லை. அஸ்ஸிஸி பட்டணத்தில் அநேக குஷ்டரோகிகள் இருந்தார்கள். பிச்சைக்காரர்களுக்குள்ளேயே அவர்கள் தான் மிக்க ஏழைகள். அவர்களைக் கண்டு ஒவ்வொருவரும் பயப்பட்டார்கள். அந்தக் காலத்தில் அங்கு ஒரு சட்டம் இருந்தது. அதன்படி ஒவ்வொரு குஷ்டரோகியும் ஒரு மணியைக் கையில் வைத்துக் கொண்டு இருக்க வேண்டும்; எப்பொழுது எங்கே போனுலும் அந்த மணியை அடித்துக் கொண்டே போகவேண்டும். அந்த மணிச் சத்தத்தைக் கேட்டவுடன் மக்கள் வழியிலிருந்து விலகி ஓடிவிடுவார்கள்!

பிரான்சிஸுக்கு இருபத்தைந்து வயது ஆனது. ஒரு நாள் அவர் தம் தகப்பனுருக்குப் பதிலாகப் போய்த் துணிகளை விற்ருர்; பிறகு குதிரைமேல் ஏறி வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். அப்போது வழி ஓரத்தில் ஒரு குஷ்டரோகி பிச்சை கேட்டுக் கொண்டு இருப்பதைக் கண்டார். அவனுக்குப் போடக் காசு எடுப்பதற்காகக் கையைச் சட்டைப் பைக்குள் நுழைத்தார். ஆனுல் திடீரென்று அவருக்கு மனதில் பல எண்ணங்கள் தோன்றின. அந்தக் குஷ்டரோகி துன்பத்தாலும், தனிமை உணர்ச்சியாலும் எவ்வளவு கஷ்டப் படுவான். இப்படித்தான் ஒரு குஷ்டரோகி மிகவும் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தான். அவன் ஒரு நாள் இயேசு கிறிஸ்துவிடம் வந்தான். தம்முடைய கையை நீட்டி அவனைத் தொட்டார். உடனே அவனுடைய குஷ்டம் நீங்கிவிட்டது. இதை எல்லாம் பிரான்சிஸ் நினைத்துப் பார்த்தார். அவருடைய பயங் கொள்ளித்தனம் அவருக்கே வெட்கத்தைக் கொடுத்தது. உடனே குதிரையில் இருந்து கீழே தாவிக் குதித்தார்; குஷ்டரோகியிடம் போனுர்; அவனுடைய கையில் காசை வைத்துவிட்டு அவனுக்கு முத்தம் கொடுத்தார். அதன் பிறகு பிரான்சிஸ் அடிக்கடி குஷ்டரோகிகளின் வாசஸ்தலங்களுக்குப் போவார். அவர்களுக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் செய்வார். இதனுல் விரைவில் பிரான்சிஸுக்குக் குஷ்டரோகிகள் எல்லோரும் நண்பர்கள் ஆனுர்கள்.

சிறிது காலத்திற்குப் பிறகு ஒரு நாள் பிரான்சிஸ் குதிரையின் மேல் சவாரி செய்துகொண்டு போனார். வழியில் ஒரு மாதா கோவில் அவருக்குத் தென்பட்டது; அதைக் கவனிப்பவர்கள் ஒருவரும் இல்லை; அதனால் அது பாழாகி இடிந்துகொண்டு இருந்தது. அதை இடிந்து விழாமல் புனர் நிர்மாணம் செய்தால், அது கடவுளுக்கு மிகவும் சந்தோஷத்தைக் கொடுக்கும் என்று பிரான்சிஸ் நினைத்தார்; ஆகையால் தம்முடைய தந்தையாரைக் கேட்டுப் பணம் வாங்கி வருவதற்காகக் குதிரையை வேகமாகச் செலுத்தினார். ஆனால், பிரான்சிஸ் வீட்டை அடைந்தபோது, அவர் தகப்பனார் எங்கோ வெளியில் போயிருந்தார். பிரான்சிஸ் இருந்து இருந்து பார்த்தார்; தகப்பனார் திரும்பவே இல்லை; பிரான்சிஸ் தம் பொறுமையை இழந்தார். உடனே ஓர் அழகான வெல்வெட் துணியை எடுத்துக்கொண்டு போனார்; கடைத் தெருவில் அதை விற்றார்; கிடைத்த பணத்தை எடுத்துக் கொண்டுபோய்க் கோவில் குருவிடம் கொடுத்துப் புனர் நிர்மாணம் செய்யச் சொன்னார்.

பிரான்சிஸின் தகப்பனார் வீட்டுக்குத் திரும்பி வந்தார்; மகன் செய்த காரியத்தை அறிந்தார்; அவருக்குச் சினம் மூண்டது; முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. அவர் பிரான்சிஸைப் பார்த்து, "நீ ஒரு திருடன்; நீ என் மகன் இல்லை; உடனே வீட்டை விட்டு ஓடு!" என்று சொன்னார். பிரான்சிஸ் வீட்டை விட்டு வெளியேறினார்; போகும்போது அவர் தகப்பனார் அவருக்கு ஒரு சல்லிக் காசு கூடத் தரவில்லை.

ஆகையால், பிரான்சிஸ் பிச்சை எடுத்து வாழவேண்டியவர் ஆனார். அவரிடம் விலை உயர்ந்த ஆடைகள்கூட இல்லை. மற்றப் பிச்சைக்காரர்களைப் போலவே அவரும் அழுக்கேறிய கந்தைகளை உடுத்திக் கொண்டார். அதுமுதல் கடைசி வரை அவர் வாழ்க்கை பிச்சைக்கார வாழ்க்கையாகவே மாறி விட்டது. நினைத்த இடத்தில் படுத்து உறங்கினார்; மக்கள் கொடுத்த பிச்சையை வாங்கிச் சாப்பிட்டார். பிரான்சிஸ் மற்றப் பிச்சைக்காரர்களை எல்லாம் தம் நண்பர்களாக ஆக்கிக் கொண்டார். தமக்குப் பிச்சையாகக் கிடைத்த உணவை

11

யும், பணத்தையும் அவர்களோடு பங்கிட்டுக் கொண்டார். அவர் எங்கே போனாலும் கடவுளைப் பற்றிப் பிரச்சாரம் செய்வார். ஏழைகள் கந்தையை உடுத்திக் கொண்டு அன்ன ஆகாரம் இல்லாமல் இருந்தாலும் கடவுள் அவர்கள் மீது கருணை காட்டுகிறார் என்றும், அவர்களுக்கு உதவி செய்கிறார் என்றும் அவர் கூறினார். இப்பொழுது பிரான்சிஸ் தம்முடைய வாழ்க்கை முழுவதையும் கடவுளுக்கே அர்ப்பணம் செய்துவிட்டார். ஆகையால் அவர் எப்பொழுதையும்விட இப்பொழுது மிகவும் சந்தோஷமாக இருந்தார். அவர் தமக்கென்று எதையுமே வைத்துக் கொள்ளவில்லை. இயேசு கிறிஸ்து ஒருமுறை சொன்ன கருத்து அவருடைய நினைவுக்கு



வந்தது. "குள்ள நரிகளுக்குக் குகைகள் உள்ளன; வானத்துப் பட்சி ஜாதிகளுக்குக் கூடுகள் இருக்கின்றன; ஆனால் ஆண்டவன் மகனுக்கோ தலைவைத்துப் படுக்கக்கூட இடம் இல்லை," என்று இயேசு ஒரு தடவை சொல்லி உள்ளார். பிரான்சிஸ் இத்தாலியில் அங்கும் இங்குமாகச் சுற்றிக் கொண்டே இருந்தார். அப்பொழுது எல்லாம் வெகு சந்தோஷத்தோடு பாடிக்கொண்டு போவார். இயேசு நடத்திய வாழ்க்கையைப் போலவே தாம் வாழ்வதாக நினைத்து, நினைத்து மகிழ்ச்சி அடைந்தார்.

அவருடைய வாழ்க்கையைப் பற்றிப் பல கதைகள் சொல்லப்படுகின்றன. எல்லாப் பொருள்களும் ஆண்டவன் படைப்புக்கள் என்றும், அவைகளில் எல்லாம் ஆண்டவன்

அம்சம் இருக்கிறது என்றும் அவர் நினைத்தார். ஒருமுறை பிரான்சிஸ் ஒரு கோவிலின் படிக்கட்டில் நின்றுகொண்டு மத போதனை செய்தார். அப்பொழுது கூரையில் கூடுகட்டிக் கொண்டு வாசம் செய்த பல பறவைகள் போட்ட கூச்சலால் பிரான்சிஸின் போதனை ஒருவருடைய காதிலும் விழவில்லை. ஆகையால் அவர் போதனை செய்வதை நிறுத்திவிட்டுப் பறவைகளைப் பார்த்து, "சகோதரப் பறவைகளே, அமைதியாக இருங்கள்; நான் ஆண்டவனைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறேன்," என்று சொன்னார். உடனே எல்லாப் பறவைகளும் சத்தம் செய்யாமல் அடங்கிவிட்டன; பிரான்சிஸ் தொடர்ந்து பிரசங்கம் செய்தார். இப்படி அவரைப் பற்றி ஒரு கதை சொல்லப்படுகிறது.

இன்னொரு கதையும் அவரைப் பற்றிப் பேசப்படுகிறது. அவர் பிரயாணம் செய்துகொண்டே ஒரு கிராமத்தை அடைந்தார். அந்தக் கிராமத்துக்குப் பக்கத்தில் ஒரு காடு இருந்தது. அதில் ஓநாய் ஒன்று வசித்து வந்தது. அது கோழிகளையும், ஆடுகளையும் சில சமயங்களில் குழந்தைகளையும் கூடத் தூக்கிக்கொண்டு போய்விட்டது. இதனால் கிராமவாசிகள் எல்லோரும் பயத்தால் நடுங்கிக்கொண்டு இருந்தார்கள். ஆனால், அவர்கள் இனிமேல் பயப்படவேண்டியதில்லை என்று பிரான்சிஸ் சொன்னார்; அவர் காட்டுக்குப் போய் ஓநாயைத் தேடினார். ஓநாய் பிரான்சிஸைப் பார்த்தும் கூட அவரைத் தாக்கவில்லை. அவரிடம் மெதுவாக நடந்து வந்து அவருடைய பாதங்களில் விழுந்து படுத்துக்கொண்டது. பிரான்சிஸ் கிராமத்திற்குத் திரும்பி வந்தார். ஓநாய் அவருக்குப் பின்னாலேயே வந்து கொண்டிருந்தது. பிரான்சிஸ் கிராம மக்களைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னார், "ஓநாய்க்குப் பசி எடுக்கிறது; அதற்கு வேறு ஆகாரம் இல்லை; அதனால் தான் அது கோழிகளையும், ஆடுகளையும், குழந்தைகளையும் எடுத்துக்கொண்டு ஓடுகிறது. ஒவ்வொரு நாளும் நீங்கள் அதற்கு ஏதாவது ஆகாரம் கொடுங்கள். அது உங்களுக்கு எந்த விதமான தொல்லையும் கொடுக்காது," என்று சொன்னார். கிராமவாசிகள் அப்படியே ஓநாய்க்கு ஆகாரம் கொடுக்க ஒப்புக்கொண்டார்கள். அதுமுதல்

ஓநாய் தன்னுடைய கொடிய குணத்தை விட்டுவிட்டது. சிறுசிறு குழந்தைகளுங்கூட அதனுடன் சேர்ந்து விளையாடினார்கள். அதன் முதுகின்மேல் ஏறிக்கொண்டு சவாரி செய்தார்கள்.

நாள் ஆக ஆகப் பிரான்சிஸுக்கு ஒரு கூட்டமும் ஏற்பட்டது. சிலபேர் அவரிடம் வந்தார்கள். "எங்களையும் உங்களோடு சேர்த்துக் கொள்ளுங்கள்" என்று கேட்டுக்கொண்டார்கள். அவர்களைப் பிரான்சிஸ் தம்முடன் சேர்த்துக் கொண்டார். அவர்களுக்குப் "பிரியர்கள்" அல்லது "சகோதரர்கள்" என்று பெயர். அவர்கள் எல்லோரும் பிரான்சிஸ் உடுத்தியது போலவே உடுத்தினார்கள்; அவரைப் போலவே வாழ்க்கை நடத்தினார்கள்; பல இடங்களுக்குப் பிரயாணம் செய்தார்கள்; கடவுளைப் பற்றிய பிரசங்கங்கள் செய்தார்கள்; ஏழை மக்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தார்கள்; அவர்களில் சிலபேர் வைத்தியத்தில் திறமைசாலிகள் ஆனார்கள். பிச்சைக்காரர்களின் புண்களையும், வேறு நோய்களையும் குணப்படுத்தினார்கள். பிரான்சிஸைப் போலவே அவர்களும் மிகுந்த ஏழைகள். பணம் எதுவும் அவர்களிடம் இல்லை; மக்கள் கொடுத்த உணவைக் கொண்டும், பணத்தைக் கொண்டுமே வாழ்க்கை நடத்தினார்கள்.

பிரான்சிஸ் தம்முடைய குழுவினருக்குத் தேவையான சட்ட திட்டங்களை உண்டாக்கினார். அந்தச் சட்ட திட்டங்களுக்குச் "சகோதரர்கள்" எல்லோரும் அடங்கி நடந்தார்கள். பிரான்சிஸின் குழு நாளுக்கு நாள் வளர்ந்து பெரியதாகி விட்டது. அப்போது பிரான்சிஸ் ரோம் நகருக்குப் போனார்; போப் ஆண்டவரைக் கண்டு பேசினார். தம்முடைய குழுவைப் போப் ஆண்டவர் ஆசீர்வதித்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். போப் அவர்களை ஆசீர்வதித்தார்; அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்யுமாறு கிறிஸ்தவர்கள் எல்லோரையும் கேட்டுக்கொண்டார். பிரான்சிஸின் குழுவுக்குப் "பிரான்சிஸ்கன் துறவிகள்" என்றும் ஒரு பெயர் உண்டானது. அவர்கள் இயேசுவின் சீடர்களைப்போலவே இரண்டு இரண்டு பேராகச் சேர்ந்து ஐரோப்பா முழுவதும் பிரயாணம் செய்தார்கள். சில பேர்

கடலைத் தாண்டி இங்கிலாந்தையும் அடைந்தார்கள். அவர்கள் எங்குச் சென்றாலும் மக்கள் விரும்பி அவர்களை வரவேற்றார்கள்; அவர்களுடைய உரைகளை ஆவலுடன் கேட்டார்கள். பிரான்சிஸ் ஒருமுறை புனித தேசத்துக்கும் போனதாக ஒரு கதை வழங்குகிறது. அங்கு அவர் ஸாலடினைக் கண்டு போதனை செய்தார்; அந்த அரசனை முஸ்லீம் மதத்திலிருந்து கிறிஸ்தவ மதத்துக்கு மாற்றுவதற்கு முயற்சி செய்தார் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் இந்தக் கதை எவ்வளவு தூரம் உண்மையானது என்பது தெரியவில்லை.

பிரான்சிஸ் இளம் வயதிலேயே மாண்டுபோனார். உழைப்பால் அவரது உடல் தேய்ந்துவிட்டதுதான் அதற்குக் காரணம். அவருக்குப் பின்னால் அவரது குழு நல்ல முறையில் வேலை செய்தது. அதில் இருந்தவர்கள் எல்லோரும் பிரான்சிஸைப்போல அவ்வளவு நல்லவர்கள் என்று சொல்ல முடியாது. இருந்தாலும் அவர்கள் ஐரோப்பாவில் வாழ்ந்து வந்த ஏழை மக்களுக்குப் பல உதவிகளைச் செய்திருக்கிறார்கள்.

## 25. ஹங்கேரி நாட்டு எலிசபெத் அடிகள்
## (கி.பி. 1207-1231)

ஹங்கேரி நாட்டு எலிசபெத் அடிகள் சிறுவயதிலேயே, அதாவது இருபத்து நான்காவது வயதிலேயே இறந்து போனார். இருந்தாலும் அவருடைய பெயரோ இன்றைக்கும் நிலைத்து நிற்கிறது. அவர் ஓர் அரசருடைய மகள். அவருடைய தகப்பனார் ஹங்கேரி தேசத்தை ஆண்டுவந்த இரண்டாம் ஆண்ட்ரு என்பவர். ஹங்கேரி தேசம் ஐரோப்பாக் கண்டத்தில் இருக்கிறது. எலிசபெத் இளமையிலிருந்தே துறவு வாழ்க்கையை மேற்கொண்டவர். நான்காவது வயதிலேயே அவருக்கு நிச்சயதார்த்தம் செய்யப்பட்டது. ஜெர்மனி தேசத்து அரச குமாரர் ஒருவர் அவருக்கு எதிர்காலக் கணவராகத் தேர்ந்

தெடுக்கப்பட்டார். நிச்சயதார்த்தம் முடிந்தவுடன், பெண் தன்னுடைய வருங்காலக் கணவன் வீட்டுக்குப்போய் அங்கேயே வளர்ந்து வரவேண்டும். இது அந்தக் காலத்திய வழக்கம். அந்த வழக்கத்தின்படியே எலிசபெத்தும் ஜெர்மனி தேசத்துக்குப் போய் வளர்ந்து வந்தார்.

இளமையிலிருந்தே எலிசபெத்துக்கு இயேசு கிறிஸ்துவிடம் மிகுந்த ஈடுபாடு உண்டு. அவரோடேயே வாழ்க்கை நடத்தவேண்டும் என்று எலிசபெத் முடிவு செய்துகொண்டார். அரசகுமாரி என்ற தகுதிக்கு ஏற்ற ஆடம்பரங்களையும் படாடோபங்களையும் எலிசபெத் கொஞ்சமும் விரும்பவில்லை. தான் ஆண்டவனுடைய குழந்தை, அவனுடைய வேலைக்காரி ஆகிய இந்த நினைவுகளே அவருடைய உள்ளத்தில் இருந்தன. அவருக்குப் பதினுன்கு வயது முடிந்தது. எனவே, திருமணத்துக்கான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. திருமண நாளுக்கு முன்னுல் ஆண்டவனுடைய ஆசியைப் பெறுவதற்காக எலிசபெத் கோவிலுக்குப் புறப்பட்டார்; அரச குமாரிக்குரிய ஆடை ஆபரணங்களோடும் மரியாதைகளோடும் எலிசபெத் போனுர்; பல பிரபுக்களும் சீமாட்டிகளும் அவரைத் தொடர்ந்து போனுர்கள். ஆனுல் கோவிலுக்குப் போன உடனே, எலிசபெத் தாம் தலையில் வைத்துக்கொண்டிருந்த கிரீடத்தை எடுத்துவிட்டார். சிலுவையில் தொங்கிக்கொண்டிருந்த கிறிஸ்துவின் சிலைக்கு முன்னுல் மண்டியிட்டுத் தொழுதார். அவருடைய எதிர்கால மாமனுர் இதற்காக அவரைத் திட்டினுர். தம் மகனுடைய மனைவி ஆவதற்கு உரிய முறையில் எலிசபெத் நடந்து கொள்ளவில்லை என்று அவர் சொன்னுர். எலிசபெத் தாழ்மையோடு அவரை நோக்கி, "மாமா, தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள். அங்கே கிறிஸ்துவின் உருவம் நின்றுகொண்டிருக்கிறது. என் தலையில் பொன்னுலும் முத்துக்களாலும் செய்யப்பட்ட கிரீடத்தை வைத்துக்கொண்டு அந்த உருவத்தைக் கடந்து செல்ல இயலாது," என்று சொன்னுர்.

எலிசபெத் திருமணத்தின்போது மிக அழகாகக் காட்சி அளித்தார்; ஒரு தேவதை போலவே இருந்தார். அவருக்கு நன்குகத் தெரிந்தவர் ஒருவர் அவருடைய அழகைப் பற்றிப்

பின்வருமாறு எழுதியுள்ளார். "அவர் உடல் அழகில் எந்த விதக் குறைபாடும் இல்லை. கவர்ச்சி மிகுந்த தோற்றம். சிறிது மஞ்சள் கலந்த சிவப்பு நிறம். அவர் கடவுள் வணக்கத்தில் ஆழ்ந்த ஈடுபாடு காட்டினார். ஏழைகள் எல்லோருக்கும் வேண்டிய உதவிகளைச் செய்தார்." துன்பத்தில் அவதிப் பட்ட மக்கள் எல்லோருக்கும் எலிசபெத் உதவி செய்தார். ஏழைகளுக்குத் தேவையானது எது என்று கண்டுபிடித்து அந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதில் எலிசபெத் தம் காலத்தையெல்லாம் செலவு செய்தார். அவர் எல்லோருக்கும் பண உதவி செய்யமாட்டார். வேலை செய்து பிழைக்க ஆசைப்படுகின்ற ஏழைகளுக்கு அவர்கள் தங்களுக்குத் தேவை என்று கருதுகிற ஆயுதங்களை வாங்கிக் கொடுப்பார்; பசியால் வருந்துகின்ற ஏழைகளுக்கு ரொட்டிகளை எடுத்துக் கொண்டுபோய் கொடுப்பார். எலிசபெத் அளவுக்குமேல் தாராளமாக இருக்கிறார் என்றும், ஏழைகளுக்கு உணவு வாங்கிக் கொடுக்க நிறையச் செலவு செய்கிறார் என்றும் அவருடைய கணவர் சில சமயம் திட்டுவது உண்டு. பின் வருமாறு ஒரு கதை கூறப்படுகிறது.

ஒருநாள் எலிசபெத் பட்டணத்தில் உள்ள ஏழை மக்களுக்குக் கொடுப்பதற்காகக் கூடை நிறைய ரொட்டிகளை அடுக்கிக் கொண்டார். அதை உடையால் மறைத்துக் கொண்டு புறப்பட்டார். வழியில் அவருடைய கணவர் வந்துவிட்டார். தாம் கொண்டுபோகும் ரொட்டிக் கூடையைக் கணவர் கண்டுவிட்டால் மிகவும் சினந்து கொள்வாரே என்ற அச்சம் எலிசபெத்துக்கு உண்டானது. கணவர் எலிசபெத்திடம் எடுத்துக்கொண்டு போவது என்ன என்று கேட்டார். அவர் பதில் சொல்வதற்கு முன்னால், கணவர் கூடையின்மேல் மூடப்பட்டிருந்த ஆடையை நீக்கினார். என்ன ஆச்சரியம்! அரண்மனையிலிருந்து எலிசபெத் கொண்டுவரும்போது அந்தக் கூடை நிறைய ரொட்டிகள் இருந்தன. ஆனால் இப்போதோ கூடை நிறைய ரோஜாப் புஷ்பங்கள் காட்சி அளித்தன! இவ்விதமாகக் கணவருடைய கோபத்திலிருந்து ஆண்டவன் எலிசபெத்தைக் காப்பாற்றினார்!

எலிசபெத்துக்கு இருபத்திரண்டு வயது ஆனபோது அவருடைய கணவர் சண்டை செய்வதற்காகப் போனார். வழியில் நோய்வாய்ப்பட்டு அவர் இறந்துவிட்டார். எலிசபெத் விதவை ஆனார். அவருக்கு மூன்று குழந்தைகள் இருந்தன. அவர் கணவருக்குப் பிறகு, கணவரின் சகோதரன் தேசத்தின் அரசன் ஆனான். அவன் எலிசபெத்தை மிகவும்



வெறுத்தான். எலிசபெத், குடும்பச் செல்வத்தை எல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்து அழிக்கிறார் என்று அவன் எண்ணினான்; அதனால் எலிசபெத்தை வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். எலிசபெத் எதையும் எடுத்துக்கொண்டுபோக அவன் அனுமதிக்கவில்லை. அவரும் அவர் குழந்தைகளும்

உயிர் வாழ எவ்வளவு பணம் தேவையோ அந்த அளவே கொடுத்துத் துரத்தினான். சில மாதங்கள் வரை எலிசபெத் ஓர் ஏழைப் பெண்மணியைப் போலவே வாழ்க்கை நடத்தினார். அவருடைய மாமனார் ஒருவர் பிஷப்பாக இருந்தார். அவர் எலிசபெத்தின் மீது இரக்கம் கொண்டார். எலிசபெத்தைத் தம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டார். நாள் ஆக ஆக எலிசபெத்தின் மைத்துனன் தான் செய்த தப்புக்காக மிகவும் வருந்தினான். தன் அண்ணியாரை வீட்டை விட்டுத் துரத்தியது கொடிய செயல் என்று எண்ணினான். மறுபடியும் அரண்மனைக்கே வந்து வாழ்க்கை நடத்துமாறு அவன் எலிசபெத்தை வேண்டிக் கொண்டான். ஆனால், எலிசபெத் அரண்மனைக்குத் திரும்பிச்செல்ல மறுத்துவிட்டார். அரண்மனையில் ஆடம்பரமாக வாழ்க்கை நடத்த எலிசபெத் விரும்பவில்லை. மார்பர்க் என்ற ஒரு சிறிய நகரத்தில் நிலையாகத் தங்கினார்; அங்கேயே கடைசிவரை ஓர் அமைதியான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தார்.

எலிசபெத் ஏழைகளுக்கு உதவுவதிலேயே தம் காலம் முழுவதையும் செலவிட்டார். அவர் நோயாளிகளுக்கும் பணிவிடை செய்தார். அவரிடம் இப்போது பணம் இல்லை. ஆகையால் அவர் தம்மிடம் இருந்த விலைமிக்க ஆடை ஆபரணங்கள் எல்லாவற்றையும் விற்று ஏழைகளுக்கு உதவிசெய்தார். ஓய்ந்த நேரத்தில் ஆட்டு ரோமங்களை நூற்றும் பொருளீட்டி ஏழைகளுக்காகச் செலவு செய்தார். நோயாளிகளின் காயங்களுக்கும், புண்களுக்கும் கட்டுப்போட ஜன்னல் திரைச் சீலைகளை எல்லாம் கிழித்துக் கொண்டார்; குளிரால் வருந்திய ஏழைகளுக்குத் தம்மிடம் இருந்த போர்வைகளை எல்லாம் கொடுத்துவிட்டார். மிகவும் கொடிய நோயை உடைய நோயாளிகள் எல்லோரும் உதவிக்காக எலிசபெத்திடம் வந்தார்கள். எலிசபெத் தம்முடைய சொந்தக் கைகளாலேயே அவர்களுடைய புண்களை எல்லாம் கழுவிக் கட்டுக்கள் கட்டினார். பெருவியாதி பிடித்தவர்களுக்குக்கூட அவர் பணிவிடை செய்தார்.

இப்படி முரட்டு வாழ்க்கை வாழ்ந்த காரணத்தால், அவர் உடம்பு தேய்ந்துபோனது; தம்முடைய இருபத்து நான்கா

